சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்

தமிழ்த் தாய் 67 - வெளியீடு

ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றிய

# திருப்பெருந்துறைப் புராணம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

International Institute of Tamil Studies



"அறிவுச் செல்வங்கள் அனைத்தையும்
தமிழுக்குக் கொண்டுவர வேண்டும்.
இனிவரும் நூற்றாண்டுகளுக்கும்
அருந்தமிழை ஆற்றல் படுத்த வேண்டும்"

- மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்

புரட்சித் தலைவி

**அம்மா அவர்கள்**

ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள்

இயற்றிய

# திருப்பெருந்துறைப் புராணம்

சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்

தமிழ்த் தாய் 67 - வெளியீடு

பதிப்பாசிரியர்

முனைவர் **கோ.விசயராகவன்**

எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.பி.ஏ.,பி.எட்.,பிஎச்.டி

இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.



**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

தரமணி, சென்னை - 600 113

# நூல் விவரக் குறிப்பு

| | |
|---|---|
| நூல் தலைப்பு | : திருப்பெருந்துறைப் புராணம் |
| நூல் ஆசிரியர் | : ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் |
| வெளியீட்டாளரும் பதிப்புரிமையும் | : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை - 600 113. |
| தொலைபேசி எண் | : 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : 859 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : 2015 : முதற்பதிப்பு : |
| பயன்படுத்திய தாள் | : 16 கிகி டி.என்.பி.எல்.வெள்ளை |
| நூலின் அளவு | : 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : 11 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : 208 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : 1200 |
| விலை | : ரூ.130 (ரூபாய் நூற்று முப்பது மட்டும்) |
| ISBN | : 978-93-85165-14-6 |
| அச்சகம் | : ராஜ் எண்டர்பிரைஸஸ்<br>திருவல்லிக்கேணி<br>சென்னை - 600 005. |

முனைவர் **கோ.விசயராகவன்** எம்.ஏ., எம்.ஃபில்.,எம்.பி.ஏ.,பி.எட்.,பி எச்.டி
**இயக்குநர்**
**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**சென்னை 600 113**

# அணிந்துரை

பழங்கால அரியநூல்களையும் சுவடிகளையும் பாதுகாக்கும் வகையில் 2014ஆம் ஆண்டு நிறுவனத்தில் 34 **இலட்சம் மதிப்பீட்டில் சுவடிகள் பாதுகாப்பு மய்யம் மாண்புமிகு மக்கள் முதல்வர் புரட்சித்தலைவி அம்மா அவர்களால் தொடங்கப்பட்டது.** அவ்வகையில் நாடெங்கினும் உள்ள அரிய நூல்களை, சுவடிகளைத் திரட்டும் பணி தொடங்கப்பட்டு, கண்டறியப்பட்டுள்ள நூல்களைத் தமிழ்த்தாய் 67 - பெருவிழா, பிப்ரவரி 2015இல் வெளியிடும் திட்டத்தின் கீழ், **தாரண ஆண்டு சித்திரைத் திங்கள்** வெளிவந்துள்ள இந்நூல் இப்பொழுது மீட்டுருவாக்கம் செய்யப்பெற்று வெளியிடப்படுகிறது.

தமிழில் தோன்றிய சிற்றிலக்கிய வகைகளுள் தலபுராணங்களும் அடங்கும். தமிழகத்தில் புனிதமடைந்து தண்டமிழுடன் பக்தியையும் வளர்த்தத் திருப்பதிகள் பல. அவற்றுள் ஒன்றுதான் திருப்பெருந்துறை என்னும் திருப்பதி. நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசகப் பெருமானுக்கு இறையருள் புரிந்த நற்றலம். அவருக்குக் காலைக் காட்டி ஆட்கொண்ட சோலைத்தலம். நிலவளமும் நீர்வளமும் மனவளமும் மக்கள் பெருவளமும் நிறைந்த மாபெருந்தலம். சிவன் தேவியாடு உறையுந் திருத்தலம். இங்குள்ள சிவலிங்கம் தானாகத் தோன்றிய சுயம்புலிங்கம். மிகச் சிறிய லிங்கம். இத்தலத்தின் பெருமையை உரைப்பதுவே **திருப்பெருந்துறைப் புராணம்** என்னும் இந்நூல். அரிய நூலாகிய இத்தல புராணம் ஒளியச்சு மூலம் ஆக்கம் பெற்று புத்துயிர் பெற்றுள்ளது.

இப்புராணத்தைச் **திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள்** இயற்றியுள்ளார். பின்னர் அவருடைய மாணாக்கரான **உ.வே.சாமிநாதய்யர்** அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது. கடவுள் வாழ்த்து, அவையடக்கம்,

சிறப்புப்பாயிரம், திருநாட்டுப் படலம் என வளர்ந்து நைமிசமுனிவர் பெருந்துறை அடைந்து பூசித்த தலம் ஈறாக 35 படலங்களைக் கொண்டுள்ளது. மொத்தம் 1656 செய்யுட்களையுடையது. பக்திநலம் சொட்டச் சொட்டப் பாடும் சுவைமிகுந்த பாடல்களைக் கொண்டுள்ளது. புராண ஆசிரியர் எனப் போற்றப்படும் திரிசிதபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய பல தலபுராணங்களுள் இதுவுமொன்று. பக்திச்சுவையும் தமிழ்ச்சுவையும் பெருகித் தோன்றுவது..

தமிழறிஞர்களின் தமிழ்த் தொண்டினை எப்போதும் பாராட்டுவதில் முதன்மையானவர் **மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா** அவர்கள் ஆவார். மாண்புமிகு அம்மா அவர்கள் தமிழ் மீதும் தமிழர் மீதும் தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் **மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா** அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி** அவர்களுக்கு நன்றி.

தமிழ் வளர்ச்சிப் பணிகளில் ஆர்வத்தோடு நாட்டம் செலுத்தித் தமிழ்த் தொண்டாற்றிவரும் **தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம்** இ.ஆ.ப. அவர்களுக்கும் இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறப்பான முறையில் மறு அச்சுப் பெற முனைந்து உழைத்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அனைத்துப் பணியாளர்களுக்கும் அச்சகத்தார்க்கும் என் நன்றி.

**இயக்குநர்**

உ

கணபதி துணை.

# திருப்பெருந்துறைப்புராணம்.

திருக்கைலாயபரம்பரைத்
திருவாவடுதுறையாதீனத்து
மஹாவித்துவானாகிய
திரிசிரபுரம்
ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்
இயற்றியது.

இது
மேற்படி ஆதீனத்து
ஸ்ரீ-ல-ஸ்ரீ
அம்பலவாணதேசிகரவர்கள்
ஆஜ்ஞையின்படி
திருவிடைமருதூர்க்கட்டளை
ஸ்ரீ காசிநாததம்பிரானவர்கள்செய்த
பொருளுதவியைக்கொண்டு
இந்நூலாசிரியர் மாணாக்கரும்
கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய
உத்தமதானபுரம்
வே. சாமிநாதையரால்
பரிசோதித்து,

சென்னை:
வெ. நா. ஜூபிலி அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

1892.

# சூசிபத்திரம்.

உ

கணபதி துணை.

# திருப்பெருந்துறைப்புராணம்.

## கடவுள்வாழ்த்து.

### விநாயகர் காப்பு.

*மாமேவு புயனிறத்து மோட்டாமை முதுகொருகை வாங்கித் தற்குப்*
*பாமேவு வயிறிரண்டேன் றருச்சிப்பார் கொள்ளாத படியென் பாதி*
*தாமேவு தந்தையகன் மார்பணிந்து புகழொன்றே தான்கைக் கொண்டு*
*காமேவு கருணையின்வாழ் களிற்றுமுகப் பெருமானை யுய்ந்து வாழ்வாம்.* (க)

### வெயிலுவந்தவிநாயகக்கடவுள்.

*இலவுவந்த செவ்வாயெம் பெருமாட்டி பார்வையொடு மிருக்கு முன்னூல்*
*சொலவுவந்த வெம்பெருமான் பார்வையுமேற் றமர்சிறப்புத் தோற்றி யாங்குப்*
*பலவுவந்த பொழில்வளஞ்சால் குருந்துறையும் பெருந்துறையிற் பண்பு கூரு*
*நிலவுவந்த முடியினெடும் வெயிலுவந்த மெய்க்களிற்றை நினைந்து வாழ்வாம்.* (உ)

### சோக்கவிநாயகக்கடவுள்.

*தக்கவிநா யகன்மறையுட் பொருடேர்ந்துய்க் கிடுநிபுண ருங்கு மாமே*
*கக்கவிநா யகன்மகச்சா லையினெனுந்த நிசிமுதற் கணிப்பி லோர்கள்*
*புக்கவிநா யகனமர்ந்து முதலானு யென்றெடுத்துப் போற்ற மேய*
*சொக்கவிநா யகன்புகலு மிக்கவிநா யகனுயிற் றன்னா றென்னே.* (௩)

### ஆன்மநாதசுவாமி.

*வார்பூத்த வண்டகம்பாய் முண்டகஞ்சார் நான்முகனுங் கௌத்து வப்போர்த்*
*தார்பூத்த வோர்பானு மார்பானுங் கைலாய சைலத் தானு*
*நார்பூத்த துதியெடுப்பக் குருந்துறையும் பெருந்துறையி னுய்ந்து மேவி*
*யார்பூத்த வருள்கொழிக்கு மான்மநா தக்கடவு ளடிதாழ்ந் துய்வாம்.* (௪)

### சிவயோகாம்பிகையம்மை.

*தூயநா மத்தருவ முருவமெவை யெனினுமொரு தோன்றல் போன்றே*
*பாயநா னிலவரைப்பின் கணுமமர்வா னெனதெரித்த படியே போல*
*வாயநா தங்கடந்த வான்மநா தக்கடவு ளமர்தற் கேற்ப*
*மேயநா யகிசிவயோ காம்பிகைதன் விரைமலர்த்தாண் மேவி வாழ்வாம்.* (௫)

### சபாநாயகர்.

அரைப்புலித்தோன் மயிருருப்பக் காற்புலித்தோன் மயிர்முகிழ்ப்ப வணிபல் பாம்பும்
வரைப்பகன்ற குலையவொரு பாம்புநிலை நின்றுகனி மகிழ மேக்குத்
திரைப்பயமா தலைஇக்கவலக் கிழக்கிளங்கன் னிகையின்பந் திளைப்ப நீர்சூழ்
தலைப்பயன மணிமன்ற ணடநவிலு மொருமுதலைச் சரணஞ் சார்வாம். (சு)

### சிவகாமியம்மை.

மாறுகரு தாதுமுகின் மழைபொழிவ தெனினுமுடல் வளமா மின்முன்
னூறுபல வாமிடையீ டேதருபோ லாதுவள முயிர்கண் மேவி
வீறுமணி மன்றுணட மென்றுமூ றுறநோக்கி விளங்கா னந்தப்
பேறுபெறக் காட்டலெனு மருண்மழைபெய் பசுமுகிலைப் பேணி வாழ்வாம். (எ)

### குருந்தமூலப்பெருமான்.

கரியவனுங் கலத்தலரும் பாதமவன் மனைவியுடல் கலப்பத் தோன்றிப்
பிரியமிக வெழுந்தருளி வந்திரு வாதவூர்ப் பெரியர் போற்றித்
துரியநிலை கடந்தசிவ போகமது வுண்டுகளி துன்ற நீழல்
விரியவுயர் குருந்தடியி லிருந்தருளும் பெருவாழ்வை விளம்பி வாழ்வாம். (அ)

### குதிரைச்சேவகர்.

அரியமறை மேலாமென் றுரைப்பதனைக் கற்றவர்நூ லளவை யானே
தெரியவல ரல்லாதார் தெரிவர்கொலோ யாவர்களுந் தெரியு மாறு
பிரியமிகு மொருவருக்காத் தலைச்சாத்து முதலியவை பிறங்க காளு
முரியவொரு பரியேறி யுலாயசே வகன்மலர்த்தா ளுன்னத் துள்வாம். (கூ)

### வீரபத்திரக்கடவுள்.

மேயசிவ நிந்தைபுரி வெய்யவர்க்குப் புரிகழுவாய் வேறின் றன்னார்
மாயவொறுத் திடலன்றி வெவ்வேறுமறைக் கிலக்கியமா வான்மைக் கொண்டு
தீயமகம் புரிதக்கன் சிரமறுத்துச் சேர்ந்தாருஞ் சிதையச் செய்த
காயகமா விறல்வீர பத்திரனம் பணிவணங்கி நயந்து வாழ்வாம். (க0)

### சொக்கவிநாயகக்கடவுள்.

அஞ்சொக்க நினைந்திடுவோர் கருவிபிற வேண்டாமென் றறைத றேற்ற
கஞ்சொக்க வழன்றெழுமால் களிற்றைமுகத் திருபாலு கருவெண் டிங்கட்
பிஞ்சொக்க வொளிர்கோட்டு வொன்றுகொடு தருமமெலாம் பிறங்க மாட்டி
மஞ்சொக்க மதம்பொழிந்து வருசொக்க மால்களிற்றை வணங்கி வாழ்வாம். (கக)

### குமாரக்கடவுள்.

புரமுதல்வென் றறுபுகழ்மாத் திரங்கொண்ட தந்தையினும் பொருமோர் யானை
யுரனறவென் றதனுமோர் தியுங்கொண்டு மிகுசிறப்பை யுறமுன் னோனும்
பரவுறச்சூர் தடிந்தவற்றே டோங்குகே தனமொருகை பற்றப் பெற்ற
விரவுமல மருந்துறையும் பெருந்துறைக்கு மாரனடி மேவி வாழ்வாம். (கஉ)

திருநந்திதேவர். வேறு.

முத்தியை யடைவோர் ஞான முந்துற வடைதல் போலச்
சத்தியை யொருபால் வைத்த பிரான்றனை யடைவோர் முந்திப்
பத்தியை யியற்றித் தன்னை யடைதரப் பண்பார் யோக
சித்தியை யடைந்த நந்தி தேவனை வணக்கஞ் செய்வாம். (௧௩)

அகத்தியமுனிவர். வேறு.

நெடுமை குறுமை யுயர்பிழிபை நிரலே யவற்றிற் கெதிர்மறையாப்
படுமென் மையினிற் செயவல்லான் பரவை யுணலான் மிக்குயர்ந்து
விடுதென் றிசையைச் சமஞ்செயலால் வெற்பை யரத்து வழுத்துதலாற்
கொடுவின் மாலைச் சிவஞ்செயலா லென்னு முனிதாள் குறிக்கொள்வாம். (௧௪)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார். வேறு.

பாலன வின்னு ணுண்டான் றெருவியர்ப் பார்த்து வந்த
மாலன வின்னுண் கொள்ள வன்பாலோர் சிறபோழ் துண்டான்
மேலன வுலகின் றனை விமலனைக் கண்டு காட்டி
நூலன வொருநூல் சொற்ற கோன்மையாற் றொழுது வாழ்வாம். (௧௫)

திருநாவுக்கரசுநாயனார்.

பாவிடை நஞ்சங் கண்டு பதைபதைத் தோடி யோர்பா
னுவிடை யவருண் பாக்கு நுவன்றமா லயனுண் ணனைப்
பாவிடை நஞ்சங் கண்டு பதைப்பின்றித் தாமுண் டோர்பா
னுவிடை யவரே யென்னப் பொலியுகோன் மையர்தாள் போற்றி. (௧௬)

சுந்தரமூர்த்திநாயனார்.

வளைபல பலபெ யர்த்து மருவுபன் னொன்மு யன்று
புளையறச் செறித்தோ ருந்தி கடந்தமால் புந்தி காணத்
தளைகிழித் தெழுமோ ருந்தி தான்வழி விடமுன் பாடி
விளையவை யாறு மேய விமலர்தாள் சென்னி சேர்ப்பாம். (௧௭)

மாணிக்கவாசகசுவாமிகள்.

இந்திய மொன்றற் காமண் ணிடந்துபன் னொன்மு யன்று
முந்திய பாதங் காணு முகுந்தனே மாற வைத்து
நந்திய சிரத்தப் பாத நகுகுருந் தடிமே வப்பெற்
றந்திய விறமாப் புற்ற வொருவருக் கன்பு செய்வாம். (௧௮)

சண்டேசுரநாயனார். வேறு.

ஆத்திமுத விடையில்லா வாத்திதனைத் தாபித்தே
யாத்திகழும் பாலாட்டி வழிபடுகா லடுபவம்போல்
லாத்தியக்க மென்றறுப்பா னடியறுத்து விடைமேலா
லாத்தியொடு மாத்தனைக்கண் டமர்ந்தபிரான் பதம்பணிவாம். (௧௯)

அறுபத்துமூவர். வேறு.

புரிவினை புரிவோ னெய்தும் பயனது பொருந்த நல்கும்
பெரியவன் சைவ மன்றிப் பேசாமற் றள்ள வென்று
தெரிதரு மனத்த ராகிச் செயற்கருஞ் செயன்மேற் கொண்ட
பரிவறு பத்து மூவர் பாததா மரைகள் போற்றி. (௨௦)

### சேக்கிழார்நாயனுர்.

பாவுறு மடியார் மேன்மை பாடவல் லவரென் றெங்கள்
கோவரு ளொருவ ரன்பிற் குறிக்கொடு துதித்தல் கண்டுந்
தாமிகு சிறப்பு வாய்ந்த தன்மையார் சேக்கி ழாரைக்
காவறத் துதியே மென்னிற் கடும்பிழை யாகு மன்றே. (உக)

### மூந்நூற்றுவர்.

பிறைமுடிக் கணிந்த வெங்கள் பெருந்தகைப் பதியைத் தம்மோ
டறைதர வயன்மா லாதி யாவரு மஞ்ச நேர்ந்து
நிறையெம்மோ டொருவ னென்று நிகழ்த்துறத் துணிமுந் நூற்று
மறையவர் செம்பொற் பாத மரைமலர்க் கன்பு செய்வாம். (உஉ)

### மற்றையடியார்கள்.

பெருந்துறை யான்ம நாதப் பெருந்தகை யால யத்துத்
திருந்துபல் பணிசெய் வோருந் தெளிபொருள் சிவமே யென்று
பொருந்திய மனத்த ரியாரும் புன்மையேன் மனத்து நீங்கா
திருந்தவெவ் விடைய ராதி யெழாவகை யிருத்து வாரால். (உங)

### பஞ்சாக்கரதேசிகர். வேறு.

அறைக்கடல்சூ ழுலகிரியா வருமுண்மை சொலக்கேண்மி னறமு யன்று
மறைமுதலா கியகலையோ திடல்வேண்டா வவையனைத்தும் வயங்கி நாளு
முறைதிருவா வடுதுறையெங் குருநமச்சி வாயன்பே ரொன்றே யோத
விறையிலிக பரமுத்தி யுண்டாகு மவைகொடுப்ப திவையே லென்னே. (உச)

### பின்வேலப்பதேசிகர்.

நந்தியெனு நம்முதலா ரியனைமுனம் வழிபட்டு நயந்து பின்ன
ரந்திமதி புனைசடிலத் திறையைவழி படுதன்முறை யதுமா றாது
வந்தவணியா முறைவாமென் றுறைதல்போற் பெருந்துறையை மருவி மாசு
சிந்தியமர் துறைசைப்பின் வேலப்ப தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம். (உரு)

### அம்பலவாணதேசிகர்.

புண்ணியவா வடுதுறையிற் பொல்லாத பாவியேன் பொருட்டி யாரு
மெண்ணியவம் பலவாண னெனுந்திருப்பேர் பூண்டதனுக் கியையத் தோன்றித்
திண்ணியமா மலமூலத் தொடுசிதைய வடிமுடியிற் செறித்தாட் கொண்டு
கண்ணியபே ரினபளித்தா னவற்கினியாற் றுதற்காய வகைம்மா றென்னே. (உசு)

### சுப்பிரமணியதேசிகர்.

இருந்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய தேசிகற்றாழ் தினிய கூறிப்
பொருந்திதயத் திருத்தினே னுணவுதவு வேனென்று புகன்றங் கானே
வருந்திமுய லவுமெனது போதவினை யொழிந்ததக்தோ மற்றென் செய்கே
னருந்திறலா ரியன்பசிக்க வுண்பானென் றொருபழியு மடைந்த வேனே. (உஎ)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

# அவையடக்கம்.

துன்னுவளம் பொலிகாசி மான்மியத்தை மொழிபெயர்த்துத் தோன்ற நீயே
பன்னுகென யான்பாடக் கேட்டுவந்தோன் றறவொழுக்கப் பண்பான் மிக்கோன்
மின்னுபெருந் துறைக்குரவன் கட்டளைமேற் கொடுநிகழும் விரதம் பூண்டோன்
முன்னுபுகழ் மிகுதிருவா வடுதுறைச்சுப் பிரமணிய முனிவர் கோமான். (க)

வேறு.

வலமலி யான்ம நாதர் மான்மிய மொழிபெ யர்த்து
நலமலி தமிழாற் பாடி நன்றுநீ தருதி யென்னப்
புலமலி வில்லே னேனும் புகன்றசொன் மறுக்க மாட்டே
னிலமலி புலவர் முன்பு நிகழ்த்திடு துணிபுற் றேனால். (உ)

சிறியுரு மதுர வாக்குக் கேட்டுவப் பவனென் றுகாச்
சிறியநின் வாக்குங் கேட்டல் செய்யுங்கொ லென்னின் மேனி
முறிநிக ருமைய ணைக்க வுவக்குமெய் யொருவர் முந்தி
யெறிகலு மேற்ற தோர்ந்தே யிசைப்பதற் கிசைந்தேன் மன்னோ. (ங)

மலைவிலா வருளோ வன்றேல் வழுவிலா வியலோ நஞ்சொ
னிலையதென் றிதைசீர் பாடே னெடிதுநாள் கழித்தே னெள்ளி
னுலைவினை யில்லை யாக வேறொன்று முதவா தாகத்
தலைவிளக் கெரித்துய்ந் தார்தஞ் சரித்திரங் கேட்டி ருந்தும். (ச)

மணிமணி யாகத் தோன்றும் வார்த்தைகொள் செவிவெம் பாசப்
பிணியினேன் வறிய சொல்லும் பேணாது விடுமேல் வான
மணிமதி யன்றி யுற்கை யனைத்தையும் விலக்கும் வாவி
நணியதா மனைய லான்மற் றனைத்தையு நலியப் போக்கும். (ரு)

மூவரு மிறைஞ்ச நின்ற முதல்வ னான்ம நாதன்
யாவரு மிறைஞ்ச நன்கேற் றினிதருள் சுரக்கு மென்னின்
மூவருந் துதிப்பக் கொண்ட முடிவிலின் பனைய பெம்மா
னியாவருந் துதிப்பக் கொள்வா னென்பதற் கிழுக்கொன் றுண்டோ. (சு)

மறையினும் விரித்தாற் போல்வ தொகையென வகுத்தா ரந்த
முறைதவ றியதொ கைக்கு மொழிந்திலர் வேறு நாம
நிறைபெரும் புராணங் கூறு நெறியிஃ தென்றா ருள்ளா
லுறைதவ றினும் வேறு பெயருரைத் திடவல் லாரோ. (எ)

முடியமெய்ஞ் ஞானந் தேர்ந்தார் முன்னவ னான்ம நாத
கெடியவன் புராணந் தன்னு ணிகழ்ந்தது குற்ற மேனு
மடியவ னவனு ணர்த்த வுணருஞ்சித் தாத லாலே
கொடியதென் றென்மேற் குற்றங் கூறவுந் துணிவார் கொல்லோ. (அ)

வென்றசீ ரான்ம நாத ரெனும்பெயர் விழைந்தார் ஞான
நன்றிலா வெனைவி லக்கார் நாவலூ ரருக்கு வெண்ணெ
யன்றருள் செய்தா ரென்று மருச்சனை பாட்டே யென்றா
ரொன்றநின் பாட்டே யென்றா ருறுதியென் னிதன்மேல் வேண்டும். (கூ)

அவையடக்கம் முற்றிற்று.

# சிறப்புப்பாயிரம்.

தென்பூத்த பழனமெலாங் கன்னலுஞ்செந் நெலுமுயர்ந்து சேண ளாவும்
பொன்பூத்த பெருவளஞ்சால் பெருந்துறைமான் மியந்தமிழாற் புனைதல் செய்தான்
கொன்பூத்த ஞானகலை முதற்பலவு மறிதபத்தோர் குணத்தான் மிக்கோன்
மன்பூத்த சிராமலைவாழ் மீனாட்சி சுந்தரநா வலவ ரேறே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

# திருநாட்டுப்படலம்.

இருவினை சிமிழ்க்க யாத்த வெய்திமேக் குஞ்சி ழக்கு
மருவவே றியுமி ழிந்தும் வருந்துபல் பவநதி னுள்ளு
மொருபவ மேனு மெய்தா தானந்த முற்று வாழ்வான்
திருவளர் வாதவூரர் சேவடி சேர்ந்து வோமே. (க)

மின்னிய வருள்சூற் கொண்டு மிளிர்சிவ யோக மாதோ
டன்னிய மில்லா வான்ம காதர்தா மமரு மேன்மை
துன்னிய தலமுற் பல்ல தன்னகந் துவன்றக் கொண்டு
மன்னிய பாண்டி நாட்டின் வளஞ்சில கூற லுற்றும். (உ)

பெரும்படி யகத்தி னுள்ளார் பெருந்தவ கனிசெய் தேய
விரும்படி யடைதற் காய மெய்ச்சிவ லோக மன்பா
மரும்படி யொருவர்க் காக வழைக்குமுன் னெளிதாத் தன்பால்
வரும்படி தவஞ்செய் தன்றான் மாப்புகழ்ப் பாண்டி நாடு. (ங)

புண்ணியக் குமரி யென்று பொருநையென் றுவா ணொரு
நண்ணிய வைவை யென்று நயக்கும்வெண் குடிலை யென்று
வண்ணிய வீரி ரண்டு மறமுத லென்கு மாகப்
பண்ணிய தவத்து தன்றே பண்புசால் பாண்டி நாடு. (ச)

வலனுடை வருண னேவ வருகடல் வறப்ப வென்ற
வலமர முகிலை வென்ற வடிமுடி யுடைய தாய
குலநக ரொன்று போலக் கோணமா மதில்சூழ் வன்மைப்
பலநக ருடைய தம்மா பலர்புகழ் பாண்டி நாடு. (ரு)

கம்பந்தங் காது நீத்த கரியமான் முதலோ ரேத்த
வம்பந்த மாக்குங் கொங்கை யானையை வயங்கோர் குன்றி
னம்பந்த மறுப்பான் வேட்ப நயந்தரு தெய்வ நாட்டுச்
சம்பந்தம் பெற்ற தன்றே தனைபுகழ் பாண்டி நாடு. (சு)

வந்தகன் றுடுந் தன்னை நோக்குவா னியங்கு மேக
மந்தகன் றூட்டு மாறி னடிப்பிணிப் புறுமென் றஞ்சி
முந்தகன் கமைய நோக்கிப் பொழிதர முற்று மேன்மைச்
சந்தமா தவஞ்செய் தன்று தவாப்புகழ்ப் பாண்டி நாடு. (எ)

மருவுட லின்ப மேவ மணங்கெழு நறிய சாந்து
மொருவரும் வாசக் காலு முதவுவ தன்றி யான்மாப்
பெருகுறு மின்ப மேவப் பிறங்குதீந் தமிழு நல்கும்
பருவரை யுடைய தம்மா பலர்புகழ் பாண்டி நாடு. (அ)

புண்ணிய வெண்ணீ றுாய பொருவரு கவசம் பூண்டு
கண்ணிய பத்தி வைராக் கியமெனும் படைகை யேந்தி
யெண்ணிய சரியை யாதிச் சேனைநான் கெழப்ப ரப்பித்
திண்ணிய சனனத் தெவ்வைச் செறுவது பாண்டி நாடு. (௯)

மறையுணர் புலவர் பொன்செய் வணிகர்மன் னவனே போல
நிறைபெரும் புகழ்வே ளாளர் நெருக்கப்பட் டொருகே டின்றி
முறைவிளை வுடைத்தா யம்பொன் முகக்குமா கரம்பல் கொண்டு
குறையறப் பொலிவ தம்மா கொற்கையார் பாண்டி நாடு. (௧௦)

மறையொலி யொருபா லாக வயங்குமா கமபு ராணத்
துறையொலி யொருபா லாகத் தோன்றிய பாண்டி நாட்டின்
முறையொலி பொதுவிற் சில்ல மொழிதரப் புக்கென் சொற்று
மறையொலி படுகொண் மூவின் வளஞ்சில வறைய லுற்றும். (௧௧)

மழைவளம். வேறு.

சுருப்ப லங்கலெம் பிரானமர் சுருதிசூழ் வெள்ளிப்
பொருப்ப மைந்ததோ ருருக்கொடு கொண்டன்மீப் போய்நீங்
குருப்ப வாழிநீர் கவர்ந்தொளி ரிந்திர நீலப்
பருப்ப தத்துருக் கொண்டுமீண் டனபுவி பரவ. (௧௨)

மீண்ட கார்மழை நம்மையூர் திறலுடை வேந்தன்
கூண்ட சேனையோ டமர்த்தழி யவன்குலஞ் சென்னி
யாண்ட மாமுடி சிதர்தரச் சிதர்த்தரும் புகழா
னீண்ட நாட்டின்முற் பொழிவது தகுமென நினைந்து. (௧௩)

உருப்ப மோவுறப் பொழிதிறன் கற்றநா முள்ளத்
தருப்ப மோப்பிடு தண்டமிழ் சீதளச் சந்தம்
விருப்ப மேவுதண் மாருத மேவிய பொதியப்
பருப்ப தத்தடை வேமுறை யாமெனப் படர்ந்து. (௧௪)

வேலை கேர்நிற வடிகொா யகன்றிரு மேனி
மாலை யாக்துழாய் நாறிய வுரிமறைத் தாங்குச்
சோலை சூழ்தர நின்றவான் பொதியத்தின் றேற்ற
மேலை வானரு மூணர்தரா விதனனி மறைத்து. (௧௫)

கடிய கற்பகாட் டெம்மிறைக் கிளையவன் கலக்குந்
தொடிய கைம்மட மகளுடற் குருப்பமே துறுத்த
கொடிய வேனிலாங் கோளராக் குலைகுலைந் தின்றே
முடிய வாற்றுவா மெனல்பொர மின்னுபு முழங்கி. (௧௬)

பருவ மாறனுட் கொடுமுது வேனிலாம் பருவம்
வெருவ வெவ்வொரு திவலைகண் முந்துற வீழ்த்தித்
திருவ மேவிய பெருந்துறை யகத்தமர் செம்மல்
பொருவ வொன்றுமி லருண்மழை பொழிந்தெனப் பொழிந்த. (௧௭)

ஆங்கு மேவிய முகில்புன லடிக்கடி பருகிப்
பாங்கு மேவுற நால்வகை நிலமெலாம் பார்த்து
தேங்கு மாமழை பொழிந்தன வள்ளியர் திறம்போல்
வீங்கு வேனில்போய் வேறிடம் புக்கொளித் தன்றே. (௧௮)

பெருமை மேயகம் புனலெலாங் குடங்கையிற் பெய்தோ
ரருமை யின்றியுண் டவனம ரிடமிதென் றழன்று
கருமை யாழிமா மலயமேற் கவிழ்திறங் காட்டும்
பொருமை மாமுகின் மீளவு மாவயிற் புகுதல். (௧௯)

பகையை வெல்வது கருதிவா ரிதிமிசைப் படர்ந்து
தகையு ருதுற நெருக்கவு முடைசராத் தவத்தின்
மிகையு ணர்ந்துவெள் கியதென விளர்த்தன மேக
மகைசெய் வேனில்வெந் தீயொடு கோபத்தீ யவித்தே. (௨௦)

வரைம லிந்தன வருவிகள் கலுழிகள் வனஞ்சார்
தரைம லிந்தன வேரிகா லோடைவான் றடங்க
ணிரைம லிந்தன தண்பணை செய்தன்மிக் கூறித்
திரைம லிந்தன சிறுமணற் கேணியெத் திசையும். (௨௧)

கயிர வப்பகை யுருமறைத் தெழுந்தபல் காருஞ்
செயிர றப்பொழி மழைபரந் தெங்கணுஞ் செறியப்
பயிர்ப ரப்புநா னிலமொரீஇ யுட்டினம் பாறிற்
றுயிர்வ ரக்குற ளுச்சிதைந் தோடுவ தொத்தே. (௨௨)

மழைபொ ழிந்தநீ ரெங்கணும் பரந்துசென் மாட்சி
பிழைசெய் வேனில்வெப் பொழிந்ததோ பெருநில மடந்தை
யுழையெங் காயினு முள்ளதோ வென்றுளத் தமைய
விழையுஞ் சோதனை புரிகுவான் மீச்செலல் கடுக்கும். (௨௩)

பொங்கு மாமுகி லிடையறப் பொழிந்தநீர் வெள்ள
மெங்கு மொப்பகன் றியங்கியு முட்கொளா வியல்பாற்
றங்கு மேதினிக் கினிமிகை யென்பது தகக்கொண்
டங்கு நின்றுவான் கடலகத் தடுத்ததை யன்றே. (௨௪)

போற்ற வாமுட லூழலு பவித்திடும் பொழுதே
யேற்ற மாகவா காமிய மீட்டுறு முயிர்போ
லாற்ற மாமழை பொழிந்தநீர் தேங்கவு மவாவி
யூற்ற மார்கதிப் புனல்கொளு மேரிக ளுலப்பில். (௨௫)

வாரி வாய்க்கொடு மழைபுனல் பொழியுமென் றறிந்துஞ்
சீரி யோர்களவ் வாரியைப் புகழ்திறஞ் செய்யார்
காரி பாகர்தம் பெருந்துறைத் தளிப்பணி தகுதார்
சூரி வேம்புடை யான்பணி யென்றெவர் மொழிவார். (௨௬)

அலங்கு ஞாயிறு தோன்றலு மிருளழிந் தாங்கு
நலங்கொள் காலையு மாலையுந் தவிர்த்துநண் பகலி
விலங்கு மாறுதித் தியாவர்க்கு நனிவெதுப் பியற்றும்
பொலங்கொள் பாலைகா ருதித்தலு மழிந்துபோ யிற்றே. (௨௭)

மாய காரியப் பொருள்களை மடந்தையோர் புறத்து
நாய னார்கொளக் கொடுத்தவர் நவிலொணா வின்ப
மாய வான்பயன் பெறுதல்போ லுவர்க்குநீ ராழி
மேய கார்முகிற் குதவிப்பின் கவர்ந்தது விழைநீர். (௨௮)

விழைந லத்தகார் காலமா கியபெரு வேந்தன்
றழைய மண்ணிறத் தலைமக்கமை தவாப்பட மாடங்
கழைகொண் மால்வரை யதன்புறத் திடைவிசி கயிறு
பிழையி லாமணி கொழித்திழி யருவியின் பெருக்கம். (௨௯)

எவ்வு யிர்க்குமா தாரமா மழைவர வெதிர்ந்து
செவ்வி சான்மயி லகவின கோகிலந் திகைத்த
வவ்வி யம்பெருக் கவுணியர் வரவெதிர்ந் தளவில்
சைவ ரேத்திட வமணரா தியர்திகை தகைபோல். (௩0)

சந்த மால்வரைப் பாண்டிநன் னாட்டிடைத் தவாம
விந்த வாறுபெய் மழைவள மியாரெடுத் திசைப்பார்
நந்த வாகிய வைந்திணை வளத்துளு நயப்ப
முந்த வாங்குறிஞ் சித்திணை வளஞ்சில மொழிவாம். (௩௧)

குறிஞ்சி.

வரைப யந்தவண் மகவெனப் படன்மயி லூர்தல்
வரைய மைந்தமான் மகட்புணர் விலைமதி யான்போல்
வரையெ றிந்தன னெனத்தவ நிலைநின்று வயக்கி
வரைகள் சேயிடங் கொளப்பொலிந் தோங்குவ மாதோ. (௩௨)

அருவி யார்தரு சாரல்வாய்ப் பஃறரு வமைய
மருவி மென்மலர் தோற்றுவ வேண்முடி வைப்பான்
வெருவி வண்டுக ளுருவிதம் விலக்குவ வேங்கை
பொருவில் சண்பக மற்றவை சூழ்தரப் புணர்ந்தே. (௩௩)

புனைம ணித்தொகை வான்றின ரோரிடைப் போகட்
டினைவி லாத்தினை வளநனி போற்றுவ ரெயினர்
நினைத ருந்தாந் தெரிதரார் பாற்படி னிகரி
லனைய தாமுயர் பிழிபிழி புயர்பென வாமால். (௩௪)

நிறவ றற்குழற் கொடிச்சியர் கவண்மணி நிறவித்
துறகு றற்கொள்புள் ளிரிதரச் சுழற்றுபோ தொருகா
லறுதி றத்தினைத் தொழிதர மணியவண் வீழு
மறகு பாம்பினைச் சுழற்றவாய் மணியுதிர்ந் தென்ன. (௩௫)

ஓங்கு சாரலிற் றவழ்மதிப் பிறைவழுக் குற்றுத்
தேங்கு நீர்ச்சுனை யகம்விழ கவ்வென்று சினைமேற்
பாங்கு வாழ்குரங் கொன்றதன் மேலுறப் பார்த்தோ
ரீங்கு நின்பெயர் குரங்கியென் பஃதுமெய் யென்பார். (௩௬)

எவ்வ மில்லராய்ப் பெற்றது கொண்டுவப் பெய்தல்
செவ்வி யோர்கட னென்றெளித் தாங்குறு செவ்வி
நவ்வி நோக்குடைக் குறத்தியர் நயந்தடை யுடுப்பா
ரொவ்வ தில்லெனப் புன்றினை புன்கிழங் குண்பார். (௩௭)

மேய வெண்பிறைக் கோட்டுடை தேத்தடை விடுக்கும்
பாய வின்மது வருவியா னையின்கடாம் பரப்புற்
றூய செம்மையால் வெண்மையாற் கருமையா லன்றித்
தோய யாவரும் பகுத்துணர் தரத்தரோ சொல்லில். (௩௮)

மந்தி முன்செலப் பெரும்பலாப் பழச்சுளை வவ்வி
யுந்தி யுள்ளிடைக் கடுவன்பின் புகவுண ராம
லந்தின் மற்றொன்று புகவெளி வந்துடன் றமர்க்கு
முந்தி மாதவாய்க் கவியிரண் டமர்ந்தவோர் முறைபோல். (௩௯)

கயமு னிக்குலம் பிணைத்தனர் வட்டமாய்க் கனமே
வியவ றைத்தலைத் தினைக்குரல் பரப்புபு மிதிப்ப
வயம றச்சிலை யெயின்குடி விடமுகின் மருண்டு
பயமி குத்தொரு சிறைப்புகூஉ வருமொலி பரப்பும். (௪௦)

கடமை பன்றிமான் முதலிய மிருகமுன் கவர்ந்து
சுடர்கொ ளுந்தழற் காய்ச்சுபு தேனிற்றோய்த் தருந்து
மடமை யென்னெனக் கிராதனா யிகழவா யுண்டோ
படவ ராவணி காளத்தி யார்செயல் பார்த்தும். (௪௧)

கொடியி டைக்கொடிச் சியர்முலைக் கோட்டினுக் குடைந்தே
நெடிய மால்வரைக் கோடுக ணீனிற முகிலான்
முடிய மூடப்பட் டொளித்திடு மூரிமா வியானை
வடிய கோடுகள் விளர்த்திடு மணியகம் பரித்தும். (௪௨)

பிண்டி யந்தளிர் வாடுதல் கண்டுபே துறுவோர்
வண்டி யாரமென் னறுந்தளிர் கொய்துதம் மங்கைக்
கொண்டி ரங்கிநீர் கொண்மினென் றிரந்திடக் கொள்வார்
மண்டி யெங்கணுங் காவல்செய் புனங்களே வயங்கும். (௪௩)

உறும்ப லாயிர யோனிதோ றுதித்தன வாய
வெறும்ப லாவுயி ரியாவும்வாழ் திசைகுறித் திறைஞ்சுங்
குறும்ப லாவுடைக் குன்றமொன் றுடையது குறிஞ்சி
தெறும்ப லாயிர வாயினுன் செப்பலு மாமோ. (௪௪)

வான மேவிய வாழ்க்கையர் புனிஞராய் வந்து
தான மெங்கணும் விராவுறும் தடங்கொடுங் குன்ற
மேன நாடொணுர் ஞாலமுற் காட்டியாங் கிருப்பின்
மான மாருமக் குறிஞ்சியின் றவத்தையார் வகுப்பார். (சரு)

இகல வாவுதோட் குருயிர் குடித்தவெம் மிறைவன்
சகல யோனியு மின்புற யானைதோ டழுவி
யகல மார்பரங் குன்றிடை யமருமேற் குறிஞ்சி
புகல வல்லரியார் முல்லையின் வளஞ்சில புகல்வாம். (சசு)

முல்லை.

மாணு ருத்தபுத் தான்முனம் வாளியா லெனிஞு
மாணு ருத்தமூஉம் வாஞ்சைய ஞதவி னவஞன்
மாணு ருத்தழை விப்பதை யெண்ணுபு மாலை
மாணு ருத்தகான் றெய்வமாக் கொண்டது மாதோ. (சஎ)

மாய வன்வனங் காத்திட வதிதலின் மயக்க
மாய தெய்திடா வண்ணமாங் கமருவ வனமீப்
பாய கார்முகி லவன்வடி வொப்புமை படர்ந்து
கேய மோடவட் பயிலுவ பெயலொடு நிலவி. (சஅ)

பாவு தோஎசைத் தாமோ லைகளெனப் பல்பூ
விரவு தொத்துக வேக்கிய மதலைகூ விளஞ்சார்ந்
தூாவு மேவியோ திமமுமு தோங்கிடு திறத்தா
லாவு பூண்பவன் சடைகள மவ்வன மாமால். (சகூ)

மூவ கைத்தொழி ழுஞுமிடைத் தொழின்முயன் முற்றுந்
தேவன் மேவலி னிடையரோ யாவயிற் செறிவார்
மேவ வானினாத் தோழமும் விசைத்தெழு கன்றிற்
காவ தாகிய தீவுமாங் காங்குறப் பரப்பி. (ருo)

சாயு நுண்ணிடை யாய்ச்சியர் தளிர்க்கைமத் திட்டுத்
தோயும் வெண்டயி ருடைத்திடு தழனியாற் றுள்ளி
யேயு மோர்புதல் புகுமுயல் கலையத்தா னினப்பால்
பாயு மோதையா லயல்புகு நிலையிலார் பண்பின். (ருக)

முருகு வார்குழ லாய்ச்சியர் முளிபடேஉத் தோய்ந்த
பெருகு நின்றகொள் வெண்ணெயைப் பிறங்கழ லேற்ற
வுருகு காலெழு மணங்குலா வவிஞுறு மாங்கு
வெருகு சூழ்வன யக்கிரம் புனேந்தவெள் ளேற்றில். (ருஉ)

இனித்த வேய்ங்குழ லோதையு மேறுபூண் மணியும்
பனித்த மாலையு மௌவல்வண டேதலும் பசங்கார்
குனித்த வில்லொடு தோன்றலுங் கோகிலத் தொழிப்புந்
னித்த மங்கைய ரிருக்கைசாய் கூற்றெனுந் தகைய. (ருங

தொறுவி மார்மொழி பயின்றிடக் கோகிலத் தொகையு
மறவில் வாணகை யரும்பிட வயங்கிய தளவு
நிறவு வார்குழல் கனிந்திட நேயஞ்சார் களவு
மிறுதி யில்வனத் திறுதியில் லனவென விழையும். (ருச)

கோடு கூரிய கொழுவிடைப் புறம்பொலி யிமிற்குங்
கூடு மாய்ச்சியர் கலம்பொலி குடம்புரை முலைக்கு
நாடு நின்டிறன் மதனுடைக் குறும்பொறை நாடர்
நீடு தோளிணை யுயர்ந்தவொத் தனவென நிலவும். (ருரு)

எள்ளுஞ் சாமையு மவரையுந் துவரையு மிறுங்குங்
கொள்ளு முற்கமுங் கோத்திர வமுங்கொழும் புல்லுந்
தள்ளு நீர்மையின் றிடந்தொறும் பொலிவன தவாமே
கள்ளு மால்வரை கானக நண்ணிய வென்ன. (ருசு)

தூய கூவிளங் குருந்துவண் கடுக்கைபைந் தூர்வை
மேய வானிரைந் தோடுகான் யாற்றறல் விராமிக்
காய முல்லையின் களம்பழ முதலமை தவிருன்
மாய வன்சிவார்ச் சனைசெய வகுத்தமை போலும். (ருஎ)

போற்று மாயவன் மேனியின் கருமையைப் புகழ்கோ
சாற்று பூவையிற் றதைந்தபூக் கருமையைப் புகழ்கோ
வாற்று மாய்ச்சிய ரணிகுழற் கருமையைப் புகழ்கோ
தேற்று செங்கதிர்க் கிரணமுங் காரெனச் செய்யும். (ருஅ)

கானப் போருங் கடிக்குழ னங்கைய ரோடுந்
தானப் பேரர சாதியர் தவாதுவந் திறைஞ்சி
வானப் பேர்முடி யாவென மருதருள் வழங்குங்
கானப் பேருறத் தவம்புரிந் ததுகமழ் புறவம். (ருகூ)

அல்லை வென்றிகொள் கந்தரச் சுந்தரத் தண்ண
லெல்லை யில்லதாம் பேரருள் சுரந்தினி திருக்குந்
தொல்லை வைப்பென லாயவா டானையுந் துவன்ற
முல்லை மாதவஞ் செய்ததேற் பிறிதெவன் மொழிவாம். (சுo)

வேதம் யாவையும் பிரணவப் பொருளெனல் விளக்கப்
போத நாயகன் மதலையை யுவந்தமர் புத்தூ
ரேதந் தீரக்கொண் டமர்வனத் தியல்பினென் னுரைத்தாஞ்
சீத மார்வய னிலவனத் தினுஞ்சில தெரிப்பாம். (சுக)

மருதம். வேறு.

அருமணி வைரம் வாரி யகருவுஞ் சந்துஞ் சாய்த்துக்
கருமதக் களிற்றுக் கோடு கையரிக் கொண்டு விண்டோ
யொருவரை யின்றுங் கல்லென் றிழித்துறப் பரந்து வாரிப்
பெருவயி றகன்கு ழம்பப் பெருகுறும் பொருநை யாறு. (சுஉ)

பிறைமுடிக் கணிந்த வெங்கள் பெருந்தகைச் சுந்த ரேசர்
நிறைதவில் குழிவ யிற்றுக் குறட்குநீர் நசைத ணிக்க
முறைமுன மழைத்த வாறின் றழைத்தனர் மொழியின் மண்ணு
மறைதரு மிதனுலென்ன வையையும் பெருகா நிற்கும். (௬௩)

கங்கையின் பெருக்கோ தெய்வக் காவிரிப் பெருக்கோ வன்றிச்
செங்கையி னுடல் கொண்டார் திருவருட் பெருக்கோ வெற்பன்
மங்கைதன் னருட்பெ ருக்கோ மற்றிஃ தெதற்கொப் பென்னச்
சங்கையின் றுய்ப்ப ரந்து பெருகுறுந் தனிவெள் ளாறு. (௬௪)

பெருகிய நதிநீர் வெள்ளம் பெருமத கூடு சென்று
மருவிய வேரி புக்காங் குறுமத கூடு சென்றுத்
திருவியல் கழனி யெங்குஞ் செறிந்துபல் லுயிர்க டோறு
மொருபரம் பரன்வி யாபித் துறுதிறங் காட்டிற் றன்றே. (௬௫)

அளப்பரு முயிர்கள் செய்யு மன்பினுக் கேற்ப யாரு
மளப்பரு மான்ம நாத னருணிறைந் தென்ன நாட்டு
ளளப்பருங் கழனி கொள்கைக் கியைதர வாற்று வந்த
வளப்பரு நீர்நிறைந்த தார்த்தனர் களம ரெல்லாம். (௬௬)

சாதியின் றமையா தானுஞ் சாதிசெய் வினையென் றோர்ந்தாங்
கோதிய பழையர் பாற்போய் வாய்க்கடை வழிய வுண்டு
மோதிய மூவ ருன்னு முழுப்பல விராம னென்னக்
காதிய வலந்தோண் மேற்கொண் டெழுந்தனர் களம ரெல்லாம். (௬௭)

நுகநடு வேர்க்கால் சேர கோன்மையிற் பொருத்தி நத்தக்
நகமிளிர் கருங்க டாக்க டாழ்வுயர் பொழியப் பூட்டி
மிகமிளிர் தாவி டக்கை மேழிபற் றுபுவ லக்கை
யகமொரு முட்கோல் வாங்கி யார்த்துழு தனரான் மள்ளர். (௬௮)

புரத்தல்செய் பவனில் லாய புடவிமெய் வடுவ னைத்தும்
பரத்தல்செய் யாமற் செய்கை பாங்கெனக் கருதி யாங்காங்
குரத்தமுன் னோர்க டக்கு முறுவிளாப் படைச்சான் மாய்க்குந்
தரத்தது பின்னோர் பின்னுஞ் சார்வவத் தகைய மாதோ. (௬௯)

குறிகொளும் பகட்டு நாஞ்சிற் கொழுமுகங் கிழித்துச் செல்லச்
செறிபசும் புற்க ளாதி யாவையுஞ் சிதைந்து மாய்ந்தே
முறிதரு மூழ்த்த லெய்த முடியவு மாறி மாறி
நெறியுழு தொழின்மு யன்றார் நெடும்பணை யெலாஞ்சே றுக. (௭0)

தழைதரல் புரிப வுணக்கியாக் தழைதரன் முறையே யென்று
குழைதரு தழைக ளாய்ந்து கொடுவந்து நனிப ரப்பி
விழைதர மிதித்தல் செய்து மேயகங் கரிந்து யர்த்திப்
பழையநீ தகருத் தேய்த்த பான்மைய தெனச்செய் தாரே. (௭௧)

காம்புகா ணரிய தாக்கி மேடவல் கழியு மாறு
பரம்புமேற் கிடத்தி யூர்ந்து பாறிய தோட காவில்
வரம்புறு வரம்பில் செய்யும் வாழ்கவென் றிறைவை வாழ்த்தி
கிரம்புகென் முளைவி தைத்தார் கிரப்பெறு முளைசி தைத்தார். (௭௨)

கலங்கனீர் தெளிதல் கண்டு கவிழ்த்திளம் பருவச் செயி
னலங்கிளர் பசியு ணர்ந்து பாலூட்டு கற்றாய் மான
விலங்குறா மள்ளர் கன்னீர் வேண்டிய காலத் துய்ப்பக்
குலங்கிளர் முளைக ளெல்லாங் கூழென வளர்ந்த வன்றே. (௭௩)

ஊறுநீர் பருவ நோக்கி காறெலா முறப்ப றித்துச்
சேறுநீர் முளையின் மோதி முடிசெய்தோ ரிடச்ச ரக்கை
வேறுவே றிடத்தி னுய்க்கும் வாணிகர் விழைய மள்ளர்
மாறுநீர் பணைக டோறு மகித்தனர் சுமந்துய்த் தாரால். (௭௪)

ஆய்பிழி மாக்கி மீன்க ணளவும்வெற் றிடமின் றென்ன
வேய்புரை கிரடோ ளாற்றுக் காலாட்டி மார்வி ராவிச்
சாய்தர காறு கட்டார் சாய்வொழித் திகே மக்குத்
தேய்தரா இதுவென் றம்ம கிமிர்ந்தன தோகை காட்டி. (௭௫)

முளைவிளர்த் தப்பாற் பச்சென் றாயதோர் முறைமை போலத்
தலைதொறு காறு வெள்ளென் றாய்த்தனி பசப்பிற் றங்கக்
கலைவருந் தவத்திற் கூறாக் காமமா தியசார்ந் தென்ன
விலைசரோ ருகமுன் னாய பற்பல மிடைந்த வன்றே. (௭௬)

களைகளை பருவ மென்று கடைசியர் தம்மைக் கூவித்
தலைதொறு மள்ள ருய்ப்பச் சார்ந்தவெள் ளோதி மங்கள்
விலைகடை கற்பா னெண்ணி விழைந்தபின் றொடர வாங்கால்
களைபல களைக ளெல்லாங் கொல்லுவா னமைந்தா ரன்றே. (௭௭)

பேருற வுற்ற போதுஞ் சிறுபகை யேனும் பேணார்
சீருற வுயர்ந்தோ ரல்லார் செத்தவ ரென்றன் மெய்யே
யோருமா லுந்தி யாயு முழத்திய ருறப்பு கள்ளாச்
சாருமோர் பகையான் மாண்டு சாய்ந்தவம் புயங்க ளெல்லாம். (௭௮)

நகமெனுந் தோட்டி யாலே நக்கவெள் ளாம்ப லெல்லாந்
தகவொறுத் தனர்கை யேவாற் றாமரை பலவுங் கொன்று
ரகமிமிர் புல்லின் மேலா லங்கிரி யெடுத்து வைத்துட்
புகவடர்த் தனர்மற் றின்னும் புரிந்தவைக் களவுண் டாமோ. (௭௯)

கெடியபுண் டரீக மங்கோ கனகநீ லோற்ப லஞ்சூழ்
கடியரக் காம்பல் வள்ளை முதற்களை கின்ற யாவுங்
கொடியவென் றொருபேர் பெற்றுக் கடைசியர் கொல்லப் பட்ட
படியிலெவ் வுயிர்க்குந் தீதே கொடியன வெனும்பேர் பற்றல். (௮௰)

சிலமலர் குழலில் வேய்ந்தார் சிலமலர் கழுத்திற் சேர்த்தார்
சிலமலர் கையிற் கொண்டார் சிலமலர் மோந்தெ றிந்தார்
சிலமலர் வாயின் வைத்தார் சிலமலர் வரப்பி னுய்த்தார்
சிலமலர் கான்மி தித்தார் தாரதாந் தெரிந்தா ரானார். (அக)

விண்ணமை பவர்க்கூ றுஞ்சூ ராதியர் விளிந்தாற் போல
மண்ணமை பயிர்க்கூ றுய களையெலா மாய்ந்த பின்ன
ரெண்ணமை யுலோப மில்லா ரிரும்புகழ் பணைத்தாற் போலக்
கண்ணமை கழனி யெல்லாம் பணைத்தன கழைகொ லென்ன. (அஉ)

இளங்கருக் கொடுமு திர்ந்து வயிரவெட் டீட்டி போலுந்
துளங்கருந் தோற்றங் காட்டி வெளிப்படூஉத் தவன்றி நின்ற
வளம்படு கதிர்க ளெல்லா மதிவிடு கதிர்வி ராவி
யுளங்கொளக் கனத்துச் சாய்ந்த வுயிரெலா மிமிர மாதோ. (அங)

கொல்லரம் பயின்ற தாய கொடும்பிறை யிரும்பு கைக்கொண்
டொல்லெனக் கழனி தோறு முழவர்க ளொருங்கு புக்குச்
சொல்லெனப் பட்ட வெல்லாந் தூரகத் தரிந்து சாய்த்தார்
வல்லையின் வரிந்து சென்னி வைத்தனர் களத்துச் சேர்ப்பார். (அச)

பாகசா தனன்சி னந்து பருப்பத மனைத்துந் தள்ளி
மேகவா கனத்தைக் கூவி மிதித்திட விடுத்தன் மான
மோகமார் நெற்போர் தள்ளி மொய்கடாப் பிணையல் செய்து
வேகமா மிதிக்கச் செய்தார் வெவ்வலிக் களமர் மாதோ. (அரு)

ஊர்தரு மிறைவன் மெய்வே றுயிர்வேறு படுத்தன் மானச்
சார்தரு கடாவை வேறு நெல்வேறு சமைக்கக் கண்டு
போர்தரு திண்டோண் மள்ளர் பொருந்திய பலால நீக்கி
யார்தரு நெற்கு வித்துத் தூற்றின ரவலை செய்வார். (அசு)

கொற்றவ னாறி லொன்று கொளக்கொடுத் தறங்க ளெல்லா
மற்றமின் றாகத் தொன்று தொடுமுறை யமைய நல்கி
மற்றதை வாரித் தந்த மனைவயி னுய்க்கு மார்ப்புக்
கற்றவர் புகழ்விண் ணூடு காதலை பொத்தச் செய்யும். (அஎ)

கழைவடி சாறு காய்ச்சிக் கட்டிகொள் வாரு மிஞ்சி
விழையரி சனமுன் னாய வேறுபல் வளங்கொள் வாரும்
புழைமனப் பொதுமா தோடு புதுப்புன லாடு வாரு
முழைவிழிக் கிழத்தி மார்த மூடலை யுணர்த்து வாரும். (அஅ)

இறைபுரி யாட லெட்டெட் டியற்றுவா னேற்றமாக
முறைமையி னவர்க்கு முத்தி முனைத்தலைப் பாய மூதூர்
நிறைசிவ லோக மென்ன நிகழ்திரு வால வாய்தன்
னுறைகெழு மருதத்துள்ள தெனிலினிச் சொல்ல லென்னே. (அகூ)

மாவண மேனிப் பொன்போல் வாளுகிர்க் குறிக போலத்
தேவண மாலாக் கொண்டா ரேற்றினி தமரு மூதூர்
பூவண மென்ப தந்த மருதத்தே புணரு மென்னி
னுவணச் செம்மை யாரு ளியாவரே நயக்கி லாதார். (க௦)

ஆடக மிளிரும் வையை யருகிற்சை வந்தா பித்த
வேடகங் கொண்ட தாய வேடக மாப்ப னூர்முற்
கூடகங் கொண்ட மென்பால் வளத்தெவன் குறித்துச் சொற்று
நாடக நிகழு நெய்தல் வளஞ்சில நவில லுற்றும். (கக)

நெய்தல்.

மழைவளஞ் சுரந்து விண்ணு மண்ணும்வாழ் தரச்செய் கோண்மூ
விழைதரு முணவு நல்கு மேன்மைமிக் குடைய தாகிப்
பழையமா நதிகட் கெல்லாம் பதியெனப் பட்ட வாரி
யுழையுறப் பெற்ற நெய்த லோம்புவன் வருண னாளும். (கஉ)

பொருசுறு மருப்பொன் றான்றிப் புன்னையம் போது சூட்டிப்
பெருகமீ னுணவு நல்கிப் பேணுபு வணங்குந் தோறும்
வெருவறக் கோட்டி னின்றும் வெளிப்பட வருணன் றோன்றித்
திருவமப் பரதர்க் கீயுஞ் சிலைத்தல்வான் செவிடு செய்யும். (கங)

இரும்பினைத் திரித்தா லன்ன விருங்கருங் கோட்டுப் புன்னை
யரும்புகொள் குடுமி பற்றி யக்துகிர்க் கொடிவ ளைப்பக்
கருங்கடற் றிரையெப் போது மறைவது கண்டு மாங்கே
விரும்பியல் குவவி லாபம் விளைவதை யறிகி லேமால். (கச)

இடர்தப வாரி மேய விருஞ்சுற வாதி மீன
மடர்வலை வீசிக் கோற லன்றியுந் தூண்டி லிட்டுப்
படருறக் கோறற் காகப் பரதவ ரமைத்தாற் போலுந்
தொடர்புடைப் பகன்றை யெங்கு மரும்புக டோற்றுங் காட்சி. (கரு)

இறையவன் சினக்கு மாறொன் றியற்றியா மிழிந்தா மேனு
மறைகட லுவக்கு மாறொன் றாற்றிமிக் குயர்வா மென்று
முறையுற வெண்ணித் தாழை மொய்பல புலவு மாறக்
குறையறப் பூக்தெண் டிக்குங் கொளப்படும் வாசம் வீசும். (கசு)

தளிர்படு பிண்டி வைப்புந் தவாக்கொடி முல்லை வைப்பு
மொளிர்செழுங் கமல மாம்பூ வுற்றதண் மருத வைப்பு
மிளிருண வாக்கா நீலம் விராயதே யாக்கு மென்று
குளிர்திரை நெய்தல்வைப்பிற் குடிகொளுங் காகப் புள்ளு. (கஎ)

திரையெடுத் தெறியுஞ் சங்குஞ் செழுந்துகிர்த் திரளும் விண்மீன்
புரையொளி முத்து மற்றும் பொருந்துவ வனைத்துங் கொள்வான்
கரையகஞ் செறியும் வண்ணு நங்கள்பொற் பொதிய விழ்க்குந்
தரையிது கண்டும் புன்மை யடைமொழி சாற்ற லென்னே. (கஅ)

ஓரொலிக் குவமை சொல்லி னுலகஞ்சூழ் பரந்த வாழி
யாரொலி யுரைப்பர் கற்ற வறிவுடை யவர்க ளியாரும்
பாரொலி நிகழு காவாய் பற்பல படைத்த லாலே
பேரொலி யுடைய தென்று பேணுபு மதித்தார் போலும். (௯௯)

நல்லவை நல்ல செய்யு நாட்டவர் மதிக்க னாளு
மல்லவை யல்ல செய்யு மென்பதை யறிந்தா மன்றே
பல்லமுண் டகம்புன் னுகம் பானனல் வாசம் வீச
முல்லமுன் னுய பன்மீ னூற்றநீ வாசம் வீசும். (௧௦௦)

நல்லது தீய தோடு கண்ணுறிற் றீய தாகன்
நல்லது நல்ல தோடே யணுகுறி னல்ல தாகு
மொல்லுநன் னீல மீன்சார்ந் துறுபுலா னுறு மீனும்
புல்லுநீ லஞ்சார்ந் தேநன் மணநாறு மிகுபு னர்ப்பால். (௧௦௧)

மழைவளம் வேண்டி நிற்கு மறநிலத் தவர்போ லாது
விழைவள நமக்கீதென்று வெயில்வளம் வேண்டி நிற்குந்
தழைதொழி லுமணர் தம்மாற் றரப்படு முப்பி னேங்கல்
பிழையற வெவரும் வேண்டும் பெருஞ்சுவை யாயிற் றம்மா. (௧௦௨)

உருவள மிரண்டி னாலு முறப்பெரி யவரே யானும்
பருவரல் கண்டுஞ் சற்றும் பயன்படா ரவ்வி ரண்டு
மருவிய சிறிய ரேனும் பயன்படு வாரு முண்டாற்
பொருதிரைக் கடல்சிற் றூறற் கேணியாற் பொருந்த வோர்ந்தாம் (௧௦௩)

சிலைவலி யிராமற் குற்ற பாதகந் தீர்த்த மேன்மை
நிலைமரு விராமே சஞ்சேர் நிலசந்தனுக் கோடி யோடு
மலைவற வைக நெய்தன் மாதவஞ் செய்த தென்னிற்
கலைவலீ ரனைய நெய்த னிலப்புகழ் கரையப் போமோ. (௧௦௪)

வளையிரு சிறகு மாய்த்தான் வானக வாழ்க்கை மேவிக்
களையறு மகிழ்ச்சி யெய்தக் கைமல ரொருவே ரொட்ட
விளைகமழ் கடப்பந் தண்டார் மேலவன் செந்தில் வைப்புந்
திரையெறி நெய்தன் மேய தெனிலினிச் செப்ப லென்னே. (௧௦௫)

நனியருள் சுரக்குந் தீர்த்த நலமெலாந் தன்பாற் கொண்ட
புனிதமல் கியபே ராழி பொருந்திய நெய்தன் மேன்மை
தனிலெவ னுரைத்தாங் கொற்றி தனியா சிருக்கப் பெற்ற
கனியழற் சுரமாம் பாலை யினுஞ்சில கரைவா மன்றே. (௧௦௬)

பாலை. வேறு.

பாலை யென்பது கானில மருங்கினும் பால்கூர்
மாலை வன்றிட ரேமுது வேனில்வாய் மாலை
காலை நீர்ந்துவெங் கதிர்சுடு கடும்பக லாய
வேலை வெப்பமிக் காய்கிளைப் பினுஞ்சுடும் விறற்றே. (௧௦௭)

ஈந்து மெய்சிறு குரம்பையாங் காங்குற விளைத்துப்
போந்து வாழ்குவர் மறத்திய ரோடுபுன் ளுவர்கள்
காந்து வெஞ்சின விக்கைதா டொழுக்தொறுங் கடும்பேர்
நீந்து வன்பிற லளித்திடப் பெற்றநீர் மையராய். (௧0அ)

சுரதி லத்தமர் தரினுமா றலைத்திடு தொழிலாற்
பரவு கானிலப் பொருள்களு மிறுக்கர்கைப் பற்றி
யுரவு மேவுற நுகருவர் கல்லுண வுண்டு
விரவு மென்புரு வுயர்தல்கண் ணோக்கியும் விடாரால். (௧0௯)

கொடுமை யாளரே யாயினுங் கூடுப காரப்
படுவ துண்டுகர்ச் சூரத்தா னெல்லியாற் பலவா
யிடுக னிக்கள விலைவிளைப் பாடல மதுவாற்
றொடுவ றுங்கிணற் றகநிறைத் திடுவதச் சுரமே. (௧௧0)

இந்த காடுகோப் பவன்றிர டோண்மிசை யிவர்சம்
பந்த முண்மைதேர்க் தாவயின் வேம்புகள் பரவு
மந்த நாயகன் சிவக்குறி யவாவலோர்க் கறியச்
சந்த மார்கனி கிளையெலாங் தகைதரப் பழுக்கும். (௧௧௧)

எருவை பேட்டிற்குச் சிறகரால் வெயின்மறைத் தியங்கிப்
பொருள்க ருத்துறப் போமவர் செலவழுங் குவிக்குக்
தெரிய வாவயி னியங்குவான் சென்றகெட் டராக்கள்
புரிமு றுக்குடைக் தாலெனப் புரளுவ போகா. (௧௧௨)

இலங்கை மாநகர் வாழ்நருள் வீடண னென்னத்
துலங்கு மாவயிற் கன்னிகா ரம்பல துவன்றி
நலங்கொள் காதலர் பின்றொடர் கங்கையர் வருந்தா
தலங்கு சீறடி யின்புறப் பஞ்சிக ளமைக்கும். (௧௧௩)

ஓங்கு கம்பெய ரிங்கில முற்றதென் றுறந்து
வீங்கு பாலைக ளாவயிற் பழுப்பன மேன்மே
லாங்கு மேவியக் கனியுணில் வெளிப்படா ததர
நீங்கு மலோட் டத்தொடும் பொருந்துத னிசமே. (௧௧௪)

இன்ன பாலைவெந் தழலெனக் கொதிப்பினு மிகழார்
முன்ன மாலைய முடிய தெதையென முன்னி
லன்ன பாலைசால் வளத்திலென் னறைந்தன மறைவாஞ்
சொன்ன நானிலத் தைந்திணை மயக்கமாந் தொடர்பும். (௧௧௫)

திணைமயக்கம்.

வளைகொள் பாகன்மேற் படர்தரு கறிக்கொடி வாவி
விளைகொண் முல்லைநீள் குருந்தின்மேற் படர்தர மேவிப்
புளைகொண் மஞ்ஞைஞான் வாரண மெதிர்புரிந் தியங்குங்
களைகொள் கூத்தியர் கயிற்றெறி ரெதிர்கடப் பதுபோல். (௧௧௬)

மேய வான்குழக் கன்றுண லொழிந்தபின் விடுபா
லாய தோரவ லகம்புக வவ்வவ லகத்தே
பாய மாமரு தக்கத விக்கனி பலவுந்
தோய வீழ்வது கண்டில கெடுத்தின்னுஞ் சொல்லும். (கள)

செய்ய முண்டகச் செய்வள ரோதிமச் சேவன்
மெய்யி னெய்தன்முண் டகத்துகு மகரந்தம் விரவத்
தைய லார்பெடை புதுக்கடித் தன்மைதேர்ந் தூட
வைய மற்றஃ தடிக்கடி தான்பணிந் தணையும். (கஅ)

அலையு றும்பவ ளக்கொடி செழும்பணை யகத்து
நிலைபெ றும்வய லைக்கொடி நெடிபடு முல்லை
மலைவில் பூவையைத் தழுவுவ மாலைமா மகளு
முலைவில் பூமக ளுந்தழீஇ யுவப்பதை யொக்கும். (கக)

கடலெ றிந்திடு தாளமென் கரும்பெறி தரள
மிடல்கொள் வேழவெண் மருப்பெறி தாளமான் மிளிர்பல்
விடல்செய் முத்தமற் றிவைமதூ கத்தல ரியைய
வடன்ம றத்தியர் வாரியோர் கறையிலிட் டலைப்பார். (கஉ0)

கன்ன ரிவ்வள மலிதரு குலத்திணை நான்கு
மன்ன வெவ்வகைக் குடிகளு மரபுளி வைகச்
சொன்ன மேயெனத் தலங்கிடும் வழுதிநாட் டுறுசி
றன்ன சொற்றன நகர்வளத் தினுஞ்சில விசைப்பாம். (கஉக)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கஉஅ.

---

# திருநகரப்படலம்.

---

பேசரும் வளத்தான் மிக்குப் பிறங்குறு வானங் காப்போன்
றேசமை வாழ்க்கை வேண்டேஞ் செய்யதா மரைமே லண்ணல்,
வீசரும் வாழ்க்கை வேண்டேம் விண்டுவின் வாழ்க்கை வேண்டேம்
வாசகப் பெருமான் செம்பொன் மலரடி வாழ்க்கை யோமே. (க)

வேறு.

நிலமெ லாம்புகழ் நெடிநகர் பலவுந் நினைத்த
பலமெ லாந்தரு நகரமுஞ் சிலவவை பரவ
வலமெ லாம்பொலிந் துயர்ந்ததொன் றேயென வயங்கு
நலமெ லாம்பொலி நாம்புகழ் பெருந்துறை நகரம். (உ)

கூட்ட வல்லது பல்வகைக் குடியையுங் கூட்டி
யூட்ட வல்லது பல்வகைப் போகமு மூட்டிக்
காட்ட வல்லது புண்ணியப் பொருளினைக் காட்டி
நாட்ட வல்லது கயிலையிற் பெருந்துறை நகரம். (௩)

நீடு வானவர் குழாத்தொடு நிகழ்மக வானுங்
கூடு முண்டகா சனத்தனுங் கொண்டன்மே னியனும்
பாடு மெல்லையி னிறைஞ்சியுட் புக்கனர் பரவ
காடு மான்மியம் படைத்தது பெருந்துறை நகரம். (௪)

அறிய வானவ ரியாவரும் வீதிதோ றணைந்து
செறிய வீழ்ந்துவீழ்ந் தடிக்கடி பணிந்தெழு திறத்தான்
முறிய கற்பக நாறுறு முண்டகத் தோடு
நறிய பைந்துழாய் நாறுறும் பெருந்துறை நகரம். (௫)

ஒளிகு லாம்பல விமானமு மதப்பெருக் குன்று
வளிகு லாங்கவுள் வெள்ளைவா ரணமும்வெள் ளனமுங்
களிகு லாங்கலு ழனும்புற நகர்த்தலை காப்ப
வளிகு லாம்வளம் படைத்தது பெருந்துறை நகரம். (௬)

மதிசெய் வெள்ளிய மாடமு மாடமேன் மதியுந்
துதிசெய் வாலிய கொடிகளுஞ் சூழமுத் தார
நிதிசெய் மாலையும் படைத்தமைக் கேற்பநீள் வெள்ளை
நதியு மோர்புறம் படைத்தது பெருந்துறை நகரம். (௭)

மறைக ளாகமந் தோற்றலாற் பரமன்வாய் மானுங்
குறைத ராவொளி யாலநித் தியமுருக் குணத்தான்
முறையி னியாவரும் வணங்கலான் முதலவன் போலு
நறைவி ராவிய பொழில்சுலாம் பெருந்துறை நகரம். (௮)

ஆய விந்நகர் வளமெலா நோக்கிமிக் காசை
மேய தன்மையா லாசைமா நகரென்றும் வெறுக்கை
பாய தன்மையால் வெறுக்கைமா நகரென்றும் பகர்வார்
நேய மார்புல மையர்நிறை பொன்னக ரினையே. (௯)

எந்த மாநக ரெங்கணும் புகவியங் கிடுவா
ரந்த மார்சிறு துறையுறப் பற்றுவ ரிதனை
நந்த வெய்துநர் பெருந்துறை நயந்தகா ரணத்தா
லந்த மில்லதோர் பெருந்துறை யென்றதா லகிலம். (௧௦)

குரவு பூண்பவ ரியாவரோ யாயினுங் கொன்றைப்
புரவு வேணிய னேயெனப் பாவனை புரிவா
ரரவு சூடவ னேகுர வேற்றினி தமரும்
பரவு மாநகர்க் குவமையு முண்டுகொல் பார்மேல். (௧௧)

மதிமி லைச்சிய சடாடவிக் கடவுளை மதியிற்
கதிவி ருப்பமை யடியவர் சூழ்வது கடுப்பப்
பொதிவ ளத்தமை திருப்பெருந் துறைநகர்ப் புறத்தே
துதிவி ருப்பமை யிளந்தளி ரிரும்பொழில் சூழும். (க௨)

மணிநி றத்தவன் மார்பமே வையமம் மார்பி
னணிக வுத்துவ மணிதிருப் பெருந்துறை யாகும்
பணிசெ யம்மணி சூழ்தரு பைந்துழாய்ப் படலை
யிணிம திற்றிரு நகரிது சூழ்திகழ் சோலை. (க௩)

ஆய சோலையின் மங்கைய ரம்மனை யாடப்
பாய வானர மதுகண்டு மாங்கனி பறித்துத்
தோய விண்ணக மெறிதரச் சுரரவை பற்ற
சேய மாரிவை மீடரா தென்னென நினையும். (க௪)

பொங்கர் சூழ்பசுங் கமுகின்மேற் ருவுவ புனைநீர்
மங்கு ருச்செழுந் திரையலின் கொழுந்துமாத் திரமோ
பங்க மொன்றறப் பன்மலர் வாருபு பரவக்
கொங்கு கொண்டெழு சிதநதித் திரையலின் கொழுந்தும். (க௫)

சோலை வாய்நிலா மிலாங்கவித் தலையுமஞ் சுரும்பார்
மாலை மாதரார் மார்பமுந் தாங்குவ குரும்பை
பால வாமொன்று சிறுமையின் மறைப்புணும் பருமை
யேல வொன்றலீஇ துன்னுமால் வேற்றுமை யிதுவே. (க௬)

வாவி வாளைதாய் வலிமுக மச்சுற வியற்ற
மேவி மற்றது தென்னையின் பழக்குலை மிதிப்ப
வோவி யப்பழ மாவிவீழ்ந் ததனையச் சுறத்துந்
தாவி யாவரு மிடர்க்கிடர் செய்வது தகவே. (க௭)

செடிய கந்தியஞ் சூழல்வாய் நிலவுவெள் ளாற்றுக்
கடிய வெண்டிரை வளைப்பவீழ் பழம்பசுங் கதலி
முடிய வாங்குலைக் கூனக மோதுதல் முன்னாள்
வடிவி ராகவன் வில்லுண்டை கூனுறன் மானும். (க௮)

தெங்கு சேர்பொழின் மாயவ னிற்பது சிவனுந்
தங்கு செவ்விய தேத்தடை சக்கரம் போலு
மங்கு வெண்பிறை யொருபுறத் துறல்வளை யாகும்
பொங்கு செங்கதிர் நடுவுறல் கவுத்துவம் புரையும். (க௯)

நந்த னங்களி னல்வகை மலர்களு நந்தி
மந்த மாருத மேற்றமர் தாக்கரு வண்ட
ரந்த மில்லென வீழுத லமரர்தே மென்று
முந்த வந்தவு ணர்கள்பொர மொய்ப்பது புரையும். (௨௰)

மன்னு மேன்மைசா திருப்பெருந் துறைப்பெரு வளத்தண்
மூன்னு சிற்சில பொதுமையின் மொழிந்தன மப்பாற்
றுன்னு மூவகை நகருளும் படைபல துதைந்து
மின்னு கின்றதா லெயபுற நகர்வளம் விரிப்பாம். (உக)

புறநகர்.

யானைக்கூடம்.

கோடு கொண்டன மணியுடை யனமதங் குலவு
நீடு போரு வியவுருப் பெரியன கிலவு
மாடு வன்மைய வனைபொருடம் யானையின் றிடுவ
வீடு சான்றியங் கிடுவன வேற்றுமை யிதுவே. (உஉ)

கறைய டிப்புகர் முகவரை நின்றிடு கண்ப
லுறைதெ றித்திடு மதப்பெருக் குவட்டெடுத் திடலா
னிறையு மற்றது மூவகை யெனப்படு நிகழ்பாற்
பிறையு ணர்ச்சியர் வாரியென் றிட்டனர் பெயரே. (உங)

ஒருமருப்புகால் வாய்க்கரி போகிய தண்ட
மருவு றக்கறை யடிச்சுவ டுறவமற் றவற்றுட்
பெருகு றக்கடா கிறைதலாற் பெட்டளி யுண்ப
வொருக லக்கள்பன் மறையவர் கூடியுண் பதுபோல். (உச)

கறைகொள் காற்றொடர் வகத்தொட ரன்றியுங் கால்பன்
முறையெ மூஞ்செவி யடித்தொட ரெதற்கென மொழிய
நிறைக டாம்பொழி குஞ்சர மியங்குறு நிலத்திற்
குறைவி லாக்கருங் கோலஞ்செய் தெனவவை குலவும். (உரு)

எதிர மேவிய மருவலர் மருவல ரென்னக்
கதிர்கொள் வானகக் கால்கொடு கசங்குற மிதித்தும்
பிதிர்செய் திரிரி யாணமோ வாப்பெருந் தும்பி
யதிர யாத்தகூ டம்பல வயங்குவ வாங்கே. (உசு)

குதிரைப்பந்தி.

பரியெ னப்பலர் வேண்டலிற் பரியெனு மொருபேர்
தெரித ரப்பெறு குதிரைக டம்முருச் சிவணு
மரிபு ணர்ச்சிமெய் வடிப்படா விதமுளத் தமைத்தே
விரித லற்றிடத் தோய்ந்துத்தோ யாவித மியங்கும். (உஎ)

பரிக்கு ழாங்கடன் முழக்கமீ ரிடத்தினும் பரவும்
விரிக்கு கெட்டலை கவிழ்தலை மற்றவை வீசுக்
தெரிக்கு முத்தினம் விலாழியிற் சிதருறை யெனினு
மரிக்கு மோர்வட லைப்பெயர் மூராணுடைத் தன்றே. (உஅ)

சிறையி லாமலே பறந்தகொக் கெனும்பெயர் தேற்று
மறையில் பூப்பின்றி மணந்தபா டலப்பெயர் வயக்கு
நிறையி லக்கண மேவியுங் கோரப்பேர் நிலவு
மறையு ளுதமே லெழுந்தகத் தகப்பெய ராக்கும். (உக)

எங்க டம்முரு வாதிறு லெடுத்திட விளைந்த
திங்கள் சூடிமற் றதன்மிசைச் சிவணலா லினைய
வங்கண் மாலையான் மறைக்குமே லாமெனன்ப ரதனு
ணங்கள் வான்புகழ் பெரிதென நவிறல்போன் முழங்கும். (௩௰)

பகைத்த மன்னவர் மணிமுடி மிசைக்குரம் பதிக்கு
முகைக்கும் வீரர்க்கு வெற்றியே நாடொறு முய்க்குந்
திகைத்த தன்மையில் வாம்பரி பற்பல செறித்த
நகைத்த மந்திர மாவயி னெண்ணில கண்ணும். (௩க)

தேர்நிலை.

அம்பொன் செய்தகா லதன்மிசை வயிரஞ்செ யச்சா
ணும்ப ரொண்பது மராகஞ்செய் பரப்புதன் மிசையே
நம்பு நீலக்கான் மிசையொளிர் மேதக நயந்த
பம்பு தேரெலாம் பூதமைத் தடுக்கிய படியாம். (௩உ)

வெற்ற மேபொரு ளெனக்கொண்டு விளங்குமே தகவாற்
கொற்ற மார்சயத் தனமென வொருபெயர் கூறிக்
கற்ற நாவலர் புகழுந்தேர்க் காற்கடப் பதனுக்
குற்ற காற்கடப் போரரைக் காற்கடப் பொவ்வா. (௩௩)

அருக்க னென்பவ னுடொறு மாழ்கட லாழ்த
திருக்கு ருவொரு செலவன்றி மீடலுந் தெரிந்த
பெருக்க மாருமிப் புறநகர்த் தேரெனப் பிறங்கு
முருக்கு லாவுதேர் பெறுவொரு நாணத்தா லன்றே. (௩௪)

விண்ணி ழித்திடு முடியுமோர் வியாளமு நடுங்க
மண்ணி ழித்திடு மடியுங்கொ ளிங்கர் மணித்தே
ரெண்ணி ழித்திடும் படிசெலுந் தன்மையெய்த் தன்றே
கண்ணி ழித்திடு நுதலிதேர் நிலையுற்ற கடனே. (௩௫)

அடரு மாற்றல ரெதிர்ப்படி னுகவத் தன்னார்
குடரு மூளையுஞ் சோரியுங் கொழுவும்வன் னரம்பின்
றொடரு மென்புமற் றுள்ளவுந் துவையலே யாகப்
படருங் கால்வலித் தேர்நிலை யாவயிற் பலவால். (௩௬)

வீரர்நக்கை.

கண்ணி லைமத்திடார் வேலெதிர் கனன் றுமே விடினுங்
கண்ணி முன்வைத்த கால்பின்வை யாக்கழல் வீரர்
கண்ணி வப்புறு தம்மைபகு தேல்கண மேனுங்
கண்ணி வாகையே சூடலென் றும்மவர் கற்றோர். (௩௭)

ஆசை யெட்டினு நிறூஉம்பிர தாபத்தி னமைந்தார்
மாசை சேர்வது வரினுயிர் பொருளென வையார்
தேசை யார்கழ லார்பகை யெதிர்சினங் கழலா
ரீசை பாவின னிளமுனி யெனத்தகு மியல்பார். (௩௮)

சிலைவ ணக்குமு னெதிர்ப்படு மாற்றலர் திண்டோண்
மலைவ ணக்குவர் வாள்கொடு வீசுமுன் மாற்று
ரலைக டற்புவி யவர்கொள வீசுவ ரனையர்
நிலையு டைத்திற விற்றென நிகழ்த்துவா ரெவரே. (௩௯)

இனைய வீரர்த மேவலா ளருமிகல் யானை
துனைவ யப்பரி சயந்தனக் கருவிதோற் றுகரு
முனைய வாயுதஞ் செய்கரு மாய்ப்பலர் முற்றி
நினைய மேவிய விருக்கைக ளாவயி னெருங்கும். (௪௦)

வருவ செல்வன கரிபரி முழக்கமு மணித்தேர்
தருவ தாகிய முழக்கமும் பகனெடுஞ் சலதி
யொருவ மிக்கெழும் புறநகர் வளஞ்சில வுரைத்தாம்
பொருவ தொன்றிலா விடைநகர் வளஞ்சில புகல்வாம். (௪௧)

இடைநகர். வேறு.

தொகுபொன் மாடமுஞ் சுடர்செய் கூடமுக்
தகுபல் சோலையுந் தடநன் மாலையும்
புகுந ரியாவரும் பொருந்த நோக்குபு
நகுசு வர்க்கமு நரக மென்பரால். (௪௨)

பற்ற வாநளி படருஞ் சோலைவாய்க்
கற்ற மங்கையர் கைதொட் டாட்டத்தோ
மற்ற மாதரா ரூச லாடியாங்
குற்ற மைந்தரை யூச லாட்டுவார். (௪௩)

மாட மேவிவர் மங்கை மார்கைசற்
றோட நீட்டிமே லுற்ற கற்பகப்
பாட வாங்கனி பறிப்ப ரிம்மையே
பீட வாமறு மையும்பெற் றாரரோ. (௪௪)

பலவின் மாடமேற் பளிங்கை நீர்நிறை
தலமெ னுநபச் சுரபி தாவிடு
முலவு தேவுரு வுற்ற போதினு
மலம ருதெனின் மயக்கந் தீருமோ. (௪௫)

கொடிய மாடமேற் கூடு வார்திற
நெடிய வானவர் நிரம்ப நோக்கியுட்
படிய வோரழுக் காறு பற்றலா
லடிய தாமக வாக்க நீத்தனர். (௪௬)

முகைசெய் கூந்தலார் முறிசெய் கைகளாற்
நகைசெய் பந்தெடுத் தறைத ரக்கொங்கை
யுகைசெய் தொண்டகி னொக்கு மோரிடர்
பகைசெய் வார்க்குறிற் பார்ப்பு ரூரெவர். (௪௭)

தைய லார்முகஞ் சசிகொ லோவெனக்
கைய தாமதி காலை மைந்தர்கள்
செய்ய மாடமேற் சேர்ப்பக் கண்ணிடு
மைய லாவலான் மறுவென் றுயதே. (௪௮)

கோல மாதரைக் கூடும் வாஞ்சையுட்
கோல மைந்தர்மேன் மாடங் கூடலைங்
கோலன் றேர்மிசைக் கொண்டு மென்றதக்
கோல னுய்ப்புகுங் குறங்க ளூடரோ. (௪௯)

இலக்க மாயபா சவலி டிக்கும்போ
தலக்கை தாக்கலா லுதிர்வ மாங்கனி
நலக்க வொன்றனை நண்ணுங் காலையொன்
றலக்க ணீங்குற வடைத லுண்டரோ. (௫௦)

வஞ்சி யந்நலார் மாட மீமிசைக்
கஞ்சி யார்துகில் கமழ வூட்டிய
வஞ்செ ழும்புகை யடைத லாலன்றே
மஞ்சு வான்புகை யன்ன மென்பரால். (௫௧)

முல்லை மாதரார் முலைக்குத் தோற்றன்றே
வொல்லை யம்புய முறுக்கு டைக்கிடும்
புல்லு றுதபங் கம்பு ரிக்கிடிற்
சொல்லு மீதொன்றே பல்ல துன்னுமே. (௫௨)

பிணைய னார்முலை பிறங்கு கைத்தழீஇ
யணையு மைந்தர்த மார்ப முந்துவ
துணையி லாத்தமிழ் முனிகை தொட்டபோ
திணையி லாவளை யழுந்த லென்னவே. (௫௩)

துங்க மைந்தர்தஞ் சிகையிற் றோகைமார்
பங்க யப்பதச் சுவடு பாய்தலா
லங்க நான்மறை யாய்ந்த வேதியர்
தங்கண் மைந்தரெச் சாதி யாருமே. (௫௪)

ஆவி வாயினி தாடு மாதரா
ரேவி னும்விழி யிருலை மாரெனத்
தூவி யோதிமந் தொடர்ந்து செல்லுவா
ரோவில் பேதைமை யொழிக்க வல்லரோ. (௫௫)

மங்கை மாதரார் வாரி சம்பொருடன்
செங்கை மேவுவ தின்னை தேருங்கா
லங்கை யாவடி வக்க லார்தடங்
கொங்கை யுந்தக மேவல் கூடுமே. (௫௬)

நீடு தோள்வலி நிலைஇய மைந்தர்கள்
பாடு மாதரைப் பரிந்து வேட்டொளி
யோடு பேர்மறு கூடு லாவுத
னூடு மிந்திர னறமு றப்பனல். (௫௭)

காவ ணத்திடைக் கதலி யாத்துமென்
பூவ ணத்தொடை புனைதல் செய்தபே
ராவ ணத்தெழில் கேட்ட டைந்தவர்
மாவ ணத்தவா னுலகம் வாஞ்சியார். (௫௮)

மண்டு தீஞ்சுவை வாய்ந்த சிற்றுணக்
கண்டு நேருறக் கனியு மற்றவுங்
கொண்டு போமெனக் கூறுந் தேமமு
துண்டு ளார்க்கும்வா யூற்றுண் டாக்குமே. (௫௯)

நயம மைந்தசொன் னங்கை மார்முலை
யியலு மைந்தர்க ளியாவ ராயினும்
புயகெ ருங்குறப் புரியும் வீதிக்கு
நியம மென்றபேர் நீதி யாங்கொலோ. (௬௦)

கடையு றப்படா வளங்க ளிந்திடு
மிடைக கர்ச்சிறப் பென்னு மாத்தன
மடையும் விண்ணுல கதனை யென்னுபு
மிடையு முண்ணகர் வளமும் வின்னுவாம். (௬௧)

அகநகர். வேறு.

அ க ழி.

போழ்ந்தவண் குசைநுனி யனைய புந்தியர்
தாழ்ந்தபல் கலைகளு முணர்ந்த சான்றவர்
வீழ்ந்தநுண் புலமையர் மிளிர்க ருத்தினு
மாழ்ந்தது சூழ்ந்தபே ரகழி யென்பவே. (௬௨)

எண்ணிய கடலெலா மிந்த வண்ணமாப்
பண்ணிய வெனவிதிக் குணர்த்தும் பான்மைகொண்
டண்ணிய சிவபிரா னமைத்த வாழியா
நண்ணிய பெருந்துறை நகர்க்கி டங்கரோ. (௬௩)

வாரியு ளொளித்தமை நாகம் வண்டமி
ழாரியன் குடிக்குத்தெவ் வறியு மேயென்று
பேரிய லரணமாப் பிறங்கிப் பாம்புரி
சேரிய நினைக்குமேற் செப்ப வின்னுமென். (௬௪)

ஒருகடல் கண்டமேற் றுள்ள வாரியுந்
திருகறச் சேர்த்தறி வாஞ்சை தீர்த்தனஞ்
சுருதிசொ லிங்கர் சூழ்கி டங்கெனுங்
கருதருங் கடலினைக் கண்ட பின்னரே. (சுரு)

வெளியுற மணவர லிந்த மாதிவீ
களிகரா முன்னுறக் காணும் பேருடத்
தெளிகல மகம்புறக் திய தேற்றமை
யளிகலப் புத்தர்மா றுய மைந்ததே. (சுசு)

மதில்.

மும்மதில் வானவர் முனிய மேயதா
லம்மதி லிறைவனு லழலப் பட்டவென்
றிம்மதின் மற்றவர் விரும்ப வெய்திமற்
றெம்மதி லிதற்கிணை யென்னக் காக்குமே. (சுஎ)

பொடியது கொடியது கோணை நாஞ்சில்சா
னெடியதென் பாரடுக் கன்று நீள்பொறிக்
கடியதா லொருபொருள் கண்ணிற் கண்டன
முடியதொன் றனைவிழி முகந்த தில்லையால். (சுஅ)

உயர்மதி லுயர்மதி லென்று ணாக்குமிப்
பெயர்மதி லிதுமற்றைப் பெரும திற்கெலா
முயர்மதி றுன்விதி யண்டத் துச்சியாம்
பெயரதி னுயர்திறம் பெற்ற தில்லையால் (சுகூ)

பொறியடக் குபுபகைப் புலங்க டந்தகஞ்
செறிதர வுயர்பொருட் சிவமி யாவரு
மறிதர வுயர்தலா லனைய மாமதி
னெறியமை முனிவரர் நிலைமை காட்டுமே. (எ௦)

கதிர்மதி முதலவாக் கரையுங் கோளெலா
மதிர்வற வழங்குதற் காய கொச்சிவாய்
முதிர்பகைக் கஞ்சுபு மூடு றுப்புத
வுதிர்தலி லாத்திறத் துற்ற வென்றுமே. (எக)

பரத்தையர்வீதி.

இராப்பக லெனுதினை விழைச்சி யற்றலால்
விராய்த்தழு வுகரிவ ரொனுத மெய்ம்மையா
லராப்படக் கடிதடக் கணிகை யக்கலா
ரொராப்பெருஞ் சேரிமற் றும்பர் சேரியே. (எஉ)

அடிநிலங் கூடில வணியல் வாடில
கெடியகண் ணுடில நிற்ப வோவியங்
கடிமனைச் சுவர்ப்புறங் கணிகை யக்கலார்
படிகல நசைஇச்சுரர் படர்ந்த தொக்குமே. (எங)

நகைக்குறி ஈகக்குறி நயந்த ணைத்திடல்
வகைப்பய னுறுசுவை யமுத மாக்கிட
நகைத்திற முறுதுலை தட்ட லாதிய
முலைத்தலோ வியத்தெரி மாண்பின் முற்றுவ. (எச)

பாடலாற் சிலர்பொருள் கருவி பம்பலின்
றூடலாற் சிலர்பொரு ளலர்வி னோதத்தி
னீடலாற் சிலர்பொரு ணேயம் போல்விசாய்க்
கூடலாற் சிலர்பொருள் கொள்ளை கொள்வரே. (எரு)

முன்னவர் கலப்பினு மூரி நீர்ப்புவி
மன்னவர் கலப்பினும் வணிகர் கூடினும்
பின்னவர் கலப்பினும் பெட்டின் பாக்குவா
ரென்னவ ருக்குமின் பாக்கு மீசன்போல். (எசு)

முன்னிய வெச்சிலியா வருமு கத்தலால்
வன்னியும் பொதுமட வாரு மொத்தன
ரென்னினு மிருவரு மீயும் வெப்பந்தான்
றன்னிடி னீங்கிடிற் சுடுதல் வேற்றுமை. (எஎ)

கணிகையர் பொதுநலங் கருத்தி னெள்ளுநர்
தணிவரி தாகிய தரும மெள்ளுவா
ரணிதரு மூருணி யறலை யெள்ளுவர்
பிணிதவிர் முத்தியின் பழமுட் பேணலார். (எஅ)

வெள்ளணி செவ்வணி மேவி மற்றவ
ரொள்ளணி வீதிவா யுலாவு மங்கையர்
தள்ளரு மவர்பெருந் தவத்திற் பூந்தளி
விள்ளரு மங்கையர் விராய தொக்குமே. (எகூ)

கலையழுக் குறுமையாற் சிவிறி கைவிடார்
நிலைதிறந் துடம்பின்வே றெழாத நீர்மையான்
மலைமலர் வாடுறு வண்ணஞ் சூடலா
லலைகடற் புவியகத் தரம்பை மார்களே. (அ0)

இப்புவி யரம்பைய ரென்ற தென்னெனிற்
றப்பில்பூ சுரரெனு மொழியுந் தப்பதா
மொப்பரும் பரத்தைய ருறையுஞ் சேரியி
னப்பெரு வளந்தெரிந் தளகை தோற்றதே. (அக)

வேளாளர்வீதி.

கரைபொரு நதிகளுட் கங்கை மேலதவ்
வுரைபெறு நதிகுலத் துதித்த வேதுவாற்
றரைபுகழ் தூய்மைமுன் னுய சார்ந்தசீர்
வரைவில்வே ளாளர்தந் தெருக்கண் மல்குவ. (அஉ)

தினகரன் முனமிருள் செறிவ தாயினு
முனகரு ணல்லருண் முயங்கு மாயினு
மனகமெய்க் கருணவே ளாண்மை மாக்கட
யினமனை யிடைப்பசி யில்லை யில்லையே. (௮௩)

அருமருந் தனையவே ளாள ரோம்புவர்
வருவிருந் திலரெனில் வாட்டந் தீர்வரோ
கருமுகில் வேண்டிய காலம் பெய்வதை
யொருவுறி னுய்குவ துலக மெங்ஙனம். (௮௪)

மின்னிய புலமையர் மேவி நாடொறு
மன்னிய பொருட்கவி மாலை சூடுவர்
துன்னிய வுற்பலத் தொடையின் வாட்டமுன்
ஞன்னிய திறத்தர்மற் றெதையு வப்பரே. (௮௫)

கொடையொடு முகமனுங் குறிக்கொள் சீலகன்
னடையொடு ஞானமு நக்க வுற்பலத்
தொடையொடு செந்தமிழ்த் தொடையு நாடொறு
முடையவர் தெருவள முரைக்க முற்றுமே. (௮௬)

வைசியர்வீதி.

கணிதமில் வயிரமுங் கமல ராகமு
மணிமணித் தாளமு மவிர்கோ மேதமுந்
தணிவில்வித் துருமமுந் தாம்ப ரம்பலால்
வணிகர்த நெடுந்தெரு வலன விந்ததேம். (௮௭)

எதுபுகூஉ வினவினு மினஞ்சுட் டாமலே
யதுதர வல்லவ ரிம்மி யாயினு
முதுகணக் கிடையொழி யாமு யற்சியர்
கதுவுதல் விடுதலுட் கணித்துச் செய்வரால். (௮௮)

கொன்னுநாட் கொள்ளலுங் கொண்ட யாவையுந்
தன்னுநாட் டள்ளலுந் தெரிந்த தன்மைய
ரன்னுநா ளுவப்பதி னவைதம் பானின்றும்
வின்னுநா ளுவப்பது மிக்க தாமன்றே. (௮௯)

நிறையுயிர் புணர்தர முன்ன நின்றதாங்
குறையுயி ரொழிதரல் குறித்துக் கற்பவ
ருறைதரு நந்தொழி லொத்த தாமென
மறைதவி லாப்பெரு மகிழ்ச்சி பூப்பரே. (௯௰)

ஒருபுணர்க் கிரண்டுமுன் றற்ற காலையுங்
கருதுறு தோன்றலி லுவத்தல் கைக்கொள்வா
ரருநிதிக் கிழவனி னுதுந் தாளினாற்
றிருவெனு மவர்தெருச் செப்ப முற்றுமோ. (௯௧)

அரசர்வீதி.

மருவல ரொடமர் வலியச் செய்தவர்
திருவுறக் கவர்ந்தவின் செல்ல வுய்த்தமன்
ஞெருசில வாத்தடுத் தாண்டின் புய்த்திடும்
பெருமனிற் பொலிபவர் தெருப்பி றங்குவ. (௩௨)

மகபதி யமர்த்தகாண் மற்றிம் மன்னர்பாற்
றகவடைக் கலம்புக நகவெ ஞச்சில
ககமடைத் தெனப்பொலித் துயர்கன் மாளிகை
யிகவரு மன்னர்த மியல்பென் சொல்லுகோ. (௩௩)

வண்டுதொட் டிடுமுனம் வண்டு தொட்டிடா
மண்டுதார் தரியலர் மார்பிற் சூட்டவான்
கண்டுகோர் மொழியவர் கண்டு கொள்வரே
லண்டமற் றவர்திற லறையப் போவதோ. (௩௪)

அரியுகைப் பவனித்த மம்பு யங்கொடு
கரியுகைத் திடுதலுங் கலினம் பூண்டவாம்
பரியுகைத் திடுதலு முருளை பாய்பரித்
திரியுகைத் திடுதலும் வல்லர் கேடிலார். (௩௫)

ஆடலும் பாடலு மனுப வித்திரா
வூடலுங் கூடலு மொருங்கு துய்த்துகைத்
தோடலும் வாடலு முருப்ப கைத்திற
லாடலு முளார்திற னவில முற்றுமோ. (௩௬)

மறையவர்வீதி.

மிகுமறை யங்கமோ டுணர்ந்த மேன்மையாற்
றகுமறைக் கொடியொரு கையிற் றாங்கினர்
நகுமறைப் பொருளுற நயந்த சிந்தையார்
தொகுமறை யவர்தெருச் சொல்ல நின்றதே. (௩௭)

தவமறை யவர்மகச் சாலை வாடுனெரீஇக்
குவலயம் பயிலுமா கூட்டி யூட்டலா
லிவர்தரு பெரும்புக ழிந்தி ராதிய
ரவரையும் பூசுர ராக்கி னாரரோ. (௩௮)

முதல்வழி சார்பெனு மூன்று நூல்களு
மிதமுறத் தங்கணெஞ் சிருக்கு மென்பதைச்
சுதமின்மு நூல்களுந் தோயப் பூணலாற்
கதமறக் காட்டுவர் கரிசின் முன்னவர். (௩௯)

விற்படை வாட்படை யாதி வேறுள
கொற்படை கமப்பவ ரியாருங் கும்பிடப்
பொற்படை மந்திர மென்று போற்றிடுஞ்
சொற்படை சமந்தனர் துன்ன லாரற. (௪௦)

அதிதியர் பசித்தழ லவித்தக் கற்பெனும்
பொதிதழல் வளர்த்திடும் பொன்னங் கொம்பனார்
மதிநுதற் பார்ப்பன மடந்தை மார்செறி
துதிமறை யவர்தெருச் சொல்லத் தீருமே. (௧0௧)

ஆதிசைவர் மாளிகைகள்.

மறையுட னாகம முணர்ந்த மாட்சியர்
பொறையொடான் மார்த்தப ரார்த்தம் போற்றுவா
ரறைபெரும் புகழ்மிகு மாதி சைவர்வாழ்
நிறைவள மாளிகை நிலாமோர் சாரெலாம். (௧0௨)

வைதிகசந்நியாசிகள் மடங்கள்.

மறைமுடிப் பொருளுணர்ந் தவர்ம யக்கமோ
ரிறையுமில் லவர்பகை யெறிம ழுப்பொருஉங்
குறைவிறண் டியாத்தவெண் கோவ ணத்தின
ருறைதிரு மடங்களு முள்ளவாங் கோர்சார். (௧0௩)

சைவாசாரியர்களிருக்கை.

மேவரும் பக்குவம் விரும்பி நோக்குபு
மூவகைத் தீக்கையு முறையி னற்றிமுன்
னேவருஞ் சரியைமுன் னியங்க வுய்த்துயர்
பாவனஞ் செய்பவ ரிருக்கை யும்பல. (௧0௪)

சைவசந்நியாசிகள் மடங்கள்.

பதிபசு பாசத்தின் பகுப்பு ணர்ந்தற
மூதிர்தர வுருவமுன் மூன்று முற்றரு
ளோதிறக் கண்டுமே லின்ப மார்சைவ
மதிமுனி வாருறை மடங்க ளும்பல. (௧0௫)

கல்விச்சாலையும் பிறவும்.

இலக்கண விலக்கிய மெலாமு ணர்த்துவார்
கலக்கமில் கழகமுங் கவிமுன் னுல்வரு
முலக்கரும் வாதஞ்செய் துறையி டங்களும்
விலக்கரு மற்றவு மேய வோர்புறம். (௧0௬)

அன்னசத்திரம்.

மூரிவரு முல்லைவெண் முகைய மூரலுக்
தெரிசெழும் பொன்னிறப் பருப்புந் தீஞ்சுவை
யிரிதராக் கருணையும் பாகு மேனவும்
பரிவொடு மூட்டுசத் திரமும் பல்லவே. (௧0௭)

தண்ணீர்ப்பந்தர்.

தினகர னெழுமுனீர் தெவ்வி யோரனா
யினநிறை தோறுமுப் பிலிகு சங்கலந்
தினலுற வாக்கியோர் கனியு மொப்பகல்
கனபுனற் பந்தரு மனந்த முண்டரோ. (௧௦௯)

திருக்கோயில்.

தூயபல் வளப்பெருந் துறைசெம் பொற்றக
டாயது பற்பன்மா ளிகைய தங்கணே
மேயபன் மணிநெடு வறவி ளங்கிடு
நாயக மாமணி நம்பி ரான்றளி. (௧௦௧)

மாணிக்கவாசகசுவாமிகள் மண்டபம்.

சிகரமுன் மேயதோர் தெய்வ மண்டபங்
ககனமார் விச்சுவ கன்ம னேயடைந்
தகலறப் புரிந்ததென் றோத லாமலா
லகனிலத் தாக்குந ரரியர் போலுமே. (௧௧௦)

கோடிய கொடுங்கையுங் குலவு தூண்டொறு
நீடிய விம்பமு நிகரி லுண்டொழில்
கூடிய யாவுமுட் குறித்து நோக்கினு
மாடிய சேடனு மறைய வல்லனோ. (௧௧௧)

திருக்கோபுரம்.

யானன வுரைப்பதற் கெளிய தாகுமோ
வானன வுயர்ந்தபொன் மணிசெய் கோபுர
மீனன வோங்குபு மேலும் போங்கொடிக்
கானன வதேநெடுங் ககனந் தாங்குமால். (௧௧௨)

திருமதில்.

மதில்கடந் தவனென வயங்கு மையனிம்
மதில்கட வானென வழங்க வோங்குபொன்
மதில்பல கதிரவன் மதிமுற் கோள்கணம்
மதிலென நாடொறும் வைக வைகுமே. (௧௧௩)

குதிரைச்சேவகர்மண்டபம்.

ஒருபரிச் சேவக னுய வுத்தமன்
மருவுமற் புதப்பெரு மணிசெய் மண்டபந்
திருவமிக் கோங்குற தெய்வ நாட்டினு
மருமைய தெனிற்பிறி தறைவ தென்னையே. (௧௧௪)

குருந்தவிருட்சம்.

மறைமுத லாகமம் பரானா வண்கவ
நெறைதரு புராணமந் திரக்க ளொண்கிளை
யறையிலை யரும்பலர் வாசந் தேனைந்தாக்
குறைதவிர் ஞானமாக் குருந்த நிற்குமே. (௧௧௫)

குருந்தமூலச்சபை.

செழுமலர்க் குருந்தமேற் கவித்தல் செய்திடப்
பழுதில்பொற் றகடேறப் பாப்பு மோர்சபை
யெழுதரு மறைமுடிக் கெட்டு ரூவொரு
முழுமுத லுருவென முன்ன மேவுமே. (௧௧௬)

சிவயோகாம்பிகைகோயில்.

ஒள்ளிய வருந்தவ யோக நாயகி
வள்ளிய வருவென வயங்கு மோர்தளித்
தெள்ளிய பொன்மயச் சிகர மாதிய
நள்ளிய கவர்தரு நயனம் யாவையும். (௧௧௭)

மாணிக்கவாசகசுவாமிகள்கோயில்.

மன்னிய மாணிக்க வாச கப்பிரான்
றன்னிய பெருந்தளித் தொக்க பன்மணி
மின்னிய விளங்குதல் விலழந்து நோக்கிமிக்
குன்னிய கதிர்வெதுப் புற்றி யங்குமால். (௧௧௮)

படைகற்புகை.

ஆயபொற் படைகளின் ரூவி மேலெழூஉ
வாயிலின் வெளிப்படல் வழுதி முன்னொநா
ளேயகொண் டலைச்சிறை யிட்டு விட்டிடத்
தாயது செலுமொரு தன்மை தேற்றுமே. (௧௧௯)

மகதியாழ் முனிவரன் வடித்த வீணையி
னிகரிலா வொலிமறை நிகழ்த்து பேரொலி
குறையிலாத் தமிழ்மறை குலாய பேரொலி
முறையறு காலமு முழங்கு கின்றவே. (௧௨௦)

இன்னவாம் பெருவள மியைந்த கோயிலு
ளுன்னரும் பெருந்தவ யோக மாதெனு
மன்னமென் னடையொடு மான்ம நாயகர்
நன்னலத் தருணெறி நடாத்தி வைகுவார். (௧௨௧)

மறுவறு பெருந்துறை வளமெ லாஞ்சொல
வுறுநசை யொருவிதத் தோதித் தீர்த்தன
மறுபகை யுந்தவிர்க் கையர் வாழ்தரப்
பெறுவன நைமிச வளமும் பேசுவாம். (௧௨௨)

திருநகரப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௨௮௦.

# நைமிசப்படலம்.

மந்தி ரிப்பவர் மனத்துளாய் மற்றவ ருறுகண்
மந்தி ரிப்பவ ரின்னும்வான் பேரரு ணனிசு
மந்தி ரிப்பவ ரானந்தத் துய்ப்பவர் வழுதி
மந்தி ரிப்பவ ரவரெமைப் புரப்பவர் மன்னோ. (௧)

மந்தி யாயிர கோடிவீழ் பசுந்துழாய் மார்ப
னுந்தி யாகிய தாமரை முளைத்தெழு மொருவன்
முந்தி யாவையும் படைத்தனா ளிடைத்தவா முயற்சிப்
புந்தி யாகிய விடங்களிற் றோன்றிய புனிதர். (௨)

அனையர் தம்வழித் தோன்றிய பற்பல வறிஞர்
நினைய வல்லமற் றவரரு ணிரம்பிய நெறிசால்
வினையம் வல்லவ ராயபன் முனிவரு மேவித்
துனைய வோரிடைக் குழுமியுள் ளத்திது சூழ்வார். (௩)

வந்தி டத்துமை மணாளன்மிக் காரருள் வழங்க
வெந்தி டத்துனா மிருந்தருந் தவஞ்செய வியலு
மந்தி டத்திடை யூறுறு தென்றெடுத் தறைய
நந்தி டத்தவன் மதலையை நண்ணுவா மென்று. (௪)

தண்ணந் தாமரைக் கிழவனை யடைந்தனர் தாழ்ந்தார்
வண்ணம் பொன்னினும் வயங்குவா யருந்தவம் வயக்க
வெண்ண மெங்களுக் கதற்கியை தேமிதென் றிசைப்பாய்
வெண்ணந் தேர்ந்தியோ னறிதரா வருளொடு விராவி. (௫)

என்ற புண்ணிய முனிவர்சொ லஞ்செவி யேற்று
நன்றெ னின்கொடி யுயர்த்தியோ னுள்ளத்து நாடி
முன்ற யங்கொரு தருப்பையை நேமியா முடித்து
சென்ற லங்கிட விவர்க்கிடங் காட்டெனச் செப்பி. (௬)

உருட்டி விட்டன னீதுரு ளாதுதங் கிடமே
தெருட்டி நின்றநீர் தவஞ்செயு மிடமெனச் செப்ப
வருட்டி றன்குறித் தஞ்சலி செய்தன ரவனி
வருட்டி யேகுமவ் வனைவழி மாதவர் சென்றார். (௭)

சென்ற நேமிவெண் டிரையெறி கங்கையந் தீரத்
தோன்ற மேவிய வுதக்குற மொருவனத் துற்ற
நன்ற மைந்திடத் தங்கிய தாதலா னாளும்
வென்ற வவ்வன நைமிச நாமமே வியதால். (௮)

மன்னு மாதவர் தவத்திறுக் கூறவா னவுணர்
றன்னு மாசெயி னவர்தலை துணித்திடற் பொருட்டு
மின்னு மாமணி மார்பினன் விடுத்தசக் கரம்போ
லுன்னு நான்முகன் விடுத்தசக் கரமவ ணுறையும். (௯)

அலைக்கும் வெம்பொறி யாகிய பகையைந்து மடக்கி
நலைக்கு முன்மையா கியபெருஞ் செய்யகோ னடத்தி
முலைக்கு மாதவ வரசவ ணமர்ந்தேழு வுலகு
முலைக்கு நேமியொத் ததுமல ரோனுய்த்த நேமி. (௧௦)

வான யாறதோய் தலின்மதி தவழ்தலின் மதலைக்
கான மேவலின் வில்லுவங் கமழ்தலிற் கண்ணென்
றூன செற்றியான் சடாடவி யையிச வடவி
யேன மான்மகன் காண்பதோன் றெய்தில தொன்றே. (௧௧)

இருக்கு மேவிய வலக்கைமா முனிவர்வெ ன்றினைவத்
தருக்கு மேயமா னொருபறத் துரிஞ்சு தவிர்க்க
மருக்கு லாமல ரிடக்கையா லவரதை வருட
லிருக்கு மோருரு வெய்தினேக் கிடத்தழா லேய்க்கும் (௧௨)

உரைக்குஞ் சிதன மவ்வன முறப்பரப் புதலால்
விரைக்குத் தார்முடி வானவ ரொடுதின மிளிர்தா
மரைக்கு நாயகன் சருக்கொள மேவுவன் குமுத
திரைக்கு நாயக னேயெனத் தோன்றுவ னிரம்ப. (௧௩)

கனிசெய் மாதவப் பெருமைய ரைந்தழ லுப்பட்
கனிவி னுன்பல வமர்ந்திளங் கலங்குறா திருத்தல்
பனிய டர்ப்பவன் வெப்பமுட் புகாவகை பாற்றித்
தனிவ யக்குமவ் வனந்தரு தண்மையா லன்றோ. (௧௪)

பெருகு மாதவர் புரிமக குண்டத்துப் பெருக்கி
யுருகு நீர்மையக் கொழுந்தெழீஇச் சுடுதலி னக்தோ
வுருகு கம்மல கெனச்சா ருள்ளஞ்சி யன்றோ
கருது மாமுகில் வானயா றடியுறக் கண்டார். (௧௫)

யோக மாதவர் பலர்குழீஇ கனிமுயன் றுஞற்றும்
யாக சாலையி னெழும்புகை யிடைப்படிக் தன்றோ
மேக சாலங்கள் கறுத்தன மற்றவை விராவ
லாக மெங்கணுங் கறுத்தா லுவர்க்கட லம்மா. (௧௬)

காத மேலவ னடிக்கலப் புறுவது கயத்தா
ரோத மேவுறு டிகிலெப் போதுநீத் திருத்தல்
போத வாம்பலா வினாவுயர் காவல்பூங் கதலி
சூத மாதிய தருக்கனிச் சுவையுணர்க் தன்றோ. (௧௭)

கண்ட பேர்சுத ரிசனமா னமக்கெனக் கரையத்
தண்ட வாத்தளி ரிலைமலர் காய்கனி தழையக்
கொண்ட மேன்மைய தஃதுணர்ந் தேகுல மலர்மே
லண்ட னேமிதன் பெயரிலை யவட்டவிர்ந் தன்றே. (௧௮)

ஒளிக்கு மாசொரு முனிவரன் வையவு முறந்து
களிக்குந் தானவ ரிலக்கவு மொருவன்கைக் கவர்ந்து
தெளிக்கு மாநில நிறவவும் படாத்திரு வனத்தை
யளிக்கும் வன்மையி லாதயாம் புகழுதற் காமோ. (௧௯)

இன்ன நைமிசப் பெருவன வாழ்க்கைய ரின்னு
மன்ன மேனமு முணர்தரா னலங்குவெண் ணீறும்
பன்ன வாம்புகழ்க் கண்மணி மாலையும் பரிப்பார்
சொன்ன வைந்தெழுத் தோதுவ தலாற்பிற சொல்லார். (௨௦)

சதம கத்திறை வாழ்பத நறஞ்சத தனஞ்சா
ரிதம லர்ப்பொருட் டிறைபதங் கொடும்பகை யெறியுங்
கதமி குத்தசக் கரத்தவன் பதமெலாம் வமன
பதமெ னக்கருத் துறவினைப் பவருட் பவரே. (௨௧)

இன்ப மெய்தினு மெதிர்மறை யெய்தினு நமக்கு
முன்ப மைந்தன வாமுட லூழென முன்னும்
வன்ப மைந்தவர் வரைபொரு குணத்தவர் வயங்கு
கன்ப யச்சுர தேனுவிற் பயன்படு கலத்தார். (௨௨)

கொடியகா லெழுஉக் குலவரை யொன்றன்மே லொன்று
படிய வீழ்தர வெறியினும் பரவையே ழெழுந்து
முடிய மூடினும் பூதமைந் தடுக்கிய முறைமை
மடிய மேவினுந் தந்நிலை மடிதரா வலியார். (௨௩)

மன்னு சங்கரன் மான்மியப் புகழ்ச்சிர வணத்தார்
பன்னு மற்றவ னருட்குறி பூசிக்கும் பண்பார்
துன்னு மாநிக மாகம வுணர்ச்சியிற் றேலார்
பின்னு மிப்பவஞ் சத்தியல் பொழித்துயர் பெரியார். (௨௪)

மாத வத்துயர் சவுனக னகத்தியன் வசிட்டன்
கோத மன்சுதிக் கண்ணன்போ தாயனன் குசரு
காதல் வித்துசான் டில்லியன் சருச்சரன் கபிலன்
சாத நீர்புகழ் விச்சுவா மித்திரன் சங்கன். (௨௫)

ஆணி மாண்டவி யன்கருக் கன்னர பத்தன்
பாணி னிப்பெய ரான்பரா சரன்பயி லவனே
கோணி ரண்டோ லினன்பிர சண்டன்குச் சகனே
மாணி ரப்பியன் புருசண்டி புலத்தியன் வச்சன். (௨௬)

கிருதன் பார்க்கவன் றிரணது மாக்கினி கிரீசன்
றிருதன் சம்புச தானந்தன் சனகன்மா தேவன்
பிருகு ரோமசன் சனந்தன்மா தேசனே பிருங்கி
வருப ரத்துவா சன்புல கன்வாம தேவன். (௨௭)

த்தி கூசமாண் டன்றத்தாத் திரேயனங் கிரசு
முத்தி சால்சனற் குமாரன்று லப்பியன் முற்க
னத்தி ரிப்பெய ரான்கணப் புச்சனே யசிதன்
சித்தி சாலக மருடணன் புகழ்ச்சனச் சேபன். (௨௮)

இலகி தன்வச காத்திபா யனனிரும் பகவன்
வலச கன்றதி சிப்பெய ராளிமார்க் கண்ட
னலச ஞாதன்கண் ணுவன்விபண் டகனகு சாதன்
மலமி லாபத்தம் பன்கிரி சரன்றுரு வாசன். (௨௯)

கற்கி சந்திர சூடன்கா சிபனருட் காணன்
முற்க லன்சம தக்கினி சரபங்கன் முழங்கு
கற்க லைச்சிருங் கன்சுனன் புசுண்டனு ரதன்சீ
ரொற்க மில்சிலா தன்றாம பாலனெண் சுதன்மன். (௩0)

பதுமன் சிருப மனியன்சா தாதபன் பாவு
முதுபு லத்தசா பாவிபப் புருமொழி சுமந்து
சதுமு கன்சொலுக் கிரவீசி யன்றவு மியனே
விதுமு டிக்கன்பு சால்கவுண் டின்னிய மேலோன். (௩௧)

அரித கன்சவு பரிபருப் பதனரு வமைந்து
பிரிய மார்தரு மாசுவி லாயனன் பிறங்கி
விரியுஞ் சிர்ச்சன கன்குணக் காலவன் மேன்மை
திரித ராததே வலன்றிர ணவிந்துமுற் செய்யோர். (௩௨)

சிறந்த வோரிடைக் குழீஇயினர் திகழிம வரைத்தோன்
றறந்த வாக்கொடி பக்கின ருளத்தருள் கூர
வுறந்த வாறிரண் டாண்டன வுஞற்றமோ ரியாக
மறந்த பப்புரி வதற்குபக் கிரமித்தார் மன்னோ. (௩௩)

விதிய மைந்தபுண் ணியமகச் சாலையின் மிக்க
துதிய மைந்தபன் னியர்மகார் துவன்றுமா ணுக்க
ரதிவி ருப்பினிற் றத்தமக் கியல்பணி யாற்ற
மதியின் மிக்கவர் மனுப்புகன் றழல்வளர்த் திடுகால். (௩௪)

முன்னு மாதவர் தங்குழாத் திற்கொரு முகமாப்
பன்னு பேரருட் சவுனக முனிமுகம் பாரா
மன்னு மாநில வரைப்பினி லவின்மான் மியத்த
வின்னு மாலய னுணர்தரான் றனிபல வென்ப. (௩௫)

அனைய மாத்தனி யருவுரு வுபயமென் றறைவு
மினைய மூன்றனு ளருவமு முபயமு மெய்திப்
புனைய நன்றமை தலம்பல வுள்ளன புந்தி
நினைய நோக்கியுங் கேட்டுமியா நிரம்பின மூவகை. (௩௬)

ஆதி யோதிய வுருபமாய்ப் பரசிவ மமருஞ்
சோதி யார்தல மின்றவ வுணர்த்திலத் தோன்றாஞ்
கோதி லாயஃ தினதில தென்பதுங் குறியே
மோதி னின்னல துணர்த்திடு வார்பிற ருளரோ. (௩௭)

என்ற கூறலுஞ் சவுனக னெடும்பொழு தெண்ணி
நன்று கூறினீர் காணுமோர் தருநசை யுடையே
னின்று தேற்றுவார் சூதனை யன்றிமற் றியாரே
யன்று நீரவ ணுற்றெனி வாமென வறைய. (௩௮)

அந்த வேலையி னொன்பது புராணமு மவவாச்
சந்த வோருருக் கொண்டுவெண் ணீற்றொளி தயங்கப்
பந்த மேவிய கண்மணி மாலிகை பரித்து
நந்த லைக்கெழுத் துளம்பதி தாகடந் தென்ன. (௩௯)

இரவின் முன்செலல் பகலெனிற் பின்செல லியைந்தார்
வரவு போக்கிலா னமக்கிவ னேயென மதித்தார்
புரவு பூண்டவன் வாழ்க்கையோர் பொருளெனப் போற்றார்
கரவு தீர்ந்தமா ணாக்கர்தாந் தொடருபு கலப்ப. (௪௦)

அருள மைந்திடு நாட்டமும் விகசித மாய
பொருள மைந்திடு வதனமும் புண்ணியம் பொலிந்து
தெருள மைந்திடு சிந்தையும் வடிவமுஞ் சிறப்ப
மருள மைந்திடாச் சூதமா முனிவரன் வந்தான். (௪௧)

வந்த சூதனை மறைவர வெதிர்கொளு மயிலிற்
சந்த மேயபொன் வைப்பினை யெதிர்கொளுந் தணியாப்
பந்த மார்வறி ஞனிற்குரு வெதிர்கொளும் பழநா
ளந்த வோர்கரி லருந்தவ ரெதிர்கொள நயந்தார். (௪௨)

இருக்கை நின்றெழீஇ யாடினர் பாடின ரெதிர்சென்
றிருக்கை யோதினர் பணிந்தன ரியம்பினர் முகமன்
றிருக்கை நீத்தவ ரழைத்துவந் தாதனஞ் சேர்த்துத்
திருக்கை யாலருந் தியமுதற் செய்வன செய்தார். (௪௩)

நின்ற காலையி னியசொல் லிருகே ரிருக்க
வென்ற தோர்க்திரு மருங்கினு முவப்புட னிருந்தா
ரன்ற வேலையிற் சவுனகன் கைதொழு தறைவா
னன்ற வாமக மொன்றுநாந் தொடங்கின மெப்ப. (௪௪)

ஆய வேலையெத் பார்த்துறு வரமெலா மமல
நாய னாரு வாயமர் தற்றல முளதோ
மேய பாரிடை யில்லதோ சொல்லென வினவத்
தூய நீற்கொடு தெரிதர லாமெனச் சொற்றேன். (௪௫)

நீயு மப்பொழு தெய்தினை யாமெலா நெடுநா
ளாயு மாதவ மாற்றின மாலென வறிந்தாம்
பாயு மால்விடைப் பகவனே யனையநீ பரிவுற்
றேயு மெங்களுக் கிசைத்திடல் வேண்டுமென் றிரந்தான். (௪௬)

உரைவி னுவிரு செவிக்கணு மமுதமூற் றியது
புரைய வேறலும் புத்திய னுவப்புமீப் பொங்க
கரைகோ ளேற்றினு னருள்கொலிவ் விறுவென நயந்து
கரையு ளத்துற நெடும்பொழு தெண்ணுபு கண்டு. (௪௭)

இருக ரங்களுங் குவித்தனன் கண்கணீ ரிறைப்ப
மருவு மன்புளந் ததும்பிட வாய்மலர்ந் தருள்வான்
பொருவி லீர்வினு வியதல முளதொன்று புநிதன்
னொருவு ருதுளத் துரத்துமின் பெருந்துறை யதன்பேர். (௪௮)

இந்த மாத்தலம் வேதவே தாந்தங்க ளெல்லா
முந்த வோதிடு மருபமா யமர்ந்துநம் முன்னோன்
பந்த மோக்கமாங் கருணுவ னதன்றிறம் பகர்வா
ரிந்த மாநிலத் தில்லையப் புவனத்து மிலையால். (௪௯)

அரிய வித்தல மான்மியங் காந்தத்தி னியார்க்குந்
தெரிய மேவிய வுருத்திர சங்கிதை செப்பும்
விரிய வோர்பவு டிகமுமூற் றரைக்கு மெய்த் தவத்தீர்
பிரிய மேவிய மந்தண மாமது பேசில். (௫௦)

முதுபு கழ்த்தவ முனிவிர்காண் முழங்குமிப் புராண
மிதுவ னைக்குமீ ரொருவர்க்கு முரைத்திலெ னெனினுஞ்
சதும றைப்பொரு ளுணர்ந்தநுங் களுக்குறச் சாற்று
வதுசி றப்பென மனமெழு மாதலால் வகுப்பாம். (௫௧)

பாங்கு மாதவர் பற்பலர் சூழ்இத்தவம் பயில
வோங்கு நைமிசச் சிறப்பினிற் சிறிதெடுத் துரைத்தாம்
வீங்கு சீர்கெழு புராணத்தின் மினிர்வா லாற்றை
யீங்கு காமினி யாவருந் தெரிதர விசைப்பாம். (௫௨)

நைமிசப்படலமுற்றிற்று..

ஆகத்திருவிருத்தம் ௱௨.

---

# புராணவரலாற்றுப்படலம்.

---

நண்ணிய மூகை பேச நல்லரு ளூட்டம் வைத்த
புண்ணிய வாத வூரர் பொன்னடி சென்னி சேர்த்தா
மெண்ணிய விப்புராண மொன்றுகொ லெல்லாம் பாடத்
தண்ணிய வாக்கு முன்னு யாவையுந் தருவ ரன்றே. (க)

வெள்ளிய வுருவம் வாய்ந்து வெள்ளிய வருவி போர்த்து
வெள்ளிய மதியந் தாங்கி வெள்ளிய படிக மேனி
வெள்ளிய நீறு பூசி வெள்ளிய பிறைசூ டோர்பால்
வெள்ளிய முறுவ லானோர் வெள்ளிய கைலைக் குன்றில். (உ)

இனிதம ரந்தி வண்ணத் தெம்பிரான் பாதம் போற்றிப்
பனிமதி முகத்த ளாய பருப்பத ராசன் செல்வி
கனிவொடு மருப மாய்நீ கலந்தமர் தலமற் றியாது
நனிநசை யுடையேன் கேட்க நயந்தருள் புரிதி யென்றாள். (௩)

என்றலு முவகை பொங்க விரும்பெருந் துறையென் றோதி
யன்றதன் சிறப்பு முற்று மமைதர வருளிச் செய்தா
னன்றமை யுமையா ளோடு நந்தியெம் பிரானு மோர்க்கும்
வென்றியம் புலிக்கா லண்ணன் மைந்தனும் விருப்பிற் றேர்ந்தார். (௪)

ஆயமா தவத்து நந்தி யண்ணறன் னடிகள் போற்றும்
தூயசீர்ச் சனற்கு மாரற் குரைத்தன னனைய தோன்றன்
மேயதன் னடிகள் போற்றும் வியாதனுக் குரைத்தா னன்னு
னேயமோ டெனக்கு ரைத்தா னிகழுமோர் வகையா வின்னும். (௫)

மலைமக ளோடு நந்தி வானவன் கேட்ட காலத்
தலைவற வொருங்கு கேட்ட வடுபுலிக் காலோன் மைந்த
னிலையுப மன்னி யப்பேர் நிகழ்மழ முனிவன் சிந்தித்
துலைவிலற் புதத்த னியாங் குறைந்தான்பன் முனிவ ரோடும். (௬)

உறைதரு காளு ளோர்கா ளுயர்சிதம் பரத்திற் றொல்லை
மறைமுத றந்தை காணப் புரியுமா நடனங் காண்பா
னிறைபெரும் வாஞ்சை மேவ நிறைத்தபன் முனிவ ரோடுங்
குறைதவிர் தில்லை மூதூர் குறுகின னெடுஞ்சி ரன்னோன். (௭)

தெரிபெருந் தளியுட் புக்குச் சிவகங்கை நன்னீர் தோய்ந்து
பரிதரு சபைநேர் சென்று பயில்பர மாநந் தக்கூத்
தரியவற் புதத்த தென்னு வமைதரத் தரிசித் தேத்திப்
பிரியமிக் கவன்றன் றந்தை யடிகளும் பேணிப் போற்றி. (௮)

செழுமுனி வாருஞ் சூழத் தெய்வத சபையென் றோதும்
வழுவறு மாயி ரக்கான் மண்டப நாப்ப ணெய்திக்
கொழுமணி பீடத் தேறி யிருந்தனன் குற்றந் தீர்ப்பான்
முழுதுல களந்த மாயோன் முடியடி வைத்த மூர்த்தி. (௯)

இந்தவா றிருக்குந் தெய்வ வியலுப மன்னி யப்பேர்ச்
சந்தமா முனிவன் பாத தாமரை வணங்கிப் போற்றி
நந்தவா தரவு பொங்கி நயப்புறக் கனிவு தோன்ற
வந்தண்மா முனிவ ரெல்லா மமைதர வினாவ லுற்றார். (௧௦)

மருவருங் கயிலா யத்து மருவுநாட் டென்பா லேயோர்
பொருவருஞ் சோதி தோன்றப் பொருக்கென வெழுந்து கும்பிட்
டொருவரும் புளகம் பொங்க விருவிழி யுறைப்ப நின்றாய்
வெருவரு முளத்தி னேமீ தென்னென வினாத லோடும். (௧௧)

தூயமா தவத்தா லால சுந்தரர் தென்பாற் றோன்றி
நேயவா தரவிற் றொண்டத் தொகையரு ணிரம்பப் பாடித்
தாயனார் பாங்கர் மீள்வா ரென்றவர் சரித மெல்லாந்
தோயநீ யருளிச் செய்தாய் சொல்லிய விரிவினாலே. (௧௨)

காழிநா டுடைய ராய கவுணிய ராமூர் வந்த
வாழிநா வலாய ராதி யறுபத்து மூவர் மாண்பு
மாழிகு முலகு போற்றுந் திராவிட வேத மாய
ஆழிநா யகனு வக்க வுற்றதே வாரச் சீரும். (௧௩)

மற்றதுந் தெரிந்தே யின்னும் வாசக வேதச் சீருஞ்
சொற்றவர் சீரு மன்னார் வழிபடூஉத் தூய மேன்மை
பெற்றமாத் தலத்தின் சீரும் பேசகென் றுரைத்த லோடுங்
கற்றவர் புகழு மந்த முனிவரன் களிப்புத் தூங்க. (௧௪)

அருளமை யான்ம நாதர் சிறப்புமற் றவர்வி ராய
பொருளமை தலச்சி றப்பும் பொங்கழற் புனற்சி றப்புந்
தெருளமை மறையோன் மாயோன் றிறலுருத் திரப்பே ரண்ணல்
வெருளமை யாது போற்றி மிக்கபே றுறுசி றப்பும். (௧௫)

மற்றவர் போற்றி வேண்டும் வரமெலாம் பெறுசி றப்பு
மற்றமில் வாதவூ ரவதாரம் புரிசி றப்புங்
கற்றவர் புகழ மைச்சாய்க் காரியம் புரிசி றப்பு
முற்றவெம் பரிமாக் கொள்ளப் பொருளுட னுறுசி றப்பும். (௧௬)

பெருந்துறை யடைந்து ஞான வடிவமாய்ப் பிறங்கித் தெய்வக்
குருந்துறை குரவற் போற்றி யுபதேசங் கொள்சி றப்பு
மிருந்துறை யெவர்க்கு மாய வாசக மெடுத்தி யம்பி
யருந்துறை யல்லாப் புத்த ராறழித் திடுசி றப்பும். (௧௭)

பூரண வடிவ மாகிப் பொலிந்தினி தமர்சி றப்பு
காரணன் முதலோ ரேத்த விழாக்கொண்ட கருசி றப்பு
மாரண விசேட மாய வாசகத் தருஞ்சி றப்பு
மேரண வெடுத்து ரைத்தா னியாவரு மின்ப மெய்த. (௧௮)

தெருளுப மணிய வள்ளல் சிவகண முனிவர்க் கிவ்வா
றருளுப தேசஞ் செய்தா னனையருட் டௌமி யப்பேர்
மருடபு முனிசிந் தித்து மாற்றருந் தலைமை பெற்று
னிருடப முனக டந்த நீறுமே லுரைப்பா மன்றே. (௧௯)

மருடரு மலந்து மிக்கும் வன்மைமே வியபு ராணத்
தருடரு வரலாற் றைத்தேர் தரவெடுத் தறைந்தா மப்பாற்
பொருடரு கல்வி கேள்விப் புண்ணிய முனிவீர் தேர்மின்
றெருடரு புகழ்ப்பு ராணச் சிறப்பினை யுரைப்பா மன்றே. (௨௦)

புராணவரலாற்றுப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௬௨.

---

# புராணச்சிறப்புரைத்தபடலம்.

எந்தப் பிறப்புங் கொடியதென விம்மா நிலத்தி லெல்லாரு
முந்தப் புகல்வ ரதுநிற்க வாத வூரெம் முழுமுதலைச்
சந்தப் பனுவல் கொடுதுதிக்கச் சார்ந்த பிறப்பெப் பிறப்போமற்
றந்தப் பிறப்பைப் பல்காலு மன்பிற் றொழுதஞ் சலிசெய்வாம். (௧)

அருவா யுருவா யருவுருவா யகாதி யாய்நித் தியமாயின்
புருவாய்ச் சத்தாய்ச் சித்தாய்மற் றொன்றாய்ப் பலவாய் நிர்க்குணமாய்க்
கருவாய்ச் சருவ வியாபகமாய்க் கண்ணாய்க் கண்ணுட் கருமணியாய்
மருவாய் மலராய் மணியொளியாய் வயங்கு மான்ம நாதசிவம். (௨)

மூல மலமாஞ் சகசமல மொழியா நின்ற வியாபகமே
யேல வமைந்த வியாப்பியமே யென்னு மிரண்டு மாகாது
சால வியாத்தி யாய்ப்பிணிக்கத் தழுவிக் கிடந்த வுயிரனைத்துங்
கோல வின்பம் பெறவாதி சிருட்டி யாற்றக் குறித்தநாள். (௩)

எல்லா வுயிரு முயுநிமித்த மிலிங்க மூர்த்தி யாய்த்தலமாய்ச்
சொல்லா நின்ற தீர்த்தமாய்த் துவன்ற வுலகெங் கணுமாயிற்
றல்லா மலநோய் மருந்தாய வனைத்தாந் தலங்க ளாமுன்னே
நல்லா தாவி னுருபமாய் நயந்த திந்தப் பெருந்துறையை. (௪)

எங்கு மரூப வியாபகமா யிவைவ தெனினு முடம்பினைத்துந்
தங்கு நறும்பான் மூலத்தோற்றந் தகைபோ லான்ம நாதசிவம்
பொங்கு வளஞ்சால் பெருந்துறைக்கட் டோற்றம் புகலிவ் வேதுவினாற்
கொங்கு மலிபூம் பொழிலதுகா ரணமாத் தலமாக் கூறுவார். (௫)

இதுகா ரணப்பேர் பெற்றதனா லெல்லாத் தலமுங் காரியமா
முதுபா ரிடைப்பேர் பெறுமுனிவீர் மொழிந்த தன்மை யெத்தலத்து
மதுவார் கழுநீர் மாலிகைதோள் வயங்க வொளிர்கா ரணகுருவாய்ச்
சதுமா மறையத் தலத்தன்றி யமரா நிற்குந் தனிமுதலே. (௬)

அன்ன தலத்தின் மான்மியமுற் றறையா நிற்கும் புராணமுமுன்
முன்ன வருளுங் காரணபு ராண மென்று மொழிந்திடுவா
ரென்ன புராணத் தினுஞ்சிறந்த வீது கரும ஞானமெனச்
சொன்ன காண்ட மாய்ப்பொதுமற் றுண்மை யென்றுஞ் சொலப்படுமால். (௭)

இன்னு மியலுந் தந்திரமே யியம்பா நின்ற மந்திரமே
மன்னு முபதே சம்மேயென் றுரைக்குங் கலைமூ வகையுமாம்
பன்னு மிவற்றுள் வாதவூர்ப் பனவர் பெற்ற துபதேச
முன்னு மிரண்டு மேனோர்பெற் றனவென் றுணர்மி னுணர்வுடையீர். (௮)

ஞான முண்மை யுபதேச கலையோ டொன்று நலத்தினவா
வேன விரண்டு மற்றுமுள விரண்டு கலையோ டொன்றுவன
வான வினைய பெருஞ்சிறப்பா லனவாப் புராணங் களிற்சிறந்து
கான விதழி புனைவாருக் குவகை செயுமுட் கருதிடுவீர். (௯)

சத்தி பதியும் பரிபாகந் தங்கப் பிறப்பை வெறுத்தின்ப
முத்தி விரும்பு மவரேயிப் புராணங் கேட்கு முறைமையினார்
சித்தி யமைந்த புராணத்தின் சிறப்புச் சொற்றுந் தவுமியனைப்
பத்தி யமைந்த புரூரவா வடைந்த பரிசு பாடுவாம். (௧௦)

புராணச்சிறப்புரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௩௬௨.

---

# புரூரவா தவுமியனையடைந்தபடலம்.

ஒருவாத மலக்குரம்பை யேகாமென் றுரைப்பாரும்
பெருவாத வாருகதம் பிடகமுதற் பெட்பாரும்
வெருவாதந் தோபகுதி மேன்முத்தி யென்பாருந்
திருவாத வூராடி சிந்திக்குந் தாத்தரோ. (௧)

கண்ணின்மணி யெக்கென்று கலைமகளா லவாவுகரு
மெண்ணினைப் பரியவனை மியல்பமைந்த மாநகரம்
விண்ணினமை ராவதிதன் னிலைவழீஇ வீழ்ந்தவரி
மண்ணினமர்ந் திருந்தென்ன வயங்குறுமத் தினகரம். (௨)

அந்தவள நகர்புரப்பா னந்தவள நீறணிவா
னந்தவள வெனுங்களத்தார் நந்தவளக் கருங்காம
முந்தவளத் தரும்பென்ன முயங்கிலினை வடிவழக
னெந்தவளக் கருமொவ்வா தெனப்பொலியு மிரும்படையான். (௩)

கலைபலவுங் கற்றவர்க்கோர் கண்ணாய கல்வியினு
னிலையெனவா யுரைத்தல்பெய ரெனக்கொடுக்குங் கரதலத்தா
னலைகடல்சூழ் நெடும்புடவி யனைத்துமொரு குடைநிழற்றிப்
புலைமிடிவே ரறக்களைந்து போக்கியெழும் விறல்வீரன். (௪)

உரைப்பார்வா யுரைப்பவைதன் புகழேயாம் படியுயர்ந்தான்
றரைப்பால்வா ழுயிர்க்கன்றித் தரியலரே யானுர்க்கும்
விரைப்பால்வண் கற்பகத்தார் மிலைச்சவான் கொடுத்துவப்பான்
றிரைப்பான்மால் விழ்வளரத் திசையுருட்டு நேமியினான். (௫)

ஒருபுடைவெவ் வராக்கொளினு மொருபுடையா லுலகனைத்துங்
கருதிருடீர் தரவிளக்குங் கடவுண்மதிக் குலத்துதித்தா
னிருநிலத்தி லுயிர்வருத்தத் தன்வருத்த மெனக்கொண்டே
பொருதளித்திட் டவையுவப்ப வுவப்பெய்தும் புந்தியினான். (௬)

எண்ணியபல் பரசமயக் களைகடலை யெடாதிடந்து
கண்ணியவண் பெருஞ்சைவப் பயிர்வளர்க்குங் காட்சியினான்
றண்ணியதிப் பியகுணத்தான் றத்துவமா நெறிநிற்பான்
புண்ணியமே வடிவென்னும் புரூரவா வெனும்பெயரான். (௭)

ஆன்றபல பெருங்கேள்வி யமைச்சர்புரோ கிதாதி
யேன்றவர சுரிமையுடைச் சுற்றத்தா ரெலாஞ்சூழத்
தோன்றமதிக் குடைநிழற்றித் துன்னலர்வெம் பகைமுருக்கித்
தேன்றதும்பு வாகைகொளீஇச் செய்யகோ னடாத்திடுவான். (௮)

குணநிறைந்து பேரழகின் கொள்கலமா மனைவியருந்
தணவரிய தன்னேவற் றலைநிற்கு மைந்தர்களு
மணவரிய விருந்தினரு மொக்கலா யமைந்தாரு
மணமலியன் பொடுதழுவ வாழுநாள் களுளொருநாள். (௯)

அள்ளல்வயற் பெருந்துறைவா ழான்மநா தப்பெருமான்
விள்ளலமை யாதவருண் மேவுபரி பாகமுறத்
தள்ளலமை யாச்சுற்றந் தனைநீங்க விடைகொடுத்தே
யெள்ளலமை யாததனி யிடத்திருந்தீ தெண்ணுவான். (௧௦)

நீரிலெழு மொக்குளே நிகர்க்குமிள மைப்பருவ
நீரிலெழுந் திரைபோலு நிரம்பவெழுந் துடைசெல்வ
நீரிலெழு தெழுத்தினையே நிகரவழி தருமுடம்பிந்
நீரிலமை பெருவாழ்க்கை யென்னென்று நிகழ்த்திடுவோம். (௧௧)

குடருமெலும் புங்கொழுவுங் குருதியுமீ ருளுந்தசையுந்
தொடருநரம் பும்போர்த்த தோலுமூ ளையும்வழும்பு
மடருமுவர் நீருகனி யருவருக்கும் பவ்வீயும்
படருமுட லையும்பொருளா நினைப்பரோ பண்புடையோர். (௧௨)

இயக்கமிரண் டொழித்திடுகோ லெவ்வளவின் பவ்வளவே
முயக்கமிகு மங்கையர்த மோகத்தால் வருமின்பம்
நயக்கவிது கருதாது நாளுமவர்த் தோய்ந்துவத்தல்
வியக்கருமின் பெனல்வன்றி பவ்வீவீழ்ந் துவத்தல்பொருஉம். (௧௩)

மிதவையினோக் கமைத்துழலு மின்கொலைஞன் போற்கவரும்
பதமிதெனப் பார்த்துழலும் பாழ்ங்கூற்றுண் மையிருளெவ்
விதமுமுடம் பொழியுமதன் மேற்புரிவ தொன்றுமிலை
யிதமிக மேயுயிர்க்குத் துணையாக வெய்திடுமே. (௧௪)

புண்ணியமே விடிற்சுவர்க்கம் புக்களந்த காலமர்ந்தே
யண்ணியபோ கங்களிப்ப வனுபவித்து மதுதீர்ந்தா
லெண்ணியபா தகமிகையா லிரவுரவ மாதியுற்றே
பண்ணியவெவ் வியபோக மனுபவிக்கும் பதைபதைப்ப. (௧௫)

இந்தவித முழலுமுயிர் சுகமுறுவ தெக்கால
மந்தமிலஞ் சிவபெருமா னருள்பதியப் பாகமரீஇப்
பந்தமறுந் துண்மைநெறி பற்றிடுவ தெக்காலஞ்
சந்தமிகு மின்பமுத்தி சார்ந்துய்வ தெக்காலம். (௧௬)

வெள்ளியநீ றுறப்பூசி மேதகுகண் மணிபூண்டே
யுள்ளியவஞ் செழுத்தினரா யுண்மைநெறி யியங்கடியார்
வள்ளியமா மலர்ப்பாத மரீஇப்பணிசெய் தொழுகினுற்
றெள்ளியஞா னாசிரியற் சேர்ந்தினைத்தும் பெறலாகும். (௧௭)

இந்தவர சாட்சியினோ ரணுத்துணையு மின்பமிலைச்
சந்தமுறு தவநெறியே சார்வேனென் றுளந்துணிந்து
கந்தமலர் மாலைமுடி காதலன்சென் னியிற்கவித்து
முந்தவமை யரசுரிமை முழுதுமவன் வயமாக்கி. (௧௮)

வேண்டுபொருள் கைக்கொண்டு விடையுங்கொண் டியாரிடத்துந்
தாண்டுபரி மன்னர்பிரான் றலங்கள்பல சேவித்து
நீண்டுகளிப் பெழவருவா னிறைபுவனத் துயிரடைந்து
மாண்டுநெறி பெறுகாசி வளநகரம் வந்தடைந்தான். (௧௯)

ஆனந்த வனத்தடைந்தாங் களவிலுவப் பினனாகி
யானந்த முத்துயிர்க்க வாலோனிங் கடைந்தவித
னானந்தஞ் செருக்கொழித்த தென்றாவிக் தங்கவனீ
ரானந்தத் துறைக்கங்கை யாற்றினிடைப் படிந்தெழுந்து. (உ0)

தொழுதார்க்கே யருள்சுரக்குந் துண்டியா னையைத்தொழுது
கழுதார்க்குங் காட்டகத்துக் கலைப்புறினுங் கனிந்துகனிந்
தழுதார்க்கு முன்னிற்கு மகிலநா யகன்கழல்வண்
டொழுதார்க்குத் தளத்தடங்க ணுமையம்மை பதம்போற்றி. (உக)

காலவயி ரவப்பெருமான் கழலிணைகை யாற்றொழுது
தாலநிகழ் பெருங்கீர்த்தித் தண்டபா ணியையவணங்கி
மாலமையாப் பெருமுத்தி மண்டபத்தியா னையும்போற்றிச்
சீலமிகு மன்னர்பிரான் சென்றனன்மற் றாங்கொருசார். (உஉ)

சென்றவிடத் தெதிர்தோன்றுந் திருமடத்திற் போய்புக்கா
னன்றமையத் தான்புரிந்த நற்றவத்தின் பெரும்பயனை
யன்றமையக் கண்டான்போ லானந்தம் பொங்கியெழத்
தன்றகைமைக் குலகுருவாத் தவமியனை யெதிர்கண்டான். (உங)

வளமாருஞ் சிதம்பரத்தில் வண்புலிக்கான் முனிமைந்தன்
களமாருஞ் சிந்தைகொளாக் காதலுப மன்னியன்பாற்
றளமாரு மலர்த்தடஞ்சார் பெருந்துறைமான் மியமுழுது
முளமாரும் படியுணர்ந்தாங் குணர்ந்திருக்குஞ் சிந்தையனை. (உச)

வெள்ளியகுப் பாயமென வெண்ணீறு சண்ணித்த
வொள்ளியமே னியிற்றிரிபுண் டரம்பொலிய வொளிர்வானைத்
தெள்ளியகண் மணிமாலை சிரங்கரமார் பாதியுறப்
புள்ளியதோ லாதனமேல் வீற்றிருக்கும் புண்ணியனை. (உரு)

காண்டல்பர சிவகோசங் கேட்டலவ னருட்காதை
வேண்டலவ னருட்பேறு வேறின்றென் றிருப்பானைத்
தூண்டல்செயா மணிவிளக்கின் றேற்றநே ருறவானைக்
கீண்டல்செய்மால் கிடையாத்தான் கிடைத்தமைந்த மனத்தானை. (உசா)

கண்டுபர வசனாகிக் கைகடலை மேற்குவிய
மண்டுபுனல் விழிவார மயிர்ப்புளக முடல்போர்ப்ப
விண்டுமொழி தழுதழுப்ப விம்மிநில மிசைவீழ்ந்தா
னண்டுமடி யவர்க்கருளு மன்னமுனி வரனோக்கி. (உஎ)

மன்னாநீ யெழுகவென வாய்மலர்ந்து வாழ்த்துதலு
முன்னாளான் செய்ததவ மொழியளவன் றென்றெழுந்தான்
றன்னாத ரவுசிறப்ப நீறளித்தான் றகவேற்று
நன்னாமம் புகன்றணிந்தா னன்முனிவ னிருக்கென்றான். (உஅ)

என்றமொழி மறுதொருசா ரிருந்தமதிக் குலவேந்த
னன்றமையு முகநோக்கி நன்முனிவ னுரைசெய்வா
னென்றமைநின் னரசாதி பரிணமத் தற்றனவோ
வின்றெமக்கோ துகவெனநின் னருளினினி யனுவென்றான். (உக)

இனியனவென் றுரைத்தவனை யிருங்கருணை யொடுநோக்கி
முனிவரனம் பால்வந்த கருமமெவன் மொழிதியெனப்
பனிமதியக் குலவேந்த னெழுந்துபணிந் தனனுயப்
புனிதமுனி வரற்கொருசா ரிருந்துபுக லுவதானன். (௩௦)

அரசுரிமைச் செயல்புரியு மதனிலெனக் காசையிலை
விரசுபல பிறப்பாலு மேவுதுயர்க் கஞ்சினேன்
பரசுசுக முத்தியுறப் பேராசை பதித்தடைந்தேன்
வரசுகுணக் குன்றேயென் மனத்துளநின் னமுமுண்டால். (௩௧)

காரியமா மூலகெத்தக் காரணநின் றறித்ததுபே
ராரியகன் ருக்கியளித் தழித்துமறைத் தருள்புரியுஞ்
சீரியகா யகனியல்பென் சிறந்தகா ரணகுருவா
யோரியவெத் தலத்தமர்வா னுரைத்தருள வேண்டுமால். (௩௨)

இத்தனையுந் தெரிந்துமுத்தி யெய்துவான் சரணடைந்த
பித்தனையென் னாதருள வேண்டுமெனப் பின்னுமெழுந்
தத்தனையன் பருக்கன்ப னுயவனைத் தூயவனை
முத்தனையா னைப்பணிந்து முன்னிருந்த விடத்திருந்தான். (௩௩)

இருந்தமதிக் குலவேந்த னியல்பனைத்து முளத்தெண்ணித்
திருந்தவிரு வினையொபபுச் செறிந்தபெருங் காரணத்தாற்
பொருந்தமல பரிபாகம் புணர்ந்ததா லெனக்கருதி
யருந்தவன்சாம் பவதீக்கை யாற்றினனவ் வாசனுக்கே. (௩௪)

காமலரோன் றுறவெடுத்துக் கடல்புடைசூழ் புவியாண்ட
புரவலனன் னுதல்விலங்கப் புண்ணியசாக் தம்புனைந்து
பரவுதன தருகிருத்திப் பவளவாய் மலர்ந்தருள்வா
னுரவுமிகு மழமுனிபா லுபதேசம்பெற் றுயர்ந்தோன். (௩௫)

வெருவாத மலபந்தம் வீட்டுதற்காத் தவுமியனைப்
பெருவாய்மைப் புரூரவா வடைந்ததிறம் பேசினு
மருவாரு மலர்ப்பொய்கை வாய்ந்ததிருப் பெருந்துறைவா
முருவான்ம காயகர்த மகாதிமூர்த் தம்புகலவாம். (௩௬)

புரூரவா தவுமியரையடைந்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௩௬அ.

# ஆன்மநாதர்
# அநாதிமூர்த்தச்செயலுரைத்தபடலம்.

வெருவாத பரசமயக் குறும்பெறிந்து சைவமென விளம்பா நிற்கும்
பெருவாய்மை யரசோங்கப் புவியிடைவே தாகமங்கள் பிறங்கச் செய்தே
யொருவாது குருந்துறையும் பெருந்துறையுற் றுணர்ந்த வுததி மூழ்குந்
திருவாத வூராடி சிந்திப்போ மும்மலமுஞ் சிந்திப் போமே. (க)

அரசகே ளாகமஞ்சொ லநாதிமூர்த் தத்தினைமுன் பறைவா மெங்கும்
விரசுபசுக் களுக்கெல்லாம் பதியாகித் தனிமுதலாம் விமல மாகி
யுருவருவ மருவுருவ மில்லாதா யுணர்வினுக்கோ ருணர்வாய் நித்த
மருவுபரி பூரணமாய்ப் பராபரமா யுயிர்க்குயிராய் வயங்கு மொன்றே. (உ)

வாக்குமனா தீதகோ சரமாய வப்பொருடான் மலத்தைப் பற்றிப்
போக்குவர வுற்றுழலு மெவ்வுயிர்க்கு மிரங்கியின்பம் புணர்த்த வேண்டித்
தேக்கருளா லைந்தொழிலுஞ் செய்யுமதற் கைந்தொழிலாஞ் செயலுந் துன்பம்
போக்கவினைந் திடமறிவு முதன்மையும்வே றொருவர்தாப் புணர்ந்த வன்றே. (ங)

இயல்பேயா மதற்குமே லொன்றுமிலை முடிவிலதே யெவையு நாச
மயமாகப் புரிந்துயிரா மலத்தொடுக்கி மலபாகம் வருதற் காப்பின்
வியனுகுஞ் சூக்குமசிட் டியைவிதித்துத் தூலசிட்டி விதித்தற் காக
வயன்மாலைப் படைத்தவரா லசுத்தமா யையைப்பிறப்பித் தளிக்கப் பண்ணி. (ச)

துதிமேய வுருத்திரரா மகேச்சுரராச் சதாசிவராச் சுத்த மாயைக்
கதிகார ராக்கியவ ரதிற்றூல கிருத்தியங்க ளாக்கச் செய்து
மதிமேவு மெல்லாக்கா ரியங்களுக்குங் காரணமாய் மன்னித் தானே
பதியாகி நிற்குமஃ திச்சையினாற் கொளுமுருவின் பான்மை கூறில். (ரு)

ஆதிதொறு மாதிதொறு மிச்சாஞா னக்கிரியை யாகி மூன்று
பேதமுற வளர்பரா சத்தியையே சுயம்புருவாப் பேணி நின்று
சோதிவடி வாய்வாக்கு நான்கினையும் விந்துவினிற் றோன்றச் செய்து
மேதகவி னவற்றுதித்த வக்கரத்தைச் சொற்பதமா விரித்துப் பின்னர். (சு)

போதமிகு வேதமா கமமங்க மிருதிபல பொருளுங் காட்டும்
பேதபுரா ணங்கலைகண மந்திரதந் திரங்களெலாம் பிறங்கப் பேசி
நீதமிகு மவைபொதுவுஞ் சிறப்புமாம் படிமுறையி னிறுவிப் பின்னர்த்
தீதணுகாக் கன்மகாண் டமுஞான காண்டமுமாய்த் தெரிவித் தெங்கும். (எ)

திருவரச னுளமுமல தினுக்காணைத் திருமுகங்கள் செலுத்தி யச்சொன்
மருவுநெறி நடப்பவருக் கின்பமுமந் நெறிகடவா மடமை யார்க்கு
வெருவுபல துன்பமுமே வுறவிதித்தல் போலிரண்டா விளம்பு காண்டத்
தருமநன்னூல் வழிநடப்போர் கடவார்க ளுறும்பயனுஞ் சாற்றிப் பின்னர். (அ)

காரணகா ரியகுருவாய்த் திருமேனி கொண்டுயிர்கள் கதிவி ராவச்
சீரணுகு முபதேசஞ் செய்வானவ் வுபதேசச் செயல்க டாமு
மோரணுகு சமயமுடன் விசேடநிரு வாணமென வெடுத்துக் கூறுந்
தாரணியி லொருமூன்றாச் சாற்றுவரத் தீக்கைநெறி சார்வோர் தாமும். (௯)

கருதுதிரி மலத்திலொரு மலமுடைய விஞ்ஞான கலர்க ளென்றும்
பெருகுமிரு மலமுடைய பிரளயா கலர்களென்றும் பிரித ராமே
மருவியமும் மலமுடைச்ச கலர்களென்று மூவகையாய் மன்னு மித்தப்
பொருவருபல் லுயிர்களுக்குப் பக்குவமு நால்வகையாப் பொருந்து மன்றே. (௧௦)

மந்ததர மென்றுமந்த மென்றுந்தீ விரதரமென் றும்மா செல்லா
மந்தமுற வருமதிதீ விரமென்றும் பெயராமற் றவைக்கு வாழைப்
பந்தமுறு தண்டுபசு விறகுலர்ந்த விறகிருக்கைப் பண்பா மென்றே
நந்தவிலக் நால்வகைப்பக் குவங்களுக்கு மூவமையென நவில்வார் வல்லோர். (௧௧)

வேறு.

இன்ன நான்கு வகைப்பாக மிலையந்தோர் கதியெய் துதற்குரித்தாய்
மன்று மினிய மார்க்கமுநால் வகைக ளாகு மவைபகரி
லுன்று சரியை கிரியைசிவ யோக ஞான மெனவுரைப்ப
ரன்ன வகையும் பொதுவுண்மை யென்ன விரண்டா மவையுரைப்பாம். (௧௨)

உலக போகந் தனக்காசை யுற்றுப் புரிதல் பொதுவாகு
மலகி லதனை வமனபத மாக மதித்துப் பரசிவனுக்
கிலகு மாசை யொடுமியற்று மினிய தொழிலே யுண்மையாம்
பலபோ கமுந்தாழ் வுயர்வாகப் பரம னீவன் பலமிரண்டுள். (௧௩)

உண்மைச் சரியை முதன்முடித்தோ ருயர்சா லோகா தியையடைவர்
வன்மைப் பொதுவுற் றோர்களஃ றிணையாம் பதத்தில் வதிவாரத்
திண்மைப் பலன்கள் பெறுமுயிர்க்குச் சகலா ரணனுஞ் சிவன்குருவாய்த்
தண்மைக் குணமெய் யுபதேசஞ் சாற்றும் வகையுஞ் சாற்றுவாம். (௧௪)

இயல்பு பொதுவுண் மையதாயெவ் வுயிர்க்கு மியையு மவ்விரண்டி
னயலின் மருவு குணம்பொதுவா மமல வுண்மை தன்னியல்பா
மயல்செய் பொதுவி னுறுமுயிர்க்கு வருகா ரியதே சிகனுகிப்
பயன்மே வமல வுபிருடலாய்ப் பதிந்து செய்வ னுபதேசம். (௧௫)

தனதா மியல்பிற் சாருயிர்க்குச் சத்தி யெனுந்த னியல்புருக்கொண்
டினிதா கியகா ரணகுருவா யியம்பி யிடுவ னுபதேச
முணகா மூலாத்த மகாமாலய முழுதும் புகத மாதவினுற்
கனிவோ டதில்வாழ் விஞ்ஞான கலரே பிரள யாகலரே. (௧௬)

ஆய விவரு ளொருவர்தமக் கறிவுக் கறிவா மொருமலத்தீர்த்
தேய வருள்வன் மற்றொருவர்க் கிலைய முக்க ணற்புயங்கூர்
பாய மழுமான் காளகண்டம் பதித்து விடையின் மேற்றோன்றித்
தோய வமர்ந்த விருமலமுந் தூரத் தேக வருளுவனால். (௧௭)

அசுத்த மாயைத் தனுவிடங்கொண் டமருஞ் சகலர்க் கவரேபோல்
விசுத்த கருணைத் திருவுருத்தி பக்மாய் மேவி விரும்பிமுன்னின்
றிசித்துக் காந்த மிரும்பைவலித் திடுமா போல விழுத்துகனி
விசித்துப் பிடித்து நிறீஇயிருளா மருளும் வெளியு மறமாற்றி. (௧௮)

நோக்காற் பரிசத் தால்வாக்கா னுவல்பா வனையான் மிகுநூலா
லாக்குஞ் சிவயோ கப்பயில்வா லருள்சே ரினிய வவுத்திரியாற்
றீக்கை புரிந்து பரிபாகஞ் செய்தவ் வுயிரைத் தானாக்கி
வாக்கு மனத்துக் கெட்டாத்தன் மலர்ச்சே வடிக்கீழ் வைத்திடுவென். (௧௯)

இன்ன வாறு காரியகா ரணதே சிகரா யியலியல்பின்
மன்னு மினிய சதாசிவமே மகேச மேதல் லுருத்திரமே
யென்னு மிவைகா ரியவடிவா மிலகு மகாதி மூர்த்தமொன்றே
மூன்னு பரம காரணதே சிகரா மவர்சீர் மொழிவாங்கேள். (௨௰)

காண்டற் கரிதா கியபரிபூ ரணவா னந்தக் கடலாகிப்
பூண்டெவ் விடத்து மவரேயெப் பொருளு மாகி நிறைதரவும்
பாண்டி நாடே பழம்பதியாப் பகரு மகாதி மூர்த்தவிடை
மீண்டு மருவும் பெருந்துறையா யெவருங் காணும் படிகாட்டி. (௨௧)

இனிதாஞ் சிவநீர்த் தங்கணவங் தருபே தங்க ளுறவியைத்துத்
தனது கருணை யாமருளே தழைத்த குருந்தா யிடவதன்பா
லுனுதற் கரிய கோயிலொன்று காட்டி யோகாம் பிகையினொடும்
புனித வான்ம நாதரெனப் புவியேழ் போற்ற வீற்றிருப்பார். (௨௨)

அவரே யெவர்க்குங் காரணதே சிகரென் றறிதி யுலகெங்கு
மவரே யமர்கா ரியகுருவா யமர்ந்து வினையா டுவரென்று
மவரே யகாதி மூர்த்தரென்று மநாதி மூர்த்தத் தலந்தீர்த்த
மவர்சே ரிடத்தே யமையுமென்று மறையு நிகமாகமமனைத்தும். (௨௩)

இருள்சேர் மலஞ்சேர்ந் தெவ்வுயிரு மிடர்ப்ப டாம லெடுத்தாளு
மருள்சே ரான்ம நாயகர்த மநாதி மூர்த்தச் செயலுரைத்தாம்
வெருள்சே ராம லெவ்வுயிரும் புரந்து வீடு விரும்பினோய்
தெருள்சே ரருட்ச தாசிவமூர்த் தத்தின் றிறனுஞ் செப்புவாம். (௨௪)

ஆன்மநாதரநாதிமூர்த்தச்செயலுரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௪௨௨.

# சதாசிவமூர்த்தமுணர்த்துபடலம்.

கல்லரு கடுங்கப் புலிக்கழும் புகையு நகவிரு விழியினுந் தோற்றி
வெல்லரும் பகட்டு மிசைவரு மியமன் விறற்றடி யடிமுடிக் கொல்வா
ரல்லருஞ் சுவண நகர்நிலை வழுக்கி யவனியில் வீழ்ந்தமர்ந் தன்ன
சொல்லரு மௌனிசால் வாதவூ ரடிக ளிணையடி முடிக்கொளா தவரே. (௧)

வைக்குங்கா ரணமா மாதிமூர்த் தத்தி னியலுமா யிரத்திலொன் றாக
நிவப்புறு பராயே யாதியே விருப்பே நிகழ்தரு ஞானமே தொழிலே
யுவப்புறு சிவதத் துவத்துறச் சத்தி யுதித்தல்போ லொன்றினொன் றுதித்துத்
தவத்தினுக் குரியோர் தொழுதுயு நிமித்தஞ் சதாசிவ மைந்தையுந் தருமால். (௨)

திகழ்பரா சத்தி யிடத்தினிற் சிவச தாக்கியர் திருந்துமா தியினிற்
புகழ்மிகு மமூர்த்தி சதாக்கியர் மிக்க புநிதவிச் சாசத்தி யிடத்தின்
மகிழ்தரு மூர்த்தி சதாக்கிய ரறிவின் மன்னுகத் துருசதாக் கியரோ
ரிகழ்வறுக் கிரியா சத்தியிற் கரும சதாக்கிய ரினிதுதித் திடுவார். (௩)

பத்திலொன் றாயச் சத்திக டொறுமுற் பவித்தமற் றவருருப் பகரிற்
சுத்தமா கியநற் பராபரம் பரஞ்சூக் குமந்தூல சூக்குமந் தூலம்
வைத்தவைந் திலிங்க மாய்விளங் கிடுவர் மன்னுமவ் விலிங்கங்கொள் வடிவும்
புத்தியி னுறக்கேள் சிவசதாக் கியர்தாம் புகழ்மிகு சுத்தமே வடிவாய். (௪)

அந்தமி லாத வதிசூக் குமமா யளந்தறி வொண்ணிலா வொளியா
யுந்துமா காய மின்னென வளர்ந்தெவ் வுலகமும் வியாபித்து நிற்பர்
கந்தவி லமூர்த்தி சதாக்கியர் சோதிக் கதிர்கோடி தோன்றுதூண் போன்று
கந்தவி லொளியு மறிவதற் கரிய கருதிரு மேனிகொண் டமர்வார். (௫)

மூர்த்தியா கியநற் சதாக்கிய ரிச்சை முதிர்குணத் தொடுங்கலை யோடு
மாத்தமா யியைந்தக் கினிப்பிழம் பிலிங்க மாகியுச் சியினொரு முகமுங்
கூர்த்தமுக் கண்ணு முடையராய்ச் சிறந்த கொள்கையுற் றிருப்பர்கத் துருவுஞ்
சீர்த்திகொண் ஞானத் துதித்தலா லத்த ரெனுந்திரு நாமமொன் றுற்று. (௬)

சீலமா கியநற் குணமுறும் படிகத் தேசுடை யிலிங்கமா யதன்மே
லைமை முகங்க ளைப்பணிற் றலங்க நயனம்பன் னிரண்டுடை யவராய்ச்
சூலமொண் மழுவா ளபயகால் வலக்கை சுமந்திடத் தரித்திட காற்கைக்
கோலகா கம்பா சம்மொளிர் கண்டை கோதிலா வரதகன் கமைத்து. (௭)

சீரணா கியநல் லிலக்கணத் தோடு சிறந்துவீற் றிருப்பராற் கருமப்
போரணா கியமெய்ச் சதாக்கியர் தாமும் பிறங்குறு கிரியையி னுதித்த
காரண மதனா னாதமே வடிவாய்க் கலாவிந்து பீடத்தின் மேலாற்
பேருத லிலாத தொழிலமர் பிண்ட காயராய்ப் பிறங்குருக் கொண்டு. (௮)

முன்புரைத் திட்ட சதாக்கிய நான்கு முதிர்சாத மாய்வந்து கூட
வன்புற வொன்றாய்த் திரண்டரு வுருவ மாகியீ சானத்தற் புருட
மின்புறு மகோரம் வாமதே வஞ்சீ ரிலகிய சத்தியோ சாதம்
வன்பமை யைந்து முகங்களா யிலங்க மாட்சியிற் றெரித்துவீற் றிருப்பார். (௯)

இத்தாற் கரும சதாக்கியர் வடிவ மியம்புறிற் சகளநிட் களமா
முத்ததிற் சகளம் பரவிந்து நாத கலைகளு முடிவிலா வபர
வித்தார தத்தின் கலைகளுஞ் சத்தி கலைகளும் விராய்முப்பத் தெட்டாய்ப்
பத்தமுற் றுருவாய் மருவுநிட் களமுன் பகர்ந்தவைஞ் சத்தியே யாமால். (௧0)

சத்தியா கியநிட் களவெளி யதனிற் சகளமிக் கிரதனுப் போலுஞ்
சுத்தமா கியதர்ப் பணநிழல் போலுந் தோன்றிடு முத்திவை விழைந்தோர்
சித்தமா கியபங் கயத்தினி லிவரைத் தெளிதரு படிகநன் னிறமும்
வித்துரு மச்செஞ் சடைமுதன் முடியும் விளங்குமா னனங்களோ ரைந்தும். (௧௧)

மூவைந்து விழியு மீரைந்து காமு முண்டக மலர்ப்பத மிரண்டுந்
தாவிலாச் சூலம் பரசுவாள் குலிசந் தயங்கப யம்பொலி வலமும்
வாவுபன் னகம்பா சாங்குசங் கண்டை வரதமே வியவிடப் புறமு
மேவிடச் சகலா பரணமுற் றவராய் மிகுமிலக் கணமுடை யவராய். (௧௨)

சந்தன மொளிகூ ராடைபூ மாலை தரித்துநீள் கையுகிர் விளங்கச்
சிந்தையுண் மகிழ்புன் னகையொடுஞ் சாந்த குணத்தொடுந் திகழ்தரத் தியானித்
தந்தமி லாதே யகத்தினும் புறத்து மருச்சனை புரிவர்மற் றவர்க்குப்
பந்தமா கியமும் மலத்தொடர் பறுத்துப் பாகதி யருளுவ ரென்றும். (௧௩)

இப்படி யடியா ரிருதயந் தோறு மிருப்பது போலவெஞ் ஞான்று
மொப்பறு சிவலோ கத்தின்வீற் றிருப்ப ருவர்செய லுரைத்தன மப்பாற்
செப்பருங் குணத்தி னுலகெலாஞ் செங்கோல் செலுத்திடு வேந்தர்தம் வேந்தே
தப்பற வடுத்தார்க் கருண்மகேச் சுரர்தந் திறத்தையுஞ் சாற்றுதுங் கேண்மோ. (௧௪)

சதாசிவமூர்த்தமுரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௪௩௩.

---

## மகேச்சுரமூர்த்தமுரைத்தபடலம்.

---

பதுமமல ரிருப்பாயும் பாற்கடன்மேற் கிடப்பாயும் பகரக் கேண்மின்
விதுமுடியா கமஞ்சகல ரென்றறைமைப் புகலுதலால் விழைந்தெந் நாளுஞ்
சதுமறைசூழ் வாதவூ ரடிகணிகர்த் தனமெனவுட் சற்று மெண்ணீர்
புதுமையுற வெண்ணிலபக் குவயாமு மெண்ணுவதிற் புகரொன் றின்றே. (௧)

காரியகா ரணவுருவாஞ் சதாசிவசிற் றோன்றிமிகு கருணை யோடும்
பாரினமர் வெள்ளிவே தண்டமே யெந்நாளும் பதியா வாழு
மேருறுதன் மகேச்சரர்தம் பெருமையையா மறிந்தமட்டு மியம்பு வோங்கேள்
போருறுவேற் புரவலவென் றினியதவ மியமுனிவர் புகல்வ தானார். (௨)

நவந்தருபே தங்கடொறு மேகனாய் நடித்திடுசெல் லான்ம நாத
சிவன்றிகழுஞ் சதாசிவரின் மகேச்சரராய்த் திகழ்ந்தெழுந்து சிறப்பி னிந்தப்
புவனமுழு துயுநிமித்தம் பொருந்திருபத் தைந்துருவிற் புணர்ந்து நின்றிவ்
வவனியிசை விளையாடு மற்புதந்தேர்ந் தியாவரெடுத் தறைய வல்லார். (௩)

புண்ணியர்க ளறிவதலாற் புன்மையறி வுடையோர்கள் புந்திக் கென்று
மெண்ணியறிந் திடலரிதா மியாவரா யினுந்துணிந்திவ் வுலகு தன்னி
லுண்ணிறைந்த வன்பினொடு மோருருவை நினைந்திடிற்பல் லூழி காலம்
பண்ணுதவப் பலனங்கை நெல்லியென வக்கணமே பலிக்கு மன்றே. (௪)

அன்பர்நிமித் தம்புகழ்சால் சிதம்பரமுற் புடவியிடத் தழிவி லாத
வின்பவுரு வாய்ப்பொலியு மாலயத்துஞ் சிவலோகத் திடத்துந் தோன்றி
மின்பரவு பேரொளியின் விளங்குமகா கயிலாய மிசைவாழ் கின்ற
நன்புகழ்சேர் மகேச்சரரை நல்லோர்க டியானிக்கு நலமுங் கேளாய். (௫)

கோடிசூ ரியப்பிரபைத் திருவுருவு மைம்முகமுங் குழைகள் பத்து
நாடுமூ வைந்துதிரு நயனமுமீ ரைங்கரத்தி னலஞ்சேர் சத்தி
நீடுதிரி சூலம்வேல் கட்டுவாங் கம்வரத நிறைந்து காதல்
கூடுதம ருகங்கனிமா துளம்பாம்பு செபமாலை குளிர்நீ லப்பூ. (௬)

இவையுடைய ராய்த்தியா னித்தறிவ ரவருள்ளத் திரக்க மேவித்
தவமலிபல் லுயிர்களுக்கும் வீடருளத் தமதாதி சத்தி தன்னொ
லவமனுக்குத் திரோபவமாந் தொழில்புரிந்தா ணவமலநோ யகற்று பாக்குப்
பவமுறநற் சுவர்க்கமுநீ ணிரயமுமே மருந்தாகப் பண்ணி மேலால். (௭)

பண்டிதஞ்செய் வைத்தியராய்ப் பிணிதீர்த்தப் பலன்கொடுப்பர் பலனீ தற்கா
வெண்டிசையிற் கொண்டவுரு வெண்ணரிதா யிடினுமவற் றினிதாய் மேலாய்க்
கொண்டுவிளை யாடுமொரு குறியிருபத் தைந்தாமக் குறிகொண் டெங்கு
மண்டர்பிரா னுவந்தாடும் விளையாட லொவ்வொன்று வறையக் கேணீ. (௮)

வேறு.

மந்திரவா தியன்மனையை மதியாது புணர்பிழையா
விந்திரனு தியருடற்ற விளைத்தபய மெனும்பொழுது
வந்திரவோ னடிமையென வெடுத்துமுடி வைத்திடலாற்
சந்திரசே கரனெனும்பேர் தாங்கினர் சங்கரனார். (௯)

பத்தர்தொழுங் கேதாரப் பதியிலுமை தவம்புரிந்து
சுத்தமுனி வரனெனையுஞ் சூழ்ந்துதொழும் படியின்னே
யொத்தநின்மே னியிற்பாதி யுதவுகென வுதவுதலா
லத்தநா ரீச்சரரென் றாயினர் தாயனார். (௧௦)

அளிப்பவர்காப் பவர்சென்னி யடங்கவறந் துறக்கோத்து
வெளிப்படமா விலையாக்கி விழித்தீயா லுலகனைத்து
மொளிப்பவழத் றபுடன முமைகாண வியற்றதலாற்
றெளிப்பாட ராசரெனச் சிறந்தாரொப் பிறந்தாரே. (௧௧)

மெலியாத பனிவரையில் விமலையுதித் தறப்புரியு
மொலியாரு மருந்தவங்கண் டுவளைமணம் புணர்ந்துலகு
சலியாது பெரும்போகத் தவப்பயில கல்குதலாற்
கலியாண சுந்தரா யினர்கனற்கட் பெருமானார். (௧௨)

மிக்கவர்கா மெனுமுனிவர் மிடைதாரு வனத்துமக்குத்
தக்கவர்கா மெனவளையர் தையலார் நிலைகுலைவுற்
றுக்கவரா கப்பயிக்க முறவடைத லாற்பயிக்கம்
புக்கவரா யினர்சரணம் புக்கவரைப் புரப்பவரே. (௧௩)

ஆயவுல கழிவுறகா லறக்கடவுண் மேவுவதோ
மேயவிது கமக்குமென விடையுருவங் கொண்டடைந்து
தூயமல ரடிபோற்றத் தவன்றூர்தி யாகென்றே
யேயவதன் மேற்கொளலா லிடபவா கனரானார். (௧௪)

தலையடையு முனிவருக்கா னிழற்றங்கி மறைமுடிவாத்
தலையுணர்த்தி யமருநாட் டண்டுழாய் மாலேவத்
தலையுணரா னுய்க்கருப்புத் தனுவலைத்தோர் கணைவிடவே
டலையெரித்த லாற்காம தகனரா யினரம்மா. (௧௫)

பாலமுனி தமைப்பூசை பண்ணியமர் திறங்குறியா
தேலமுனி வொடுபாச மெறிந்துடற்றும் யமன்வெருவி
மாலவன் மார்புதைத்து மாய்த்ததிறத் தாற்கால
காலரெனும் படியானார் காலமெலாங் கடந்தவரே. (௧௬)

மேருவொரு சிலையாக வெய்யவரா நாணாகக்
காருருமால் கணையாகக் கைக்கொடுசென் றேவின்னும்
பாருமுவப் புறப்புரமூன் றெரித்தருளும் பான்மையினால்
யாருமவ ராத்திரிபு ராந்தகரென் றிசைப்பாரால். (௧௭)

கன்னிவினை தத்தின்முகக் கண்புதைத்து விடுத்தகாட்
டென்னிவிர லுகுவேர்வை தொடுகடல்சூ ழுலகழிக்க
முன்னியதென் றமரர்கடு நடுங்கவதை முடிக்கொளலான்
மன்னியமா மறையுரைத்த வயக்கிடுங்கன் காதரப்பேர். (௧௮)

நீயவழற் கொழுந்தெழுந்த சேணவக்க ளகம்புரிந்து
பாயமுனிக் கணம்பிறப்பித் தேவவிளைஇப் படர்கரியை
யாயவிறற் சிங்கமென வடர்ந்துரித்த காரணத்தாற்
றூயவரை யானையுரித் தவரெனச்சொல் லுவரின்னும். (௧௯)

ஓங்கார மொழிந்தசிறு விதிசிறியோர் தமைகயந்து
பங்கார வுதவேனென் றுரைத்துமகம் பண்ணுங்கா
லுங்காரத் தொடுதோன்றி யுதையழித்த லால்யாக
சங்கார ராயினார் சங்கரனா மந்தரித்தார். (௨0)

பாலிடத்தா னெய்போலப் பார்த்தனைப் பசியவிலை
யாலிடத்தான் றெழுதுதொழு தன்புருகி யருந்தவத்தான்
மேலிடத்தான் றோன்றியிடம் விராலவமைத் திடுதிறத்தான்
மாலிடத்தா னென்றொருபேர் மறையிடத்தான் றாங்கினான். (௨௧)

தராதலமீ தருச்சனன்செய் தவநிலையி லொருகேழல்
விராவுதல்கண் டொருவேட வேடமரீஇ யிகன்றவனங்
கிராமமெலடுத் தெறிந்தடிபட் டிரங்கியருள் செய்தவினாற்
கிராதவடி வத்தரெனக் கிளப்பனவா லெந்நூலும். (௨௨)

சங்கார காலமெலாந் தழலாக விழித்துவெளிச்
சிங்கார பீடமிசைச் சிருட்டிதிதி செயுமவர்தம்
பங்கான முழுவெலும்பு பரித்தமருங் கரணத்தாற்
கங்காள நாதரெனக் கற்றுணர்ந்தோ ரெடுத்துரைப்பார். (௨௩)

வரசாத மலிசெய்ஞல் வளம்பதியாற் றாரடிவே
விரசாத னமாக்கொடமை விழைந்துபா லாட்டல்கண்டும்
பரசாத வனைத்தடிந்தார் பாலுவந்து தண்டீசப்
பிரசாத ரெனுநாமம் பெற்றார்சத் தியோசாதர். (௨௪)

அண்டர்மக பதிமலர்மே லயனெடுமா லாதியராந்
தொண்டர்முறை யிடற்கிரங்கிச் சுடுவிடமுண் டருடிறத்தால்
வண்டரிசைத் திடுகொன்றை மாலைவே ணியர்நீல
கண்டரெனும் பெயர்பெற்றார் கைகுவித்தியா வருமிறைஞ்ச. (௨௫)

வக்கரவு மில்லாது யிணர்த்துழாய் மாறுவா
லக்காமோ ரைந்தோதி யடியிற்கண் ணப்பியன்பு
மிக்காவோ வெனமேமி விழைந்தளித்த காரணத்தாற்
சக்கரதா னேசரெனு மொருதிருப்பேர் தாங்கினர். (௨௬)

சோக்கந்த மெய்தாமே ருக்கருத்தி யாய்கிமிர்த்தா
ராக்கந்தம் பாலவா வனைத்துயிருந் தொழுதுய்யக்
காக்கந்தக் குழலுமையாள் கந்தரொடு மமர்தலிறசோ
மாக்கந்த ரெனுநாமம் பெற்றுவயங் கினரன்றே. (௨௭)

மதிக்கருண்கூர் தும்பிமுக வல்லசுரன் றனைமாட்டித்
துதிக்கருவோ ரிடத்தேத்தத் துவன்றுபுகர் முகத்தவா
நிதிக்கருண்கூர் தலினுலகெங் கணுநிறைந்தார் நீடுகண
பதிக்கருள்வா ரென்றுநிக மாகமங்க ளினும்பகரும். (௨௮)

போதனெடு மாலொருகாற் புண்ணியநா யகர்தம்மோ
டாதலுறு மொருவரொடு மகந்தைகெட வொருகான்மெய்
மோதவிரு பாலவனை முளைப்பித்த தாலேக
பாதவுருத் திரரென்று பகருவா ரொருநாமம். (உக)

அகாரமுருப் பலவாய வக்கரந்தோ றுறுதலென
விகாரமறப் பல்லுயிர்க ளிடத்தும்வியா பகமாகி
யுகாரமையுறப் பெரும்போக முதவுதிறத் தாலென்றுஞ்
சகாசனத்த ரெனும்பெயருந் தோன்றவுரைத் திடுமறையே. (௩0)

ஒன்றுசிவா லயங்கடொறு முதீசியெதிர் திசைநோக்கி
யென்றுமியல் பதியொடுயிர் கலத்தலிது போலென்று
கன்றொருசின் முத்திரைக்கை கூறநயந் தமர்தலினு
லன்றலின்மூ லாசிரிய ரென்றுரைக்கு மருமறையே. (௩௧)

பாயமல ரிருப்பானும் பரவையிசைக் கிடப்பானுஞ்
சேயபுற வையும்விலக்கு மாய்த்தேடித் திகைத்திடநோ
னேயமிக வோரிலிங்க நின்றுவெளிப் படுதலினன்
மேயவிலிங் கோற்பவரென் றுரைத்தருளும் வேதமெலாம். (௩௨)

துணைத்தெழுந்த முலையுமையா டியபசு வாய்மதா
பிணைத்தெழுந்த பாலாட்ட வெளிப்பட்டவ் வுருவிர்த்துப்
பணைத்தெழுந்த களிப்பினொடு மணைத்திடலாற் பரமர்தமக்
கணைத்தெழுந்த நாயகரென் றொருபெயரா லியதம்மா. (௩௩)

இந்தவித மோரிருபத் தைந்துருக்கொண் டினிதியன்று
பந்தவுயிர் களுக்கொழிக்கும் பண்புகூர் மகேச்சுரர்தா
நந்தமது பெருந்துறையி னுடுகுருந் தடிவாழு
மந்தமில நாதிமூர்த் தத்தான்ம நாயகரே. (௩௪)

ஆதிசத்தி யாலுயிர்க ளத்தனையுந் திரோபவித்துச்
சோதிமுத்தி யெளிதுய்க்கு மகேச்சுரர்தந் திறஞ்சொற்றுங்
கோதியற்ற வொழிந்தவுயி ரெவையுமுனங் குறித்தருளு
நீதியுற்ற வுருத்திரசி கண்டாரு ணிலையுரைப்பாம். (௩௫)

மகேச்சுரமூர்த்தமுரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௪௯௧.

---

# உருத்திரமூர்த்தமுணர்த்துபடலம்.

வெள்ளியபங் கயக்கிழத்தி விம்மியிறு மார்தழுலே வீக்கந் தாக்கத்
துள்ளியவெண் டோள்வரையான் வரைந்தவெழுத் துற்றபயன் றேன்ற வோரார்
கள்ளியகத் திருவாத வூரடிகள் வாய்மலர கம்மா னேருற்
றுள்ளியகை யால்வரைந்த பலவெழுத்து வோரெழுத்தை யோர்ந்து ளாரே. (க)

வாரிபுடை சூழ்புடவி கடுகிற்கு மாமேரு வரைக்கோர் பாங்கர்
மூரிநெடுங் கைலைமகா கைலயது காரியமா மொழிய நிற்கு
மேரியலு மகேசரரு வேதவுருத் திரராங்க ளிருந்து வாழ்வார்
சீரியகான் முகனெடுமா லிந்திரனு தியர்கிதமுஞ் சேவித் தேத்த. (உ)

அவரேபல் லுலகினுக்குஞ் சங்கார காரணரா யசல மீன்ற
துவர்வாயி னுமையவனு யகராய்ப்பல் லுருத்திரர்க்கோர் தோன்ற லாராய்
நவமேய தலங்கடொறு மிறையவராய் விழவாதி நலங்கொண் டென்றுந்
தவமேய வுயிர்க்கெல்லாந் தக்கபலன் கொடுத்தருளுந் தலைவ ராவார். (ங)

சுத்தவித்தைக் கதிபராய் மாலயனு தியரேவற் றொழில்கள் செய்ய
நித்தியரா யமர்வர்களிந் தடியர்தியா னத்திலுறு நிலைமை கூறின்
மத்தமறு கெருக்கிதழி மதியரவு நதிசடைமேல் வைத்து காலு
கைத்தலத்து மான்மழுவு மபயவர தமுநிலக் களமுங் காட்டி. (ச)

பைங்கணு மையிரேடும் படர்கேழற் கோடுகெடும் பாம்பும் விண்ணே
ரங்கமா லையும்புயத்தி லணிந்துபுலி யதளுடுத்த வழகு தோன்றச்
சங்கணிந்த குழைதோன்றக் கருணைமுகப் புன்முறுவ றயங்கித் தோன்ற
கொங்கமையுங் குளிர்ந்தமலர்ப் பதந்தோன்ற நின்றுகதி கொடுப்ப ரன்றே. (ரு)

ஆதிபூ கயிலாயப் பெருந்துறைப்பைங் குருந்திமை ரான்ம காத
சோதியவிச் சுத்தவித்தைக் கிறைமையுருத் திரராகி யுருத்தி ரப்பல்
பேதமெலாம் படைத்துமிகு சங்காரத் தொழிலருளும் பெருமை தன்னைச்
சீதமதிக் குலவேந்தர் வேந்தனே யாமுனக்குச் செப்பக் கேண்மோ. (சு)

வேறு.

சிவஞ்சத்தி சிறக்குஞ் சதாக்கிய மகேசந் திகழ்சுத்த வித்தையோ ரைந்துந்
தவந்தவ மான்ம நாயகர் தமக்குச் சுதந்திர வடிவமா தலினு
லவர்புரி தொழிலு மவர்புரி தொழிலா மிதற்குவே றையமொன் றுண்டோ
கவந்தரு விதத்து மேகநா யகனே நடிப்பனென் றாகமஞ் சொலலால். (எ)

சுத்தமா யையினு மசுத்தமா யையினுந் தோன்றிய வண்டத்தின் றொகைக
ளித்தனை யெனவெண் ணுதலரி தமா வியலுறு மைந்தொழி லியல்பும்
வைத்தனர் பலவா வவற்றிவ் வண்ட மாய்ந்தபின் னுதித்திடுங் கால
கித்தா கியசங் காரநா யகர்முன் னிகழ்த்திய விலிங்கத்திற் றோன்றி. (அ)

ஒருசதா சிவராய் மகேச்சு ராய்முற் றொழித்திடப் பலுருத் திரரா
யிருவித மெனுமுன் பின்னென வொழிந்தே யெவ்வுரு வேண்டினு மியைந்த
மருவதி காரக் கைலையின் மேவி வயங்குமைம் முகப்பிரே ரகத்தாற்
பருவதி கார வவரைப் படைத்துப் பஞ்சபூ தத்தினு நிறவி. (௯)

மந்திரம் பதம்வன் னம்புவ னந்தத் துவங்கலை யாறென வகுத்துத்
தந்திரம் புகலத் துவாவயன் முதலோர் தாமுறப் பகிர்ந்தளித் தவருக்
குந்துமைந் தொழிலி னெவ்வொன்றே மிகுமா றுதவியவ் வைவர்க டம்மி
னந்தபூ மிசையோ ரரண னீங்க கலமிகு மற்றையுறு வரையும் (௧௦)

சமைதம தினமாக் கொண்டயன் மாலைத் தாம்புக லேவல்செய் வாரா
யமைவுசெய் தயனுற் றிசைபுரப் பவரா யமரரை வித்தியா தரரைக்
கமைமுனி வரிராக் கதரியக் சரைக்கந் தருவர்சித் தர்கள்கரு டர்களைச்
சுமைபெறு யாழ்க்கிம் புருடர்கின் னரரைத் துவன்றுவிஞ் சையர்மருத் துவரை.(௧௧)

ஈரெழு மனுவை நவக்கிர கரைமீ தெழுமுடுக் கணங்களைக் கடலைப்
பாருறு மலையை நதிகளை வனத்லதப் பறவையை நரர்களை மற்று
முருவ திருப்ப தியாவையும் படைக்க வுதவிசெய் தவையெலாம் புரக்கத்
தாருறு துழாயச் சுதற்கருள் புரிந்து சக்கரப் படையுகன் கருளி. (௧௨)

ஆணவ மயக்கா லிருவர்செய் தொழிலு ளறம்பிறழ் தொழினட வாம
னீணிலங் கீழ்மே லெண்டிசை முழுது நினைந்துகாத் திடுவதற் காகப்
பேணுருத் திரப்பேர்ச் சிவகண நாதப் பெருக்கையும் படைத்தங்கங் கமைப்பர்
மாணுமக் கணத்துத் தொகையினுட் சிறிது வகுத்திடக் கேட்டிமன் னவனே. (௧௩)

வேறு.

சோதி யாயருட் சுயம்பிர காசமாய்ச் சுடர்க்கயி லையின்மேவு
மாதி காரண ராமுருத் திரர்தமி லாயிரத் தொருகூறு
நீதி சேரகா சிருதரைப் படைத்தபி னிகழநா தரைமேலா
வோத னந்தரா வியோமரூ பரைவியா பகரையு முதிப்பித்து. (௧௪)

அருவி யாபக ரிற்பிரிந் தவரெனு மாடகே சுரர்க்கென்று
மருவு மோரெழு பாதலம் புரந்திடு மாண்புகல் கியபின்னைப்
பெருவி யோமரூ பரிற்பிரிந் தவரெனப் பேசுகூர் மாண்டர்க்கு
வெருவு மாநர கனைத்தையும் புரந்திடும் வெற்றிசா றொழினல்கி. (௧௫)

அனந்த ரிற்பிரி வானகா லாக்கினி யுருத்திரர் தமக்கன்பிற்
கனந்த ரும்பிர மாண்டத்தின் வளமெலாங் கடிவதற் கருணல்கி
யினம்பொ ருந்தநா தரிற்பிரி வானவா தாரசத் தியையென்று
மனங்க ளித்திலே சாகவண் டங்களைத் தாங்கென வரநல்கி. (௧௬)

வண்ணி லாவயி ரவர்களைத் தம்மிடத் திருந்துகித் திடப்பண்ணி
நண்ணு கேத்திர தீர்த்தங்காத் திடலெனு நயக்குமோர் தொழிலீந்து
வண்ண நன்னுதற் கண்ணிடை வீரரை வரவழைத் தவர்மெய்யிற்
றிண்ண மாம்பல பூதகோ டிகள்வரச் செய்துசே வகராக்கி. (௧௭)

ஐய னார்தமை யரியெனு மோகினி யரிவையின் வரப்பண்ணிச்
செய்ய கேமியுஞ் சூலமும் பாய்பரித் திரளும்வெண் கயமாவும்
வெய்ய பல்படைப் பூதரும் பெற்றுநீ மிக்கவுக் கிரத்தோடும்
வைய கத்தமர் பதியறம் வளர்த்திடென் றன்பொடும் வரதல்கி. (௧௮)

மான்ம ழுப்பெறு கரத்தரா யிடபவா கனத்தராய்ச் சடைதாங்கித்
தான்ம லிந்தபூங் கொன்றையு மரவமுங் கடவுட்கண் மணித்தாரும்
பான்ம லிந்தவெண் ணீறமெய் யுறப்பெறு மீசர்பன் னொருபேர்கள்
வான்ம லிந்திகி ழுத்தர மூலையில் வசித்திடும் படிசெய்து. (௧௯)

வேறு.

தனது சத்திபி னுற்றகூ றுச்சத்த மாத
ரினிய பத்திர காளியி டாகினி துர்க்கை
வனமு றுங்கவு மாரிசண் டிகைபக வதியே
கனப டைக்கலத் தொடும்வரு மாகடைக் கணித்து. (௨௦)

கோடி கோடிபல் கோடியா கியகுறட் பூதம்
பாடி யெங்கணு மாடிடப் பரப்பியெம் பரம
னேட லர்ந்தபைங் தருப்பொலி கையிலையி னிருந்து
நீடு மைந்தொழில் புரிவனத் தொழில்செயு நெறியால். (௨௧)

காளி லேபசு புண்ணிய மிகுந்துகன் னலஞ்சார்ந்
தாளு மாசிவ புண்ணிய மபுத்திபுத் தியினாற்
றேளி நற்பொதுச் சிறப்பிரு வகையில்வந் துறவன்
காளு லாயிருண் மலத்தினைப் பயப்பயக் கழித்து. (௨௨)

பாக மேவிய வுயிர்கள்புன் சமயத்திற் பதியா
தியோக காயகி நிலைவனுட் சமயத்தி லுறுதித்
தாக மாய்க்குரு வருள்பெற நாடிடுந் தாகம்
போக மீதுறிற் பொதுவகைத் தீக்கைகள் புரிந்தும். (௨௩)

முத்தி யேபெறு வோமெனத் தாகமுன் முதிர்ந்து
பத்தி மேவுயிர்க் குண்மைத்தீக் கைகள்பண்பிற் செய்துங்
குத்தி ரம்மிலாத் தலத்தொறுங் காரிய குருவா
யொத்தி ருந்திரு முத்தியன் பளவறிந் துதவி. (௨௪)

இலங்கு காரண குருவுரு வாய்ப்பெருந் துறையு
ளிலங்கு நற்றிருச் செழுமலர்க் குருந்தடி யிருந்தே
புலன்கொ ளும்படி ஞானநோக் காலருள் புரிந்து
நலன்பொ ருந்துபே ரன்பினாற் பெறுமின்ப நலத்தை. (௨௫)

அநாதி மூர்த்தரா மான்மநா யகரினி தருள்செய்
தினாத வன்பவக் கடலுறு துயிர்களை யெடுத்து
மனாதி தானந்த வருட்பெருங் கடலினுண் மடுத்துப்
பினாத ரம்பெறு பேரின்ப போகம்வீ சிடுவார். (௨௬)

திருப்பெ ருந்துறைக் குருந்தில்வாழ் சிவனையே சிறந்த
கருத்தி ணுன்மிகுங் காரண குருவெனக் கழறு
மருத்த மென்கொலோ வென்றுநீ கேட்டிடி லரச
பொருத்த மாயுனக் கறிந்திடும் வகையிங்குப் புகல்வாம். (உஎ)

கேளெ னத்தவு மியர்சொல்வார் கேவல சகல
நீள வத்தையிற் படுமுயிர்த் துன்பெலா நீக்கிக்
கோளி லாதநற் சுத்தத்தி லிருத்தமுன் குருவா
வாளு நற்சிவ லிங்கமாச் சங்கம மாக. (உஅ)

ஆதி யிற்பர சிவன்கொளு முருவமூன் றவற்று
ணீதி சேர்சிவ லிங்கமுஞ் சங்கம நிறைவும்
போத மேவுகா ரியகுரு வாயருள் புரியும்
பேத மற்றகா ரணகுருத் தன்மையைப் பேசில். (உகூ)

தலந்தொ றுந்திகழ் தாபர சங்கம மாகி
மலங்க ணீக்கிட மாப்பெரும் பூசைகொண் டிருந்து
கலங்க ளீவதல் லாற்றனிக் கோயினற் குருவுக்
கிலங்கு மத்தலத் திராமையாற் காரிய வியல்பே. (௩0)

ஆத லாலவர் காரண குருவென்ப தறிதி
காத லானுருத் திரர்பெருஞ் சிறப்பினைக் கரைந்தா
மோத லானுள நினைத்தலாற் றீண்டலா னுறுநோய்
வீத லானுயர் வெள்ளிய நதிப்புகழ் விரிப்பாம். (௩க)

உருத்திரமூர்த்தமுரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫ாஉ.

---

# வெள்ளாற்றுப்படலம்.

---

கடுவலிப் பாசம் வீசி யுயிரெலாங் கவர்ந்து கொள்ளு
மடுதிறற் கூற்றஞ் சீற்றத் தடிபிடி யெனுஞ்சொற் கேளார்
கொடுமலத் தாற்றல் குன்றி முதலொடுங் குலையக் கொன்ற
வடுவினம் வாதவூரர் வாசகத் தொருசொற் கேட்டார். (க)

படுவன மிதப்பக் கொண்ட பாண்டிகா டாளும் வேந்தன்
வடுவறு குணத்தான் மிக்கான் மதிக்குலத் துதித்த தக்கான்
றெடுகெழற் காலா னெல்லாப் புரவலர் தொகைக்கு மேலான்
கெடுதலில் சீர்க்க வேத கேதுவென் றுரைக்கும் பேரான். (உ)

தூயவெண் ணீறு பூசித் துலங்குகண் மணிகள் பூண்டு
சேயவைந் தெழுத்து மெண்ணி நிருமலன் பதம்பூ சிப்பா
னாயபஞ்ச தலங்க டோறு மணைத்தணைத் துறச்சே விப்பான்
பாயபஞ்ச தமருஞ் சூழ வெழுந்தனன் பகர்தன் னாளில். (௩)

தழுவுதன் னாட்டி னுள்ள தலமெலாஞ் சென்று சென்று
வழுவற வாங்காங் குள்ள தீர்த்தமு மாபி னாடித்
தொழுதுளங் களிக்கும் வேந்தன் னொருக்கமா தவத்தின் பேற்றா
னுழுவலன் புடையோ னாகிப் பெருந்துறை யுற்றா னன்றே. (௪)

மிக்கினி தடுத்து ளார்தம் வெம்பவக் காடு நீத்தற்
கக்கினி யாயே மன்னு மக்கினி தீர்த்த மாடி
நக்கினி யாச்சோ மூன்று மெரித்தார்கல் லருள்செய் பாக்குப்
புக்கினி வெயிலு வந்தார்ப் போற்றுது மென்று போந்தான். (௫)

மாதவப் பிரிய மென்ன வயங்குதீ றாதி மெய்யம்
மாதவத் துலங்க வங்கை மலர்குவித் துளத்து வேறென்
னாதவத் திறம்போய் மாய வன்புமிக் கோங்க நேர்வந்
தாதவப் பிரியர் பாத மடைந்துதாழ்ந் தெழுந்து போற்றி. (௬)

அருந்தவ முனிவ ராலு மாரண னெடுமா லாலும்
பெருந்தலை மறைக ளாலு மளந்தின்றும் பேச வொண்ணா
திருந்தசெஞ் சடையா னெங்கு மிருப்பினும் விசேட மாகக்
குருந்தடி யமரும் வாழ்வைக் கண்டுகும் பிட்டா னன்றே. (௭)

ஏகநா யகியை யன்பர்க் கிருவினை யறுத்தின் புய்க்கு
மோகநா யகியை யண்ட முழுதுமா யினுமெம் மாற்கோர்
பாகநா யகியைப் பாகம் பண்ணியெம் மையுமாட் கொண்ட
யோகநா யகியைக் கண்ணுற் றுருகுபு பணிந்தா னன்றே. (௮)

எழுவுறழ் தடந்தோள் வேந்த னிரிதரா திந்த வண்ணஞ்
செழுமலர்க் குருந்த மேய சிவபராஞ் சடையா யோக
முழுமுதல் வினைப்பூ சித்து முனிவிலத் தலத்து வாழ்நாட்
செழுவொரு நதியி லாமை யெண்ணுபு கிலேசங் கொண்டான். (௯)

தலம்பல வினுமே லாமித் தலந்தனி லருள்சா றீர்த்தக்
குலம்பல விருக்கு மேனுங் குலத்திழிந் தாரு மூழ்கி
நலம்பர மாக வெய்த நதியிலா திருத்த னன்றோ
நிலம்பர விடுமா றென்று நிருமித்தல் வேண்டு மென்று. (௧0)

நகுகுருந் தடிவா ழான்ம நாதர்தந் திருமுன் சென்று
நெகுமனங் கனியக் கண்க ணீருகுத் திடநேர் தாழ்ந்து
கருபால் லுடையா யென்னைக் கைக்கொளென் றெழுந்து நின்று
புகுமுகம் புரியு மாறு போற்றின னீது வேண்டும். (௧௧)

கங்கையோர் பத்துஞ் சென்னி யொருசடைக் கரக்கச் செய்தாய்
மங்கையோர் பங்கா வித்த மாப்பெருந் தலத்தி யார்க்கு
மங்கையா மலக மென்ன வருள்செய்மா நதியொன் றின்றே
சங்கையி லாது மேவத் தந்தரு டாரா யென்னில். (௧௨)

அடியனேன் கண்ணீ ரேபல் லாறுகப் பெருகா நிற்கு
முடிவிலக் நீரு மோலிச் சடையெலா முகக்கு மாறு
நெடியதோர் வேலையுண்டா மதுநிகழ் வதற்கு முன்னே
கொடியனேன் கவலை தீரக் கொடுத்தியோ ராற்றை யென்றான். (௧௩)

என்றலு மான்ம நாத ரிரங்கியா காய வாக்கா
னன்றருள் செய்வார் மன்னா நயந்தொரு சைய மெய்தி
நின்றருந் தவஞ்செய் வாயே னினைத்தவா முடித்து மென்றா
ரன்றது கேட்ட வேந்த னடங்கரு மகிழ்ச்சி யெய்தி. (௧௪)

சையமால் வரையை யெய்தித் தவாவரு ளான்ம நாதர்
செய்யதா மரைத்தா ளுள்ளஞ் செறிதரச் செறித்து நின்று
மெய்யவா மன்ன ரேறு மெய்யவா வாது வாட்டி
வெய்யவா தவமுன் யாவு மேவுறத் தவம்பு ரிந்தான். (௧௫)

அருந்தவஞ் செயுஞ்சு வேத கேதுமன் னன்பு நோக்கிக்
குருந்தடி யமரு மையர் கோலமா மறையோ ராகிப்
பொருந்தமற் றவன்முன் செல்லப் பொருக்கெனக் கண்டு தாழ்ந்தான்
வருந்தலை பன்னா ளுஞ்செய் மாதவ மகிழ்ந்தே மென்றார். (௧௬)

என்றவ னெதிரோர் தீர்த்த மினிதினுண் டாக்கி யீது
நன்றிரு பாக மாகிக் காவிரி காப்ப னாகச்
சென்றிரு பாலு மோடித் தில்லையின் வடக்கோர் கூறாய்
மன்றகா மகிழுந் தெய்வப் பெருந்துறை வடக்கோர் கூறாய். (௧௭)

ஓடுபு பரவை சாரு முறைத்தவிக் குடிலனா நாம
நாடுநின் பெயர்முற் சொல்லா னானிலம் புகல்வ தாக
வாடுநர் நம்பே ரின்பத் தாடுந ராகக் காட்சி
கூடுநர் நமது காட்சி கூடுந ராக வின்னும். (௧௮)

இருபகுப் பாயி வங்கு மிக்கதி யிரண்டு பாலும்
பொருவரு வளங்க ளெல்லாம் பூப்பன வாக மூழ்கி
யொருவருஞ் சிராத்தஞ் செய்வோ ருலப்பிலா வளற்ற முத்தி
வெருவுறும் பிதிரர் தம்மைக் கரையேற்றி விடுவா ராக. (௧௯)

ஆயவன் கயாசி ராத்த மாயிர மேனு நின்பேர்
மேயநன் னதிச்சிராத்த மொன்றினை வெல்லா வாகத்
தூயமற் றிதனைக் கண்டார் தொட்டாருட் கொண்டா ரியாரும்
பாயகம் முலகஞ் சேரும் புண்ணியப் பால ராக. (௨௦)

உலகுப கார மாக வொருகுருத் தடியின் மேவு
மலகினம் மருள்கு நித்தே யலகிலன் முயன்று கோற்று
வலனுடை யிவ்வ ரங்கண் மாட்சியிற் பெற்ற நீயு
மிலகுகம் மடிக்க லப்பி னெய்தியின் புறவா யாக. (உக)

என்றுபல் வரமு நல்கி மறைந்தன ரெங்க ளைய
னன்னெறி ரமைந்த தீர்த்த மலையெறிந் திருபா லாகி
வென்றுமேம் படுகா வேரிக் கிருபாலும் விராவி யோடிச்
சென்றுவான் பரவை தோய்ந்து திருந்துமா நதியா யிற்றே. (உஉ)

அதிசயம் பயப்பப் பொன்னித் தென்றிசை யவாவிச் செல்லு
நதிவழி வந்து மன்ன னருபெருந் துறைக்கு நீடி
மதியமை துறையின் மூழ்கி வயங்குவெண் ணீறு பூசிப்
பதியெனு மான்ம நாதற் பணிந்துள மூவந்தா னன்றே. (உங)

அற்லைறநா ளாதி யாக வமரரே முதல்யா வோருங்
கற்லைறவார் சடையா ரன்று கட்டளை யிட்ட வாய்மைப்
பற்லைறயா தரித்து மன்னன் பெரும்புக ழையும்பா ராட்டி
விற்லைறயா திற்கு நாமம் வெள்ளாறென் றிசைத்தா ரன்றே. (உச)

வானந்த மலைவி ராவ மாப்பெருக் கெடுத்து நேருங்
கானந்த முறப்பெ யர்த்துக் கடுத்துமேல் வரும்வெள் ளாற்றை
யினந்தம் பானீப் போர்தோய்ந் தானந்த மெய்த லாலே
யானந்த வெள்ளா றென்று மறைகுவ ரறிந்து ளோரே. (உரு)

மணிபல கொழித்து வாரி வரையகில் சந்து ருட்டிக்
கணிதமின் மலர்ப ரப்பிக் கடுகுபு வருவெள் ளாற்றி
னணிகெழு மஞ்ச னங்கொண் டான்மநா யகனை யாட்டுந்
துணிவினர் பெறுமாப் பேற்றை யாமேயோ சொல்ல வல்லேம். (உசு)

பொருவருஞ் சுவேத கேது மன்னவன் புரிந்த கோன்பால்
வருபெருந் திலைாவெள் ளாற்றின் மாட்சியை யெடுத்துச் சொற்று
மிருவரு முணரா வைய ரினிதம ரிடமாய்ப் பாவர்
மருவரும் பெருந்து றைச்சீர் விசேடமும் வகுப்பா மன்றே. (உஎ)

வெள்ளாற்றுப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் இஉகூ.

# பெருந்துறைவிசேடப்படலம்.

---

பாய மாமலர்க் கற்பக நீழல்வாழ் பவன்பதம் விழையார்கள்
காய தாமரை மலர்மிசை யிருப்பவ னரும்பதம் விழையாரின்
பேய காடொறும் பாம்பணைக் கிடப்பவ னிரும்பதம் விழையார்வான்
றோய வாவிசூழ் வாதவூர்த் தம்பிரான் றுணைப்பதம் விழைந்தாரே. (௧)

அநாதி முத்தனா மான்மநா யகப்பிரா னைந்தொழி லினிதாற்ற
வநாதி யேசெழும் பிரணவ பீடமா வதாயமர் திறத்தானு
மனாதி மேற்பரை குண்டலி வடிவமா மன்னிய திறத்தானு
மனாதி யொப்பவ காதிமூர்த் தத்தல மறைபெருந் துறையென்னும். (௨)

மேய மேன்மைசால் பிரணவ நாதகல் விந்துவக் கரமற்று
மாய மாமறை யாகம மாதிய வனைத்துநூற் பொருளெல்லாந்
தூய யோகநற் பீடமாக் கொடுபரை தோன்றமே வுதலாலே
பாய சித்தியத் தலமொன்றே யுலகெலாம் பரித்துமே விடும்மா. (௩)

விரிய வெப்புவ னங்களும் வாழ்பவர் விண்ணவர் விண்ணாளி
யரிய தாமரை மேலவன் மாலவ னளப்பிலா முனிவோர்க
டெரிய வந்துவந் திறைஞ்சுபு நினைபொரு டிருத்தகக் கொளக்கொண்ட
பெரிய தாயபண் டாரமொத் ததுதிருப் பெருந்துறைத் தலமம்மா. (௪)

திருவ மல்கிய திறத்தினாற் றிருமக டிருவநல் குறுகல்வி
மருவ மல்கிய திறத்தினாற் கலைமகண் மாண்புசான் மெய்ஞ்ஞான
வுருவ மல்கிய திறத்தினாற் பராபரை யொத்ததற் றவர்க்கின்ப
மிருவ மல்கிய கருணைசால் பெருந்துறை யெனுந்திருத் தலமம்மா. (௫)

உயிர கத்தமர் தான்மநா யகரெனு மொருபெயர் பெற்றாரவ்
கயிர்த பப்பிர சன்னமா யமர்தலி னனைத்துயிர் களும்போலுஞ்
செயிர றுத்தலடர் தார்க்கன்பு செறித்தலாற் றிருவாத வூரண்ணல்
கயிர வத்திரு வாய்மலர் வார்த்தையுங் கடுக்குமத் தலமம்மா. (௬)

சரியை வேண்டினர்க் கதன்பய னல்கலாற் றவிர்தரா தினிதாற்றுங்
கிரியை வேண்டினர்க் கதன்பய னல்கலாற் கிளர்பெருஞ் சிவயோகம்
தெரிய வேண்டினர்க் கதன்பய னல்கலாற் றிருந்திய சிவஞானம்
புரிய வேண்டினர்க் கதன்பய னல்கலா னான்மநா யகம்போலும். (௭)

வேறு.

வரவு ருத்திர நாயகர் மன்னிய கயிலை
பரவு சீர்ப்பெருந் துவாதசாந் தத்தலம் பண்பின்
விரவு மான்மநா யகரம ரித்தலம் விளம்பிற்
கரவு தீர்தரு சோடசாந் தம்மெனக் கரைவார். (௮)

இன்னு மப்பெருங் கயிலையை யுலகமென் றிசைக்கு
மன்னு மாபுரு டனுக்குற விசுத்தியா மதித்துப்
பன்னு நான்மறை திருப்பெருந் துறையெனும் பதிதா
னுன்னு மாதுரி யாதீத மாலென வுரைக்கும். (௯)

சகள ரூபமாங் கயிலைமுன் னெவ்வகைத் தலத்து
மகள ரூபமாந் திருப்பெருந் துறைப்பதி யதிக
நிகள மாகிய பந்தநீத் தின்பமா நிறைவெய்ப்
புகள மாவறப் புணர்த்திடு திறத்தினாற் பொலியும். (௧௦)

இந்த மாத்தலந் தனக்குயர் வொப்பதொன் றில்லை
யந்த மாதியு முளதென வறைவது மில்லை
யெந்த நாளுந்த னியல்பினிற் றவிர்தலு மில்லை
யுந்த மேவினோ ருட்பிறப் புறுநரு மில்லை. (௧௧)

கங்கை யாறுசூழ் காசியா தியதலங் கலப்புற்
றங்கை யாமல கம்பொர வாற்றுபுண் ணியங்கள்
சங்கை தீருமா மேருவே யெனினுமித் தலத்து
மங்கை பாகர்முன் புரியணுத் துணையுமா னதால். (௧௨)

ஒருபெ ருந்துறைத் திருவிழாச் சேவிக்க வுறுவார்
மருவு தற்கிடங் கொடுத்தவ ருணப்பதம் வழங்குந்
திருவ மிக்கவர் திருமடஞ் சமைத்தவர் தெய்வப்
பொருவில் சீர்த்தியு மவர்பெறும் பேறுமியார் புகல்வார். (௧௩)

நந்த னப்பணி யியற்றுநர் நறுமலர் பறித்துப்
பந்த முற்றிடத் தொடுத்தணி பவர்தளிப் பரவ
முந்த நெய்விளக் கிடுபவர் பிறபணி முடிப்போ
ரெந்த வானருங் கீழ்ப்பட மேற்படு மியல்பார். (௧௪)

அன்ன தானநன் காற்றினும் பிறிதறஞ் செயினு
மன்ன வற்பமு மேருவாய்ப் பெருத்திடு மரபாற்
சொன்ன வத்தலத் தடைந்தன ராற்றிடத் துணிவா
ரென்ன வேறுபஃ றலத்துமெய் தாரறி யியல்பார். (௧௫)

வேறு.

கலமலி யித்த லத்தி னுமக்கே வனாதி மூர்த்தத்
தலமருள் வடிவ மாய பெருந்துறை சான்றோ ரியாருஞ்
சொலவொளி மயமாய் மேய சிவபுரந் தோன்றெஞ் ஞான்றுங்
கிலமில தாய ஞான கேத்திர மின்னுங் கேளாய். (௧௬)

மன்னிய புகழ்க்கு ருந்த வனம்யோக வனமென் ஞான்று
மின்னிய புகழான் மிக்க தென்கயி லாய மேன்மை
பன்னிய வொருகால் வேத புரம்பவித் திரமா ணிக்கந்
துன்னிய யோக பீடப் பதியின்னுஞ் சொல்வ துண்டால். (௧௭)

பராசத்தி புரமெய்ஞ் ஞானத் தவமெனப் பகரி ரண்டும்
விராவுற்று நிறைந்த தேச வனம்விளங் காதி கைலை
யொராவற்பி னொளிர்மும் மூர்த்தி புரமுப தேச மூது
ரிராவற்ற நாம மின்னும் பலவவை யியம்பப் போமோ. (கஅ)

பெயரிவைக் கேதுப் பின்பு பேசலாற் றெரிய லாகு
முயர்தலப் பெருமை சொற்று மொருதரஞ் சொலினுஞ் சன்மத்
துயரறுத் தின்ப வாரி தோய்த்திடுங் கருணை மூர்த்தி
மயலறு பெயருஞ் சற்றே வகுத்துரை யாடக் கேண்மோ. (ககூ)

பெருந்துறைவிசேடப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ருசஅ.

---

# மூர்த்திநாமவிசேடமுரைத்தபடலம்.

மறைபுகல் சரியை யாதி வயங்குகாற் பாதம் பற்றி
முறைமையி னொழுகல் வெஃகார் முதுவன வாத வூரெம்
மிறையிரு பாதம் பற்றி யியங்குதல் வெஃகி னோரோர் .
குறையில ரடுத்துளார்தங் குறைவினை முடிப்ப ரன்றே. (க)

நலமலி யகாதி மூர்த்தி நயத்தலா லகாதி மூர்த்தத்
தலமென்ப ரகாதி மூர்த்தத் தலேசனென் றொருநா மம்பெற்
றிலகுவ னிறைவன் முன்ன மெதிர்வழக் காடி வெட்டு
நிலவடு வகத்தி னின்று நீரெழு நீர்மை தன்னால். (உ)

பெருந்துறை யென்றோர் நாமம் பெற்றது சிவபி ரானும்
பெருந்துறை யீச னென்னப் பெரியவ ரெடுத்துச் சொல்வர்
திருந்துற நன்மை நல்கிச் சிவபுர மாய தாங்குத்
திருந்துற வமர்த லாலே சிவபுரே சப்பேர் பெற்றான். (ங)

ஞானநல் குதலான் ஞான கேத்திர மெனும்பேர் நண்ணிற்
றீனமி றலமு ஞான கேத்திரே சப்பேர் பெற்றான்
வானவர் பிரானுங் குந்த மரீஇக்குருந் தவன மாயிற்
றூனநா யகன்கு ருந்த வனேசனென் றுரையைப் பெற்றான். (ச)

பரசிவ யோகஞ் செய்தல் பற்றியோ கவன மென்ன
வுரைசெய்வ ரிறைவன் றானும் யோகவ னேச னானா
னிரைவட கைலை நோக்கித் தென்கயி லாய மென்பர்
கரையிலாப் பெருமா னுக்தென் கயிலாய நாத னானான். (ரு)

பிரமனால் வேத மேற்கப் பேசுத லானால் வேத
புரமிறை யவனால் வேத புரேசனென் றொருபேர் பெற்றான்
வரபவித் திரமா யந்த மணிப்பெயர் பூண்ட தானத்
தான்பவித் திரமா ணிக்க வாசனென் றறையப் பெற்றான். (௬)

துதிபுரி யோக பீடந் தன்னலால் யோக பீடப்
பதியரன் யோக பீடப் பதியவ னெனும்பேர் பெற்றான்
மதிபலா தவஞ்செ யாற்றாற் பராசத்தி புரமாய் மன்னு
திதிகிளர் பிரானு மந்தப் புரவாச னென்னநி கழ்ந்தான். (௭)

வனமறை யொளியாற் றேசு வனமெனு மொருபேர் பெற்ற
தனகரா யகனுந் தேச வனேசனென் றறையப் பெற்றான்
மனமுறா நிட்க ளஞ்சார் வலத்தாதி கைலை யென்பர்
பனவர்நா யகனு மந்தக் கைலையம் பரம னானான். (௮)

அரன்முதன் மூவர் போற்ற லாற்றிரி மூர்த்தி காமப்
புரமிறை யவன்மும் மூர்த்தி புரவாச னெனும்பேர் பெற்றான்
வரவுப தேசஞ் செய்யும் வலத்துப தேச மூதூர்
கரவிலா னுபதே சப்பேர் கலாகா வலப்பேர் பெற்றான். (௯)

வரிபுனை சடையி னானோன் றிரித்தமுந் தாற்றி னானோ
ரிமையி னளாவி முத்துற் றொருவரென் றொருபேர் பெற்றார்
தெரிதரு சதாசி வாதி யைவருந் தியானஞ் செய்து
பரிவொடு துதிக்கு நீராற் பரமசு வாமி யானார். (௧௦)

சகமெலாம் வணங்கக் கண்டு தக்கவா றுபதே சித்துச்
சகுரு வெனும்பேர் பெற்றார் விப்பிரர் தமக்கி ரங்கி
சகவழக் குரைத்து வென்று சாயகத் தன்மை மேவி
சகவில்லைக் கொண்ட வையர் விப்பிர நாத ரானார். (௧௧)

அருமறை யவரா யத்தி யயனஞ்செய் வித்த லாலே
யொருவருஞ் சத்த நாத ருபாத்தியா யருமா னார்மேல்
வருதிறல் வழுதி முன்னை வாம்பரி யுகைக்கு மாண்பாற்
சுருதிசொ லுண்மை யாரச் சுவநாத ரெனும்பேர் பெற்றார். (௧௨)

அயன்முத லொருமு வர்க்கு மருளுப தேசஞ் செய்த
செயன்மரு வலின்மும் மூர்த்தி தேசிக ரெனும்பேர் பெற்றார்
பயனமை யான்ம நாதர் நாமங்கள் பகரி னின்னும்
வியனுள வாகுங் கண்டு விளம்பிட வல்லா ரியாரே. (௧௩)

இத்திருப் பெயரு ளொன்றை மறவாம லியம்பு வோரு
முத்தம மருவ லம்த்தர்க் கிட்டுற வழைக்கின் றோருஞ்
சத்தறி விபை ரூபத் தனிமுத லொடுக லக்கு
முத்தரே யாவ ரின்னு மொழியவும் வேண்டுங் கொல்லோ. (௧௪)

அன்னிய மில்லா வான்ம நாயக ரருளு மங்கண்
முன்னிய வெடுத்துச் சொற்று மூவுல குய்யு மாறு
மன்னிய மலையான் மங்கை வந்தவ ளளாவு மேன்மை
துன்னிய யோகபீடச் சிறப்பினைச் சொல்ல லுற்றாம். (௧௫)

மூர்த்திநாமவிசேடமுரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫௬௫.

---

# யோகபீடச்சிறப்புரைத்தபடலம்.

---

ஞாலமிசைப் பயிலுவன சற்றேனு முணரா தகுக வேதக்
கோலவுருக் கொண்டவனி முழுதிடந்து பாதலத்துக் குறுகி யாங்குஞ்
சாலமுயன் றனமந்தோ வெனவெடுமோ றனர்வெய்தத் தரணி மேலச்
சீலமல ரடிபயிலத் தெரிவாத லூரரடி சிந்தித் துய்வாம் (௧)

தோற்றுமதி யுங்கலையு மலருகறு மணமுமொன்றாய்த் தோன்று மாபோற்
றேற்றுதிரு வருளான்ம நாதரியற் குணமாகிச் செல்வ மாகிச்
சாற்றிலய போகவதி காரமெலாஞ் செய்யுமொரு சத்தி யாகிப்
போற்றுமறை யாகமபு ராணவிதி காசமுதற் பொருளு ளாகி. (௨)

தராமுதலா மைம்பூத வடிவாகி யவற்றுறுதத் துவங்க ளாகி
யுரைசெயுஞ்செல் காலநிகழ் காலமெதிர் காலமெனு மொருமூன் றாகி
விரையவரு பரிதிமுத லொளியாகித் திசையாய்க்கீழ் மேலு மாகி
வரைவில்பல்லா யிரகோடி யண்டமா யவையீன்ற மாதா வாகி. (௩)

எள்ளுக்கு ணெய்யிருக்கு மியல்பேபோ லெங்குநிறைந் திருந்து போகங்
கொள்ளுமுயிர்க் குறிப்பனைத்து முணர்ந்தவர்க் காதிபலன் கொடுத்துப் பின்பு
மெள்ளமெள்ள வபுத்திபுத்தி பொதுமூன்றிற் சிவதரும மிகுவித் துண்மை
தெள்ளுசிவ சரியைமுதற் புண்ணியத்தா லனைத்துயிருஞ் சிவத்திற் சேர்த்து. (௪)

தரைபுகழ்கா ரியரூப சத்திவடி வாயெல்லாத் தலத்து மேவு
முரைசிறந்த பெருமானுக் கிடப்புறமும் வலப்புறமு முற்று மேவிப்
புரையிலுயிர்க் கருள்செய்வா னேரைம்பான் பீடத்துப் பொலிவா ளாகி
வரையவற்று ளைம்பத்தொன் பான்பீடங் காரியமா வயங்கக் கொண்டு. (௫)

தவமலியும் பெருந்துறையிற் காரணசத் தியின்வடிவக் தானே யாகி
யுவமையிலாத் துரியபதத் தொளியேகா ரணயோக பீட மாக
நவமொடதிற் சிவயோக நாயகியென் றொருகருணை நாமந் தோடுஞ்
சிவபரா சத்தியென வீற்றிருப்ப ளப்பீடச் சிறப்புங் கேண்மோ. (௬)

ஓங்கார மெழுகோடி மந்திரத்தின் வடிவினையு முட்கொண் டென்று
நீங்காத வடிப்பீட மாயிருப்ப வதன்மேலா னிலவு பீடம்
பாங்கான நால்வேதா கமமங்க முதாலாம்பல் கலைக ளெல்லாந்
தாங்கோசை கொண்டமுப்பத் தெண்கலையா மவற்றின்பேர் சாற்றக் கேண்மோ.()

நிவர்த்திபிர திட்டைவித்தை சாந்திசாந் தியாதீத நிலைமை வாய்ந்த
வுவப்புறநல் லபரவிந்து கலையைந்தா மொளிரபர நாதந் தன்னுட்
டுவட்சிவள ரிந்திகைதீ பிகையுரோ சிகைசிவெனுடு துலங்கி யேயுற்
பவித்துயர்மோ சிகைவளரு மூர்த்துவகா மினிகலைகள் பகரு மைந்தாம். (அ)

தலையமைசு ருக்குமைருக் குமையமிர்தை மிருதைவியா பினிதா மாய
கலைகள்பர விந்துகலை யாகவுலா பராதீத கலையு மைந்தா
நிலைவியா பினிவியோ மரூபையனந் தையநா தைநி கழ்ந்து
மூலைவிலகா சிருதையென வொளிர்காத வித்திரண்டு மொருநாற் கூற்றில். (கூ)

மதியிருபா னுடுருக்குமை யைசந்தி மத்திமையை கரியஞ் சோதி
யதிவாமை சேட்டைரவுத் திரிசயைநல் விசயையப ராசி தையோர்
பதிவடிவப் பிராமிமுத லெழுமாத ராம்பதினெண் கலைக ளோடுந்
திதிமுப்பத் தெண்கலையும் பொற்பதுமா சனமாகத் திகழ வாங்கு. (கo)

சிரொன்று மினியநாற் பத்துமுக்கோ ணத்தமருஞ் செல்வி யாகிப்
பேரின்ப முதவுபிர மத்திழத்தி யாயிருப்பள் பிறைசேர் சென்னிக்
காரொன்று கறைமிடற்று ரெவ்வுருக்கொள் ளினுமவர்கா தலியாய் வாசத்
தாரொன்று குழலுமையாண் முதலான சத்திகளாய்த் தயங்கி யென்றும். (கக)

சிவன்புரியா டலுக்கேற்குந் திருக்கோலங் கொண்டுலகந் தெரிசித் துய்ய
வுவந்துவினை யாடலினி தாற்றவளிச் சிவயோக வுமையா டானே
யவம்புரியுந் தக்கன்மக ளெனறவிர்க்க வளர்க்குமக ளாகி யந்த
சிவந்தவளை நின்றபெருந் துறையடைந்து தவம்புரிந்த நீர்மை சொல்வாம். (கஉ)

வேறு.

பெருவிதி பயந்த சிறவிதி யென்பான் பிறங்குறச் செய்தமா தவத்தி
னிருமையி னண்ட பகிரண்ட மனைத்து மீன்றதா யேயொரு மகளாய்
மருவிநன் கமர்காட் பரம்பரன் மணந்து வண்கயி லாயத்தை யடையத்
திருகுசா லனைய சிறவிதி கொடிய தீயவா ணவமலச் செருக்கால். (கங)

மருகரு ளொருவ னுகவெவ் வுலகும் வழுத்துமா தேவனை நினைந்தே
பெருகரு ணந்தி யதனையும் வேண்டான் பிறங்குவான் கயிலையின் மேலா
லொருகருங் கண்ட னுமையொடு மமரு மோலக்க முற்றன னங்குத்
திருகரு நமைக்கண் டெழுந்திலா னிந்தச் சிவனெனச் சினந்தனன் மீண்டு. (கச)

ஒருமக மியற்றித் தாமத குணத்த னொருவனை விலக்கிமற் றுள்ளார்
சருகனி துகரக் கொடுப்பனென் றெழுந்து சாலையொன் றியற்றின னங்குப்
பொருதழல் வளர்க்க விமலமா தேவன் பொன்னடி சென்னியிற் சேர்த்துத்
திருவிலி யாற்போய்த் திருந்துவ னென்று சேர்ந்தன னவன்மகச் சாலை. (கரு)

தனிமனத் தமர ரெண்ணினும் முயன்றுங் கனவினுங் காணரு முதல்வி
தனியொரு தன்பா லெளிவரல் கண்டுத் தானவ் மதித்தன னிருந்தான்
முனிவொருங் கடைந்து புரிமகங் கெடுமா மொழிந்துயோ கத்தழல் புகுந்து
பனிவரை மகவாய்ப் படர்ந்தன ளதுசெய் பண்டைநற் றவம்பழு தாமோ. (கசு)

வரையிறை மனைவி மேனைபா ராட்டி வளர்த்திட வுயிரெலாம் வளர்ப்பாள்
புரையற வளர்ந்தம் மனைகழல் காதி புரிகுழல் மகளிரோ டாடி
விரைமலர் குற்றுச் சிற்சிறுன் கழிய விமலனை மணப்பது கருதித்
திரையமு தனையா டவஞ்செயல் குறித்தா டிவவியாழ் காரத னடைந்தான். (கஎ)

கனிமனத் தடைந்த மகதியாழ் முனிவன் கௌரிதன் றாண்மல ரிறைஞ்சிப்
பனிமலர்க் குழலா யுலகெலாம் பயந்த பாவைகே டிருவுளத் தமைத்த
முனிவருங் கரும மியாதென வினவ மொய்குழல் வெண்ணிற முனிவா
தனிமுத லடைந்து மணஞ்செயற் காய தவம்புரிந் திடுதிறங் குறித்தேன். (கஅ)

அதுபுரி வதற்கா மிடமெது வாமென் றுய்ந்திருந் தவனெலா முணர்ந்த
முதுபுகழ் முனிவா முன்னுபு நீயே மொழியென மறவலும் வணங்கிச்
சதுமுகன் முதலா முயிரெலா மீன்ற லைதயனிற் குணர்த்துவ னியானே
கதுமென விறைய திறத்தினிற் புகல்வேன் கருத்துற விருத்தெனப் புகல்வான்.(ககூ)

குளிர்புனற் பொருனைப் பாண்டிநன் னாட்டிற் குருந்துறை பெருந்துறை யென்றே
ரொளிர்பெருந் தலமுண் டத்தலப் பெருமை யுணர்த்துத லியாவர்க்கு மொல்லா
களிர்மலர் மிசையோ னுதிமு வருக்கு நயந்தருள் புரிந்ததா னறமாந்
தளிரியன் மேனி யன்னையத் தலமே தவஞ்செயத் தகுதல மென்றான். (உ0)

எனமுனி மொழியக் கேட்டமாத் திரத்தே யெம்பிராட் டிக்கழன் மெழுகின்
மனகனி யுருகக் கண்கணீர் வார மதிப்பரு முவகைமீக் கூர
வனவர தரும்பாண் டியவள நன்னா டாற்றுமா தவப்பய னடையக்
கனகமா மதில்சூழ் பெருந்துறை யடையுங் கருத்துறக் கொண்டன ளன்றே. (உக)

தந்தையா யினையும் படிமொழிந் தெழுந்து தடவிமா னத்தின்மேற் கொண்டு
சிந்தைகூ ரளவில் பரிசனஞ் சூழத் தெய்வதுந் துமிபல வியம்ப
வந்தையின் முனிவ ரரமுழக் கெடுப்ப வமரர்கள் பூமழை பொழிய
கிந்தையி றெய்வப் பெருந்துறை யடைந்தா ணினைதரா ரிருதவத் தலையாள் (உஉ)

மருவிய செம்பொன் விமானநின் றிழிந்து மலர்க்காஞ் சென்னிமேற் குவித்துத்
திருவிய றளியுட் புகுந்தழ லுமைத் தீர்த்தகன் காடிநீ றணிந்து
குருவிய னயன மணித்தொடை பூண்டு கோதிலைக் தெழுத்துவங் குறித்தே
பொருவிய லாத வாதவப் பிரியப் புகர்முகக் களிற்றினைக் கண்டு. (உங)

தனிவலஞ் சூழ்ந்து தம்பிரான் வடிவந் தானெனுங் குருத்திலை யருச்சித்
தொளிவள ரான்ம நாயகர் திருமு னுற்றன்பு மிகப்பணிந் தெழுந்து
களிகொள மலர்க்கை தலைமிசைக் குவித்துக் காரண நீதவான் பொருளே
தெளியகா னின்னை மணப்பது வேட்டேன் றிருவருள் புரியென நிற்ப. (உச)

மறைமுதற் பொருளுன் னிரங்கியா காய வாணியா லருள்செயு மணங்கே
கறையறு மணியு மதனிடத் தொளியுங் கலந்தென நீயுமோர் காமு
முறைருவ மெனினு நீபுரி தவங்கண் டினைமணக் கிடுவதற் குள்ள
நிறைதரு விருப்பங் கொடுநிலை வாலை யாம்படி நினைத்தன மன்றே. (உரு)

நினைத்தவா றுசி யித்தலத் தடைந்தாய் நிட்களஞ் சகளநிட் களத்தோ
டனைத்தவாஞ் சகள மெனுமொரு மூன்று ளரும்பெறல் யோகசா யகியே
முனைத்தநிட் களமாஞ் சகளநீ யிரண்டு முயங்கிய நியோகபீ டங்கா
ணினைத்தா மனைய பீடமே லமர்ந்து கவின்றநிட் களத்தொடுங் கலந்து. (உசு)

மாதவம் புரிமோ புரிபுநீ யுணரும் வண்ணகாங் காட்சிதந் தருளித்
தீதற நினைந்த விதமுடித் திடுவாஞ் சேறியென் றருள்செயக் கேட்டுக்
காதலங் கடலு ளழுந்திமே லெழுவாள் கடிப்பத்தாழ்ந் தனன்விரைத் தெழுந்தா
ளோதலங் கமையா யோகபீ டத்தை யுற்றமர்ந் தருந்தவம் புரிவாள். (உஎ)

வேறு.

குந்த ளக்கருங் கூந்தல் சடிலமாக்
கந்த ரத்தணி கண்டிகை யாரமாச்
சுந்த ரத்திரு நீறுது தைந்தது
சந்தி ரக்கலை போலத்த யங்கிட. (உஅ)

சிற்றி டைக்கொடி தாங்குதல் சீரையாப்
பொற்று ணைக்குழை பூண்டது சங்கமா
மற்றெ றொப்பிலா மாதுமை கோயிலு
ளுற்ற போதத்த யோகபீ டத்தமர். (உகூ)

கருணை காயகி காதலொ டெந்தமிழ்ப்
பெருகு நீரொடு நீருறு பெற்றிபோ
லொருவி லோருரு வுற்றவ னோடொன்றாய்
மருவி னுவ்யோக பீடத்தின் மாதவம். (கூ0)

ஒருப தம்மடித் தோர்பத மூசிமேன்
மருவ வூன்றி மலர்க்கையி ரண்டையுங்
குரும ணிச்சடை மீதுகு வித்துமூக்
குருவ கன்னுதி மீதகன் னூற்றிட. (கூக)

அவாவொ டுங்கும் பகத்தினல் வாயுவை
யுவாம தித்தலத் தொன்றவொ டுக்கியே
சிவாய மந்திர காவிற்செ பித்துமேற்
றவாத சாந்தத்திற் சோதியுந் தானுமாய். (கூஉ)

ஏக போகமா யெங்கும்வி யாபக
மாகி யின்பவ தீதக கத்தொடு
மோக மய்க்குருந் தந்துறை மூர்த்தியைப்
பாக வுங்கொடு பண்ணினன் மாதவம். (கூகூ)

அந்த வேலையெம் மையன்கு ரோதனைச்
சந்த மாருமை செய்தவன் காத்திரி
யெந்த வைப்புமுய் பாக்கென் றியம்பலு
மந்த மற்றவ னுந்நயக் தானதை. (௩௪)

செய்யு மேன்மைத் தவத்தின் செயலுணர்ந்
தைய னங்கவட் கற்புத மாம்படித்
துய்ய வெள்விடை மீமிசைத் தோன்றிநின்
றய்ய யோகதி யானத்து ணர்த்துவான். (௩௫)

உன்றன் மாதவங் கண்டிங் குவப்பொடு
மன்றல் செய்திட வந்தனம் யாமென
வின்றி தென்கொலென் றெண்ணி விழித்தலு
மன்று மேவிம யாசலத் தங்கணோர். (௩௬)

யோக பீடத்தில் குற்ற வுருவொடுந்
தாக மோடங்கவன் றங்கிடக் கண்டன
ளேக நாதனு முன்பிட பத்தின்மேற்
போக மேவுருக் காட்சி புரிந்தனன். (௩௭)

கண்டு நாணொ டெழுந்துகை கூப்பிநி
லண்டர் கோன்மணஞ் செய்வதற் காமெயிற்
கொண்ட கோலமுட் கொண்டொரு கோயிலு
ளொண்டொ டிகையை யுமைபோ யிருத்தலும். (௩௮)

இமைய மன்னனு மேனையு மியாவரு
முமையங் குற்ற வதிசய முண்ணினைந்
தமைத ராமகிழ் வுற்ற வமைதியிற்
சமைய வாவயி னியாவருஞ் சாருவார். (௩௯)

புண்ட ரீகனு மாலும்புத் தேளிரு
மண்ட லச்சடை மாதவ ரியாவருங்
கொண்டன் மேயவே தண்டக்கு ழாங்களு
மெண்டி சைக்கண நாதரு மெய்தினர். (௪௦)

அற்பு தத்தொடு மன்னன்முன் போய்த்தொழ
வெற்பு நாதனை நோக்கிவிண் ணோரெலாம்
பொற்பு மேவுநின் பூவையை யண்ணல்வேட்
டிற்பு குந்தின மின்றென வோதலும். (௪௧)

மயன்வி தித்த மணப்பெரு மண்டபத்
துயர்ம ணப்பொலி வுற்ற வுமையைமெய்ப்
பயன்கொள் வெற்பன் பரமற்கு நன்மணச்
சயமு றப்புனற் றாரைய ளித்தனன். (௪௨)

துதிம ணம்புரி தோகையொ டெம்பரன்
கதிகொண் மால்விடை யேறிக் கயிலையுற்
றதிக மாம்வினை யாட்டின மர்த்தனன்
பதியு மன்பர் துதித்துப் பரவவே. (சங)

அம்மை யோகநன் காற்றிய பீடத்தின்
வெம்மை தீர்சிறப் போதினம் வேந்தனே
யெம்மை யாளிறை யேவலி னுலடை
செம்மை வீரன் றிறமும் விளம்புவாம். (சச)

யோகபீடச்சிறப்புரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கூ0எ.

---

# வீரபத்திரப்படலம்.

---

யாவரும் புகழ்சி வானு பவமெவ்வா றிருக்கு மென்னின்
மேவரு முருவொன் றற்றப் பெருந்துறைக் கோயின் மேவித்
தாவரும் பூசை யோடு சாறங்கொண் டடைக்தோர்க் கெல்லா
மோவருஞ் சோறு நல்கி யுவந்துவீற் றிருக்கு மன்றே. (க)

சிறுவிதி யென்பான் செய்த திமகச் சாலை யெய்தி
மறுவறு முமையாள் சீறித் திருவுரு மறைத்த பின்னர்த்
தெறுவலிக் குறத்தாட் பூதச் சேனையோ டெற்றி காப்ப
னுறுவிழி திறந்தா னங்கின் றுதித்தனன் வீர னென்பான். (உ)

சடைமுடி யண்டத் துச்சி தடவரப் புயத்தி காத்த
முடைபட் டெருக்கக் கண்க ளுலப்பரும் புலிங்கங் கொட்ட
மிடைபுகைப் படலம் வாயின் வெளிப்படப் பிறையுந் தஞ்சென்
றடைதரு மெயிறு தோன்ற வாரழற் சுவாலை வீங்க. (ங)

பலகைவாள் வைரம் வைவேல் படுதழற் கணிச்சி சூல
மிலகுசக் கரந்து ரோண மங்குசம் பாச மின்னுங்
குலவுவன் றண்டத் திண்டோ மரமுதற் குலவு வேந்திக்
கலகமொன் றறத்து மிக்குங் கைபல பொலியா நிற்க. (ச)

கொண்டமே னியிலுண் டாய குறவியர்ப் பிடைச்ச னித்த
புண்டவா வெயிற்றுப் பேழ்வாய்ப் பூதவே தாளக் கூட்ட
மண்டரு கடுங்க வோரெண் ணுயிர கோடி சூழத்
தொண்டர்தம் பெருமான் முன்பு தொழுதெழுந் திதனைச் சொல்வான். (ரு)

ஏழுகடல் குடிக்கோ மேரு வரைபெயர்த் தெடுத்து மற்றை
முழுவரை யெலாந்தூ ளாக மோதுபு முடிக்கோ மாலைச்
செழுமல ரோனைக் கையாற் பிசைந்துபொட் டிடுகோ செந்தீ
யொழுகவெங் கணும்வி ழிக்கோ வுறுதலை கவிழ்த்தல் செய்கோ. (௬)

திசைக்கடாக் களிற்றை யொன்றாச் சேர்த்துவால் பிடித்த டிக்கோ
முசைக்குமண் டங்க ளாய முழுதுங்கைக் கொண்டு பந்தி
னுசைக்குமோ ராடல் செய்கோ பற்பல வுரைப்ப தென்னீ
நசைக்கெலா முணவு செய்கோ வருளென நவின்று நின்றான். (௭)

மோகமார் மூடத் தக்கன் முதலியாரு நமக்கு நல்கும்
பாகமின் றென்று கூறிப் பண்ணுவான் மகமன் னான்பா
லேகிநீ பாக முண்டோ வில்லையோ வெனக்கே டீய
னாகிய வவன்ம றுக்கி லடர்த்துவா வென்றா னையன். (௮)

இடுபணி யிதுதா னேவென் றெயிறெலா மிலங்க நக்குக்
கொடுவலிப் பூதஞ் சூழக் குறுகினன் யாக சாலை
விடுதல்செய் யாம னான்கு வாயிலுங் காவன் மேவத்
தொடுகழற் காலான் வைத்துத் துண்ணென வுட்புக் கானால். (௯)

வீரனுட் புகுத லோடும் வெம்புலிப் போத்துக் கண்டு
சோருமான் குழாங்க ளென்னத் துண்ணென நடுங்கி வீழ்ந்தா
ரியாருமற் றனைய வேலை யழிதகைத் தக்கன் முன்போ
யோருமெம் பெருமான் பாக முண்டுகொ லிலைகொ லென்றான். (௧௦)

இலையென மொழியா னுண்டென் றியம்பிடா னிருப்ப வன்னான்
றலையற வாளால் வெட்டித் தழல்படு குண்டத் திட்டு
நிலைகுலைந் தோடு மெச்சன் றலையையு நேரே வெட்டி
யலைபுரிந் தனன்மற் றுள்ள வமரர்கள் பலரு மாய. (௧௧)

சிறுவிதி மனைவி முன்னாச் செறிந்தபன் மாதர் தம்பாற்
குறுகுபு முன்போ யம்மை கோபத்தில் வரும்பெண் டெய்வ
நறுவிரைக் குழல்வார் காது நாசிவன் முலைமுன் னாகச்
செறுவலி கொண்டு கொய்து தெறுசின மொழித்த தன்றே. (௧௨)

கொடுவலிச் சுழலுஞ் செங்கட் குறியதாட் பூத மெல்லாங்
கடுகிமற் றமர மாதர் கலையவை யறநெ கிழ்த்துப்
படுமுலைக் குவடு பற்றித் தழீஇத்தழீஇப் பருகி வாய்நீர்
விடுதலற் றிருந்த காம விடாய்தவிர்ந் திருந்த வன்றே. (௧௩)

உடையமெய்க் குடம லைத்து முருட்டுபு பொரியைச் சிந்தி
மிடைதரக் குவித்த வோம விறகெலா மொன்று செய்து
புடைமகக் குழியி னிட்டு நீரினீர் புகட்டிப் போக்கி
நடைமழச் சிறுபூ தஞ்செய் குறும்பினை நவில்வா ரியாரே. (௧௪)

இவ்வண்ணங் கோபத் தீயை யாகத்தீ யோடு மாய்த்துச்
செவ்வண்ண மேனி வீர னின்றன னிவனை யுள்ளி
யவ்வண்ணம் போல வெங்கு மாயவ னதனை யோர்ந்து
தவ்வண்ண மறப்பா னாங்குத் தோன்றின னனைவெள் ளேற்றின். (கரு)

விடைமிசை யமலற் கண்டு தாழ்ந்தெழு வீர னிற்ப
வுடையவ னிரங்கி யாரு முயிரடைத் தெழுமா செய்தி
சடையவ வெனலு மையன் சாற்றிய வாறெ ழுப்ப
கடைதளர்ந் தெழுந்தெல் லாரு மாணெம் பிரானைத் தாழ்ந்தார். (கசா)

தாழ்ந்தெழுந் தொதுங்கி நிற்குந் தண்டுழாய் முகுந்த னாதிப்
போழ்ந்தசிந் தையரை நோக்கிப் பொய்மனத் தக்கன் வார்த்தை
வீழ்ந்தநீர் பட்ட பாடு விரிப்பதென் சிவத்து ரோகத்
தாழ்ந்தமை நீரு மாகம் பெருத்துறை யடைமி னென்றான். (கஎ)

என்றனைத் தலைப் போக்கி வீரனோ டிமில்வெள் ளேற்றுக்
குன்றுடைய தொருவே தண்டங் குறுகிநிற் றிருந்தா னம்மை
தென்றிசைச் செல்லுங் காலைச் சேறிநீ காவற் கென்று
தென்றிசைத் திடலால் வீர பத்திர நம்பன் போந்தே. (கஅ)

அம்மைசந் நிதியி னின்றே காவல்செய் தமரா நின்றான்
செம்மைகொ ளவற்றாழ்த் திட்ட சித்திகள் பெறவா ரியாரு
கம்மையான் பவஞ்சொற் பற்றி நாரணன் முதலோர் ஞால
மும்மையேத் தாங்கணெய்தி முருக்கினர் சிவத்து ரோகம். (ககூ)

பகலருந் திறல்சால் வீர பத்திரப் பெருமான் றேற்றத்
திகலருஞ் சிறப்பு மம்மை சந்நிதி யிலையந்த வாறு
முகலருங் களிப்பிற் சொற்று மொளிர்பெருந் துறையி லொன்று
தகவருந் தீர்த்த மேன்மை யனைத்தையுஞ் சாற்று வாமால். (உ0)

வீரபத்திரப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் சுஉஎ.

---

# தீர்த்தப்படலம்.

அயனரிதாழ் தில்லைமூ வாயிரு மையரே
பயனமையும் வாசகத்தின் வாச்சியநீர் பகருமென
மயன்மருவாச் சபைநேரே மரீஇச்சட்டி யுணர்த்தினு
ரியன்மருவு செஞ்சரண மெம்மனோ ருயிர்க்காணம். (க)

நலமாரும் பெருந்துறையி னவதீர்த்த காளுமுள
வலமாருஞ் சிவமாதி மலரவனீ ரூக்கலாயுங்
குலமாரு நவபேத மவையெனக்கூ றுவாறிந்தோர்
சலமாரு மதில்பொடித்தா ரகாதியே சமைத்தனரால். (உ)

ஆயநவ தீர்த்தத்து ளமலமாஞ் சிவதீர்த்த
மேயசபைக் கீசான திக்கிலுமை தளிவாயிற்
பாயவெதி ரொருகூபப் படிவமா யினிதமருந்
தோயமதில் வானவருந் துளைந்தாட லரிதாகும். (௩)

அன்னசிவ தீர்த்தத்தி னொருதிவலை யருந்திடுவார்
முன்னமமை மலமாயை கன்மமூ லறமுருக்கிப்
பன்னமல ரணையான்முற் பல்லோரு நறமுறப்ப
நன்னலமார் சிவக்கலப்பு நண்ணியனு பவித்தமர்வார். (௪)

மலையரையன் மகள்யோகம் பயிலுதற்கு மருவியகா
லலைவரிய வத்தீர்த்தத் ததிவிருப்பங் கொடுபுனத்
தலைவனைத்தாழ்ந் தொருதிவலை தலைமிசைக்கொண் டவர்சன்ம
நிலைகுலையும் படிவரந்தா னெனக்கொண்டு நிறவினுள். (௫)

எண்ணரிய மகத்துவஞ்சால் சிவதீர்த்த மேனையநீர்
நண்ணரிய புகழான்ம காதகூ பப்பெயர்பெற்
றண்ணரிய வபிடேக மாட்டுதற்கே பாங்காகுங்
கண்ணரிய வதன்பெருமை கட்டுரைக்க வல்லவரியார். (௬)

ஆதிநா யகன்கோயிற் றென்மேற்கி லருளுருவப்
பூதிநா யகன்றழற்கண் பொருந்தநோக் குறப்பாய்ந்த
கோதிலாத் தழலெழுபா தலமுருவக் குதித்தெழுந்த
தீதிலாப் புனற்பெயரக் கினிதீர்த்த மெனப்புகல்வார். (௭)

ஆயதனை யறிஞர்சத்தி தீர்த்தமென வறைதருவார்
பாயவதன் மகத்துவத்தை யாமேயோ பகர்தருவோந்
தோயமதைத் தொடிற்பருகிற் றுளைந்தாடி னோக்குறினு
ளேயவினைத் திடிற்றகவி னியல்பயனை யளப்பவரார். (௮)

திருந்துபுகழ் மலரயன்புத் திரனென சுவாயம்பு
பொருந்துதவத் தாற்பிறந்த பத்திரரோ ரிருவருள்
வருந்துதவி லொருவனு மம்பிரிய வர்த்தனனு
விருந்திறல்சான் மற்றொருவன் பெயருமினி யறையக்கேள். (௯)

சந்தான குணமுடையான் றன்னளிக்கா காமானுன்
முந்தானக் கனிற்றரசர் முடிதேய்க்கு மொய்கழலான்
கொந்தான மலர்க்குழலார் மடலெழுதுங் குலக்காம
னுந்தான பாதனென வொருபெயர்பெற் றவனம்மா. (௧௦)

அன்னதை காத தீர்த்த மென்றறி வுடையோர் சொல்வார்
பொன்னவிர் கமலம் பூத்த புனலதிற் படிவோ ரியாரும்
பன்னரு மிம்மையோடு மறுமையும் பண்பிற் றுய்த்து
மின்னவிர் சடையான் பாத மேவிவீற் றிருப்ப ரீற்றில். (உ௯)

தென்றிசைக் கடற்றீ ரத்திற் செல்வமுங் கல்வி யுஞ்சேர்ந்
தோன்றிய வளத்தா னுறு மோங்கரி மந்தி ரப்பேர்
துன்றிய புரமொன் றுண்டு சுரகர் வாழ்க்கை யோரு
நன்றிய லாங்கு மேவ நண்ணுவர் வேட்கை மாதோ. (௩0)

அந்நகற் புரத்தி லெம்மா னுலைய மொன்றுண் டென்று
நந்தமக் கருளு மீச னுமமோ மந்தி ரேசன்
பிந்தவி லருள்சா லம்மை பிரமகா யகியென் பேரான்
பந்தமி லிருவ ருக்கும் பண்ணினர் திருவி ழாவே. (௩௧)

சாறுசெய் தினத்து ளோர்காட் டையலோ டைய னூர்தி
யேறுகொண் டலங்கா ரஞ்சா ரெழிற்றிரு வீதி யெய்திப்
பேறுதங் கடியார்க் கெல்லாம் பெறற்கருங் காட்சி நல்கிக்
கூறுதன் கோயி லுள்ளாற் குறுகிவீற் றிருந்தா னன்றே. (௩௨)

இருள்செறி கால மாக விற்புகு கடவை தேருந்
தெருளின்மித் திரனென் பானோர் மறையவன் சிகரிக் கப்பாற்
பொருளிலை யெனக்க ழித்த நிபத்துட் பொருந்து மொன்றை
மருளறக் கழியிற் கோத்து வழிக்கொடு கடந்து போனான். (௩௩)

அன்னவன் முன்பு செல்லச் சிலர்தொடர்ந் தகத்துட் போவான்
மின்னகு தீப நோக்கி விரைதரத் தொடர்ந்து சென்றார்
சொன்னவச் சிவால யத்தெண் ணெய்கவர் துரோக மேவ
வென்னரும் வறுமை மூடப் பட்டிறந் தளற்றி லாழ்ந்து. (௩௪)

நெடிதுநாள் கழித்த பின்னை நிலத்திழி பிறப்பி னுற்றார்
கொடியமற் றிதற்கு மூல மெனக்கூறு மித்தி ரன்றான்
றடிதார நிரப்பு மூடித் தரையிற்பன் னாளு ழன்று
கடியவெந் நோய்க்கோட் பட்டுக் காலனூ ரடைந்தா னன்றே. (௩௫)

ஆவயி னிரய மெல்லா மனைப்பினு ளனுப வித்து
மேவருங் கிருமி யாதி வேறுவே றதித்து மாய்ந்து
பாவமன் னுமலி யாகிப் பல்லிடத் துழலுங் கால
யோவரும் பெருந்து றைப்பாற் பிதிர்வன முற்றா னன்றே. (௩௬)

சுடுவனச் சாம்பர் வீழ்ந்து புரானலுந் தூய ஞானம்
வடுவறச் சிறிதுண் டாக மற்றந்த வலியி னுலே
பமேலர்த் தேவ தீர்த்தம் படிந்துபா தகந்த டிந்து
கொமெலக் குறும்பு மாய்த்துக் கூடுபே ரின்ப முற்றான். (௩௭)

அறத்தினை வேண்டி னானு மளப்பரும் பொருள்க ளாய
திறத்தினை வேண்டி னானுந் திகழ்தரு மின்ப மென்னு
நிறத்தினை வேண்டி னானு நிகழுமிம் மூன்ற னுக்கும்
புறத்தினை வேண்டி னானும் பொலியகல் லிடமெத் தீர்த்தம். (௩௮)

உமைமண வாளன் கோயி லுத்தர திசையின் கண்ணே
யமைசிறப் புடைய வீதிக் கருகொரு தீர்த்த முண்டாற்
கமைமுனி வரர்க ளாடிக் களித்தருந் தவஞ்செய் நீராற்
சமைதரு முனிவர் தீர்த்த மென்மனார் தலைமை சான்றோர். (௩௯)

இன்னுமற் றதனை விந்து தீர்த்தமென் றெடுத்துச் சொல்வார்
பன்னுமற் றந்நீ ராடிற் பாதக மனைத்து மாயுந்
துன்னுமும் மலக்கி ழங்குந் தொட்டெறி வன்மை மேவு
மின்னுமஞ் சடையான் பாதக் கலப்புமே விடுவ துண்மை. (௪௦)

கொழிதமிழ் மணக்குஞ் செவ்வாய்க் குறுமுனி வரனெங் கோமான்
பழிதபு பொதிய மேவும் படிவழி யியங்குங் காலைக்
கழிதவத் துருவா சன்றன் காதல ரிருவ ராய
வழிதலைக் கொடுவா தாவி வில்வல னெடுத்து மேவி. (௪௧)

வஞ்சகத் தூட்டல் கண்டு மற்றவர் தமைநீ றாக்கி
நெஞ்சகத் துறுவன் மைந்த ரிவரென நினைந்து நாறு
மஞ்சகத் தொழித ராத பெருந்துறை மருங்கு வந்து
தஞ்சகக் கழுவா யாற்றத் தமிழ்முனி வரனி னைந்தான. (௪௨)

தண்ணிய முனிவர் தீர்த்தஞ் சார்ந்துசங் கற்பங் கூறிப்
புண்ணிய முனிவ னாடிப் போர்த்திய பழிய னைத்து
மண்ணிய விசேடம் பெற்றான் மற்றுமத் தீர்த்த மாடி
யெண்ணிய பேறு பெற்றா ரெண்ணிலா ருலகி னம்மா. (௪௩)

அகத்திய முனிவன் பின்னு மமைத்தவெள் ளாற்றின் மூழ்கி
மகத்துவ மிகும்வெள் ளாற்றின் வடகரை யிலிங்க நட்டுத்
தகத்திகழ் பூசை செய்து தன்பெயர் நிறுவிப் போனா
னகத்தியல் போக மாதி யெய்துவா ரதுபூ சிப்பார். (௪௪)

அங்கண ரூபாத்தி யாய ராயமர் கழக மாகத்
தங்கிய வாங்கோர் தானந் தனக்குப்பச் சிமதிக் கின்கட்
பொங்குமோர் தீர்த்த முண்டாற் புகாற வகரர் தோய்ந்து
பங்கமில் வரங்கள் பெற்றா ராதலாற் பாரி னுள்ளோர். (௪௫)

வலிதரு மகர தீர்த்த மெனும்பெயர் வழங்கா நிற்பர்
சலிதரு தாமி லாத சதாசிவ தீர்த்த மென்றும்
பொலிதரு புலவர் சொல்வா ரங்கதிற் புகுந்து மூழ்கின்
மெலிதரும் பாவ மெல்லாம் வீட்டின்ப மெய்து மன்றே. (௪௬)

மருவிய குருந்தி னுக்கு வாயுமூ லையிலோர் தீர்த்தம்
வெருவற வாயு மூழ்கி வயிற்றநோய் வீட்டி வாழ்ந்தா
னொருவிலத் திறத்தால் வாயு தீர்த்தமென் றுரையா நிற்பர்
திருவினர் மகேச தீர்த்த மென்னவுஞ் செப்பு வாரால். (௪௭)

உரைத்தவன் புனலா றின்னு முரைக்கவேண் டியவோர் மூன்று
திரைத்தடம் பின்பு சொல்வாந் திருப்பெருந் துறைய கத்து
வரைத்தடந் தோட்கு ராதி வாவரு மடிய மாட்டிப்
புரைத்தசீர்க் குமாரன் வந்து பொருந்திய திறமுஞ் சொல்வாம். (௪௮)

தீர்த்தப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௱௫.

---

# குமாரர்வருகைப்படலம்.

---

அதுமுத லுதுமுத லென்ற றைந்திடா
இதுமுத லெனத்துணி யியல்பு நல்கிடு
முதுமுத னூலென மொழியும் வாசகப்
புதுமுதன் மலரடி புந்தி மன்னுமால். (௧)

ஒருசிறு விதிமகச் சாலை யுற்றவன்
றருதக ருணைச் சமைத்த வானவர்
வெருவறக் கடையெலா மேனி கொண்டெனப்
பெருவலிச் சூர்முத லோர்பி றந்தனர். (௨)

எண்ணிற வருந்தவ மியற்றி நெற்றித்திக்
கண்ணினன் பால்வர மனைத்தவ் வகைகொண்டா
ரண்ணுபே ரண்டமா யிரத்தெட் டாளுவா
ருண்ணிலா மருன்சிறி தேனு முற்றிலார். (௩)

அன்னவ ரலைத்திட வலையின் வாய்த்துரும்
பென்னவா னவரெலா மலைத லெய்தனர்
சொன்னமா தேவர்க்குத் துரோகஞ் செய்பவ
னின்னதோ வின்னமு மெய்து மென்பரால். (௪)

ஆலைவாய்க் கரும்பென வவுண ராலுடை
மாலயன் முதலிய வானு ளோரெலாம்
வேலைநஞ் செழுத்தமைக் காத்த வித்தகன்
சோலைசூழ் திருப்பெருந் துறைவந் தெய்தினர். (௫)

அய்யனே யபயம்வெவ் வரிண மேந்திய
கய்யனே யபயம்வெங் காலற் செற்றகாற்
செய்யனே யபயமா தவத்தர் சிந்தைவாழ்
மெய்யனே யபயமியா மெலிவு மேவினேம். (௬)

முத்தனே யோலமெம் முதல்வி கொண்டரு
ளத்தனே யோலம்வின் னவரம்பெ ருந்துறைக்
கத்தனே யோலமெங் கனக னாகிய
நித்தனே யோலமென் றிறைஞ்சி நின்றனர். (௭)

ஆயவக் காலையி லான்ம காயகர்
சேயமுற் றவர்முகம் பார்த்து நீரெலாங்
காயமேற் போம்வட கயிலை யண்ணுமின்
பாயதும் பகைதபு பான்மை மேவவே. (௮)

என்றலும் வடகயி லாய மெய்தினு
ரன்றவி னந்தியெம் மண்ண ருடொழூஉ
மன்றமர் பிரானுக்கெம் வரவு செப்பென்று
ரொன்றவ னனுஞைபெற் றன்பு கச்செய்தான். (௯)

உருத்திர மூர்த்தியை யுவந்து கண்டனர்
கருத்தமை தரவடிக் கடிப ணிந்தனர்
பருத்தெழு மகிழ்ச்சியிற் குடந்தம் பட்டனர்
திருத்தக வவர்முக நோக்கிச் செப்புவான். (௧௦)

ஒன்றநீ ரஞ்சலி ரும்பர் காள்வளங்
குன்றுறுப் பெருந்துறை கூடி மேவலா
லன்றுநும் பகையெலா மழிவ தாகுமா
லின்றுநா மதற்குவே றியற்ற லுண்டெனு. (௧௧)

ஆறுமா முகங்கள்கொண் டமர்ந்துட் டாதலை
வீறவா னுதற்கணில் வெளிப்ப டுத்திடக்
கூறகா லழறலைச் சுமந்து கொண்டுபோய்த்
தேறுமா கங்கையிற் செலுத்தக் கங்கையும். (௧௨)

மறுவறு பெருஞ்சர வணத்தி னுய்த்திட
வறுபொறி களுமறு குழந்தை யாகியோங்
குறுதினத் துமையவ ளொன்று செய்தொளி
பெறுகயி லைக்கிரி பிறங்க வுய்த்தலும். (௧௩)

ஆறுமா முகத்தவ னைய நம்பிரான்
வீறுசெப் தம்பிய ரொடும்வி ராவியே
மாறுதீர் பெருவினை யாட்டின் மன்னுத
றேறுமா லயன்முதற் றேவர் கூடுபு. (௧௪)

மறைமுத லடித்தலம் வீழ்ந்து வாழ்த்தியே
முறையிட விரங்கிய முக்க ணாயக
னிறைபதி னொருவரை நிகழ்தன் சத்தியை
யறைபடை யாகச்செய் தங்கை நல்குபு. (கரு)

இன்னும்வேண் டுவெலா மினிதி னீந்திவட்
டுன்னும்வா னவர்பகை தொலைத்து வாவென
மின்னுதம் பியரொடும் பூத ரோடுமேய்
மன்னுதா ரகனுயிர் மடிய மாய்த்தபின். (கசு)

வழியமர் தலமெலாம் வழுத்தி யாவரு
மொழியிலை வாயிலை யமர்ந்து முந்துபொன்
பழியவு ணர்கணிலை பகர வோர்த்தட
லொழிவரு மிளவல்கு ருருற் றெய்யென. (கஎ)

மீண்டபி னியாவரு மேவிப் பின்வர
மாண்டசீர் வீரமா மகேந்தி ரம்புகுந்
தாண்டவ ணவுணர்த மனிக மாய்தரத்
தூண்டடு படையெலாந் தூண்டல் செய்யுநாள். (கஅ)

அரிமுகத் தவுணனே யாதி யாகிய
வெரிமுகத் தவரெலா மிறந்து போம்படி
தெரிபடை செலுத்திமேற் றிகழுஞ் சட்டியி
லுரியகு ராயமா வுடல்பி ளந்தனன். (ககூ)

கோழியு மயிலுமாக் குலவ னோக்கியாங்
கூழிகா ணிருங்கொடி யூர்தி யாக்குபு
வாழிவா னவர்சிறை விடுத்தோர் மாலவனைச்
சூழியா னையின்பிடி தோய்பு ணர்ந்தரோ. (உ0)

ஏலும்வா னகக்குடி யேற்றி மாமறை
நாலுமோர் பெருந்துறை நண்ணி யப்பரை
யாலுமே தகவுசா லன்பிற் போற்றிட
மாலுமா திலாரொடும் வந்த னன்னரோ. (உக)

அம்மையப் பனைத்தொழு தடிவ ணங்குபு
வெம்மையில் பெருங்களி மேவு சிந்தையான்
கொம்மையொண் மயின்மிசைக் கொண்டு கோபுரச்
செம்மைசே ருத்தர திசையி சானத்தில. (உஉ)

வடதிசை நோக்குபு மகிழ்ந்து வைகினு
னுடனடைந் தவரெலா மொருங்கு நோக்கியாங்
கிடமிகு பெருந்துறைக் குமார வென்றுண
மடனிகு மன்பொடு வணங்கி வாழ்த்தினார். (உங)

கூறிய பெருந்துறைக் குமாரர் சேவடி
காறிய மலர்பறித் தணியு கல்லவ
ரேறிய சனனபா தகமெ லாமிரித்
தூறிய சிவானந்தத் துவந்து மன்னுவார். (உ௪)

கொடிமதிற் பெருந்துறைக் குமாரர் வந்தவா
றொடிவற வுரைத்தன மோங்கற் றூளிறாய்
கடிதலில் பெருந்துறை யெனற்குக் காரணம்
படியற விளம்புவாம் பண்பிற் கேட்டியால். (உ௫)

குமாரர்வருகைப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௭௦௦.

# பெருந்துறைப்படலம்.

கதிர்மழல் கண்ணே மெய்யே கஞ்சமே விருப்பான் பாகே
யதிர்வளைக் கரனம் பேறில் லேயினு மாவதாக
வெதிரில்வான் பரமா காரென் றியற்றமி ழுண்மை சொற்ற
முதிர்புகழ் வாத வூரெம் முதல்வரே யெமையாட் கொண்டார். (க)

இறையவ னொருமா தேவ னேயெனத் துணிந்த நீரார்
மறைமுழு வதுமு ணர்ந்து வைதிகத் துறையி னின்றோர்
குறையற வங்க மாதி யாவுமுட் கொண்ட சீலர்
பொறையுரு வமைமுந் நூறு மறையவர் புகழான் மிக்கார். (உ)

ஆற்றநீத் தொழிலே யின்னு மறைபசுக் கொலையே யேனு
மேற்றலோர் பழியு மில்லா ரியாவருந் தொழும்பே றற்றோர்
சாற்றலென் னெம்பி ரானைத் தங்களு ளொருவ னாகப்
போற்றல்கொண் டெப்பா ரென்னி லியாமேயோ புகழ வல்லேம். (௩)

தங்களு ளொருவ னாகத் தம்பிரான் றன்னைப் பெற்ற
துங்கமார் கதையென னென்னிற் சொல்லுவா மன்ன கேண்மோ
திங்களங் குலத்த னுய செழியர்கோ மகனொ ருத்தன்
பங்கமி லான்ம காதர் பணிசெயற் குரிமை யாய்ந்து. (௪)

கங்கைசூழ் காசி நின்றங் கற்றமுந் நூறு வாய்மைத்
துங்கமா மறையோர் தம்மை வருவித்தான் றோலா மேன்மை
வங்கவர் பாண்டி நாட்டி னவிழ்மலர்க் குருந்த காளுந்
தங்கிய வனத்தை மேவச் சுகுணபாண் டியனுஞ் சார்ந்தான். (௫)

வழுதியர் பெருமாற் காக்கள் கூறினர் மறையோ ரெல்லாந்
தொழுதன னிருக்கை நல்கித் தூடபொற் கலிங்க முந்நூ
றெழுகொளித் தட்ட மேலா லெண்ணின வொருங்கு வைத்துச்
செழுமுகத் தொவ்வொன் றாகச் சிறப்புறக் கொடுத்தா னன்றே. (சா)

எஞ்சிய தொன்றேற் பாரிங் கில்லாத குறைவொன் றென்றான்
விஞ்சிய புகழார் தம்மை மேதகப் பலகா லெண்ணி
யஞ்சிய மனத்த ராகி யையமுற் றொருவர்க் காணேந்
துஞ்சிய புகழா யென்ன செய்குவாஞ் சொற்றி யென்றார். (எ)

வழுதியு மறைவ லாரு மயங்கின ரிருக்குங் காலை
யெழுதரு மறைக டேறா விறையவன் குருந்தி னின்று
முழுமறை யவனாத் தோன்றிப் பூழியன் முன்ன ரெய்திச்
செழுமுந்நூற் றுவரெம் மோடேன் றுரைத்தன ரியக்கந் தீர்த்தார். (அ)

இழுதையர் தலமச்சா ராகா மெஞ்ஞான்று மிவரை நீங்கேந்
தழுவுவ மெனநீ றன்னி வழுதிதன் னுதலிற் சாத்திப்
பழுதறு மாக்கள் கூறிப் பாவபொற் கலையு மேற்றுத்
தொழுதகு மறையோர் கூட்டத் தொருவராத் துன்னி னாரால் (கூ)

மதிநலம் பொலிமுந் நூற்று வருளிவ ரொருவ ரென்றே
யதிசயம் பயப்ப வான்ம நாதருக் கரந்தா ரோர்பேர்
திதிபுரி தென்னர் கோமான் மறையவர் செய்யு மன்புந்
துதியிறை யவர்தாஞ் செய்யு மருளுஞ்சீர் தூக்கி னின்றான். (க0)

மின்னகு வேலான் செம்பொன் மாளிகை வெவ்வே றாக்கி
யன்னவர்க் குதவி யவ்வூர் மானிய மாக நல்கி
யின்னமும் வேண்டுஞ் செல்வ மியாவையு நிரப்பிப் பின்னர்த்
தன்னக ரடைந்தா னான்ம நாதர்தா டலைமேற் கொண்டே. (கக)

ஓதிய மறையோர் தம்மு ளொருவரா யான்ம நாத
ராதியில் வந்த வாறீ தறைந்தன மப்பாற் கேண்மோ
சோதியை யான்ம நாதச் சுயம்புவை யருச்சித் தேத்திப்
போதியன் மறைவ லாளும் புகழ்மறை யவர்கள் வாழ்நாள். (கஉ)

எண்ணிய மறையோ ரெல்லா மிராப்பக லன்பு பொங்கப்
புண்ணிய வான்ம நாதர் பூசனை முயலு மாற்றா
லண்ணிய சிறவர்க் கத்தி யயனஞ்செய் விப்ப தற்கோர்
தண்ணியர் வேறி லாமைத் தளர்வுளத் தடைந்தா ரன்றே. (கங)

இருமுது குரவர் கோயிற் பணிவிடை நமக்கெஞ் ஞான்று
மொருவரும் வேலை யாகு மொருபெரும் பேறு பெற்றோம்
வெருவறு சிறார்க்கு வேதம் பயில்விப்பார் வேறு காணேந்
திருவரு ளுணர்சே மென்று சிந்தைசெய் திருக்குங் காலை. (கச)

மான்றசிக் கையராய் வந்து மாலயன் முதலி யோர்க
டோன்றபின் றிரத்தல் செய்யச் சுடுவிட மமுதாக் கொண்டார்
சான்றமா மறையோ ருள்ளத் தளர்வினை யொழியார் கொல்லோ
வான்றதா மேயு பாத்தி யாயராய் வெளிக்கொள் வாரால். (கடு)

எங்கணும் வியாபித் துள்ள வழகெனப் பட்ட வெல்லா
மங்கணுற் றுருவி ருத்த வடிவமா யமைத்த தென்னத்
திங்கணன் கமரா நின்ற செஞ்சடை யான்ம நாதர்
கங்கனுன் னினன்வேண் டாவோர் கிழவுருக் கைக்கொண் டாரால். (கசு)

மன்னிய துமையின் வேணு வனத்திடைப் பெற்ற தேயோ
வன்னிய மில்லாப் பாரூ ரதனிடைப் பெற்ற தேயோ
மின்னிய வின்னு மெங்குப் பெற்றதோ விளம்பீ ரென்னத்
துன்னிய வேணுத் தண்டஞ் சுடரொரு கரங்கொண் டேந்தி. (கஎ)

அரைக்கலை முடியி னின்று மரைக்கலை யாய தென்னப்
புரைத்தவெண் கலிங்கம் பின்பு போக்குகோ வணத்தி னோடு
வரைத்தமுன் கொய்செ ருக்கு மடித்தெடேச் செருகி மேலா
லுரைக்குமே கலைவி ளங்க வுடுத்தது சரியக் காட்டி, (கஅ)

மதியமு தொழுக்கி யாங்கு வயங்குமுப் புரிநூற் கிட்ட
பொதிதரு முறைகொ லென்னப் பொற்றமேற் கலிங்கஞ் சாத்தித்
துதியபாற் கடலி னுப்பட் டோன்றிய மொக்குண் மேலோர்
பொதியபுண் டரீகஞ் சார்ந்தாற் போனரை முடியின் னூல. (ககூ)

எவ்வுருக் கொண்ட போது மிதுவிடே மெனக்கொண் டாங்குச்
செவ்விய நுதலின் மெய்யிற் செறிந்தவுத் தூள னத்தோ
டவ்விய மனுக்கு நீற்றுப் புண்டர மழகு செய்து
கவ்விய தாய வெள்ளிக் குப்பாயக் கட்டிற் றோன்ற. (உ0)

திருத்தகக் கொண்டு மெய்யிற் சிவமணங் கமழ்வ தோர்ந்து
பருத்தகார் வண்டி னங்கள் பற்பல வந்து வீழ்ந்தாங்
கருத்தகான் மறைக ளேத்த வவிருங்கண் மணிகள் பல்ல
பொருத்தமார் சென்னி யாதி யிடமெலாம் பொலியா நிற்ப. (உக)

வலையுருத் திரித்து வேறோர் வலையுருக் கொண்ட தென்னக்
கலையவிர் செவியிற் செம்பொற் குண்டலங் கவினச் சோத்தே
யிலைமதுத் துழாயி னுங்க ணெறும்பது பிணங்கா நிற்கத்
தலைபவித் திரமோ ரங்கை விரற்றலைத் தயங்கப் பூண்டு.

எழுதுதற் கரிய தங்கி யிலைக்கதோர் பாதக் காப்புச்
செழுமல ரடியிற் சேரத் திகழ்வலக் கண்ணின் வெப்பக்
கழுவுதன் மறைக்கு மாறோர் தடங்கரங் கவிகை தாங்க
முழுமுத லவரிவ் வாறோர் முதுவடி வுற்றா ரன்றே. (உங)

தளர்நடை தனக்கு மோராற் றலைச்செயுந் தண்ட மென்று
ளெருல குரைத்த றேற்றக் கேடிலஃ தூன்றிக் கொண்டு
விளர்குடை நிழலி யங்கி வேதிய ரவைமுன் னாக
வளரொளி மறையோர் வந்தார் வாய்சிவ சிவவென் றார்ப்ப. (உச)

வந்தமா மறையோர் தம்மை யிருந்தமா மறையோர் கண்டு
முந்தவே யெழுந்து சென்று முகமலர்ந் தினிது போற்றிச்
சந்தமார் தமதி ருக்கை கொடுவந்து தாழ்ந்தி ருத்தி
யெந்தவூ ரிருந்தும் போந்தீ ரையரே யியம்பு மென்றார். (உரு)

எங்களூ ரிருப்போ மூரென் றிசைப்பதொன் றில்லை யெனுந்
தங்குவாஞ் சிவபு ரத்துந் தவாதவன் பினர்த மாட்டு
நங்குநீர் மறைவல் லீர காதர்க்கோ ரிடமு முண்டோ
பொங்குநூல் சிறுவ ருக்குப் போதித்தல் வல்லே மென்றார். (உசா)

ஐயரிம் மாற்றங் கூற வந்தண ராகி யுள்ள
செய்யருண் மிகம கிழ்ந்து சிறுவர்போ தனையில் வல்ல
மெய்யரே லோரி ருக்கு விளம்புவீ ரென்றார் காலெண்
கையர்கா ணூதார் செவ்வாய் மலர்ந்தனா கருணை செய்வார். (உஎ)

வன்னமே பதமே யாரும் வகுத்துரை ஊரட மேமேற்
சொன்னவான் சடையி ருக்கே தூயபஞ் சாதி யேமற்
றன்னரும் பிறவே யெல்லா முதாத்தமுற் சரத்தி னோடு
மன்னவெத் திறங்க ளுங்கார் மழையெனப் பொழிந்தா ரன்றே. (உஅ)

அந்தணா ளுரைத்தா ரிந்நா ளறைவதோ ரருமைத் தாமோ
பந்தமா மறவி யாதி யுயிர்க்குணம் பரித்து ளாரோ
சந்தமா ரனைத்துங் கேட்டுச் சதுமறை வல்லா ரென்றே
நந்தமா மறையோ ரெல்லா நவிலொணா வுவகை பூத்தார். (உகூ)

சிறுவரீங் குள்ளார்க் கத்தி யயனஞ்செய் வித்தல் வேண்டு
மறுவறு நமக்கென் வேண்டும் வகுத்துரை செய்வீ ரென்னப்
பெறுவதும் பிரிய மல்லாற் பிறிதெவ னமக்கு வேண்டு
முறுபசிக் கன்னந் தம்மி னுதவொன்றே போது மென்றார். (ஙo)

அன்னதே லைய ரேயெம் மகத்தொறு மொவ்வோர் நாளா
வின்னமு தருந்து வீரென் றிசைத்தன ரிசைந்தா ராகிச்
சொன்னபன் மகாரைக் கூட்டித் தூயவோ ரிடத்த மர்ந்து
நன்னலம் பெருக வோது வித்தலை நடாத்த லுற்றார். (ஙக)

தொழுகுலத் தவர்சி றார்மேற் றூயதாங் கருணை காட்டம்
பழுதறு முபாத்தி யாயர் செலுத்துபு பாடஞ் சொல்லச்
செழுமதிப் பிறைபோற் கல்வி தினந்தொறும் வளர்த லோக்கி
யெழுதரு முவகை பொங்க விருபிறப் பாளர் வாழ்ந்தார். (ஙஉ)

மன்னிய மதுரை மேய வரதுங்க வழுதி யூழற்
றுன்னிய சுவர்க்க முற்று னுவன்மகன் கௌமா ரன்றான்
மின்னிய மவுலி சூடி மேதினி புரக்கு நாளிற்
றுன்னிய குறும்பர் தங்க டோன்றலா கியனுண் டாக்கன். (௯௯)

கலையுணர் வழுதி யாய கௌமார னட்புப் பெற்று
நிலையுரி மையும்பெற் றுனாய் நிகழ்பவன் கொடிய தீமை
யலைசெயற் கஞ்சா னெங்க ளான்மகா யகனாப் போற்றுந்
தலைமையந் தணர்தம் பூமி தனைக்கவ ரெண்ணங் கொண்டான். (௬௪)

தன்னுடை நகர்க்க டுத்த நகரமாந் தங்க லாலே
மன்னுடை மறையோர் வைகுஞ் சிவபுர வளப்பார் முற்று
மென்னுடை நிலமா மென்றே யெண்ணூது கவர்ந்து கொண்டான்
முன்னுடை வழுதி நல்கு முறிவிலா வணத்தி னேடும். (௬௫)

பாம்பர வான்ம நாதர் பணிவிடை செய்வா ரென்று
நிரம்பமை மறையோ ரென்று நெஞ்சத்துச் சற்று மெண்ணு
வரம்பறு கொடியோ னெல்லாங் கவர்ந்தனன் மறையோ ரெல்லா
மாம்பயில் செயலொன் றில்லா ரொய்யென வாட்ட முற்றார். (௬௬)

வழுதியோ விஜய னன்னுன் மாட்டதி நட்புப் பெற்றான்
பழுதுசெய் குறும்பர் தோன்றற் பாதகம் புரிலுண் டாக்க
னெழுதரும் புகழான் முன்னு ளியைதரா நமக்க ளித்த
முழுவதுங் கவர்ந்தா னியாஞ்செய் முறையிஃ தென்று தேரோம். (௬௭)

மறையவர் நிலமென் றேுதா வணமுங்கைக் கொண்டா னுட்சி
முறைதன தாகச் செய்தான் முற்றிய வயலார் காட்சித்
துறையையுந் தவிர்ப்பா னென்ன செய்யலாந் துணிபென் னேயெம்
மிறையவ ரான்ம நாதர் திருவுள மென்னே வென்பார். (௬௮)

மறைவழி யியற்றுஞ் சந்தி வந்தனை தவிர்ந்து ளோமோ
குறைபசி யென்ற டைந்த குணத்தரை விலக்கி னேமோ
வறைபர தனங்கொண் டோமோ வான்மகா யகர்தம் பத்தித்
துறையினிற் றப்பி னேமோ சூழ்ந்ததித் தீமை யென்பார். (௬௯)

அய்யரே யெம்மை யாளு மான்மகா யகரே மேனிச்
செய்யரே யென்றுந் தீராச் செல்வரே மழுமா னேந்துங்
கையரே காலற்காய்ந்த காலரே யெக்கா லத்து
மெய்யரே யெளியே மென்னே பிழைத்தனம் விளம்பீ ரென்பார். (௭0)

வழுதியக் காண மக்கு வருவரோர் குறையின் றாகத்
தொழுதுத வியவி தத்தாற் றயாறத் துய்த்தல் செய்து
பழுதற வான்ம நாதர் பணிவிடை செய்து வந்தோ
முழுவதுங் கவர்ந்தான் பாவி முன்னியென் னுவ தென்பார். (௭௧)

உயிர்முழு துவந்து காக்கு மொருத்தியோ காம்பி கைத்தாய்
செயிரற நம்மைக் காத்தல் செய்யாது விடுமோ வென்பார்
கயிரவப் பகைவி டுக்கு மாதவங் களிப்பிற் கொண்டார்
பயிர்நிலங் கவர்ந்தான் நீங்கும் பரித்துவந் தனரோ வென்பார். (௪௨)

அந்தணர் தம்மு ளியாமு மொருவரென் றன்று வந்து
சந்தன வெற்ப னல்குஞ் சன்மான மும்பெற் றுள்ளார்
நந்தமை யாளா தெங்கு நடந்தனர் போலு மென்பா
ரிந்தவண் ணம்பல் லோரு மிரக்கமுற் றிது துணிந்தார். (௪௩)

செழியன்மற் றினைய னாக விருக்கினுஞ் செழிய னுக்குக்
கழியுகட் பால னாக விருக்கினுங் கடிய பாவி
யொழிவிலச் செழியன் முன்போ யுற்றதை யுரைப்போ மாகில்
வழிவிடுந் தெய்வ மென்னு மறையவ ரொருப்பட் டாரே. (௪௪)

அன்னதோர் பொழுது பாத்தி யாயரா யிருக்கு மையர்
பன்னகா பரணர் கூடற் பதிவயி னடைந்து தென்னன்
முன்னர்நீ ருரைப்ப தென்னே மொழியினு மறிய வென்றார்
தன்னமும் வஞ்ச மில்லார் சாற்றிட லுற்று ரன்றே. (௪௫)

அரசனுக் காக்கங் கூறி யருகுசென் றிருந்து கொண்டு
பரசுநான் மறைய ருத்தம் பகர்துமென் றொருவர் சொற்றார்
விரசுப நிடத மெல்லாம் விரித்தெடுத் துரைப்போ மந்த
வரசகு ணத்தோ டுய மன்முனென் றொருவர் சொற்றார். (௪௬)

ஒருவரா கமங்க ளெல்லா முணர்த்துதுந் தெரிய வென்று
றொருவரா கமசா ரத்தை யுணர்த்திடி னுவக்கு மென்று
றொருவர்நஞ் சத்த நூலா னுலகெலா முவக்கு மென்று
றொருவர்மீ மாஞ்சை யுள்ளு முத்தர முரைப்போ மென்றார். (௪௭)

ஒருவர்நஞ் சிவபு ரத்தின் மான்மிய முரைப்போ மென்று
றொருவரக் கினிநீர்த் தத்தின் பெருவள முரைப்போ மென்று
றொருவர்கம் மான்ம காத ருண்மையை யுரைப்போ மென்று
றொருவர்யோ காம்பி கைத்தாய் மகத்துவ முரைப்போ மென்றார். (௪௮)

ஒருவர்பல் புராணத் துள்ள வுண்மையைத் தெரிப்போ மென்று
றொருவர்பல் விதிகா சங்க ளுள்ளன வுரைப்போ மென்று
றொருவர்சன் மிருதி யெல்லா மொழிவற வுரைப்போ மென்று
றொருவர்மற் றிவற்று ளென்னே நியாயமியா முரைப்போ மென்றார் (௪௯)

ஒருவர்மந் திரநன் னூலி னுள்ளவை யுரைப்போ மென்று
சொருவர்நாற் பத்து முக்கோ ணத்தியல் புரைப்போ மென்று
றொருவர்நீ றணிந்த லோடாக் கமுமினி துரைப்போ மென்று
றொருவர்கா மங்க ளாதி பலந்தென வுரைப்போ மென்றார். (௫0)

இவ்வித முரைத்தல் கேட்டே யினகைக வாயிற் றோன்றச்
செவ்விய மறையி ரியாமும் வருதல்சிக் கித்தோ மென்று
ரவ்விய மில்லீ ரத்தி யயனஞ்செய் வித்தல் வல்லீர்
கவ்விய நீருவ் கூடிற் காரிய சித்தி யென்றார். (௫௧)

என்றனை யாடி யாரு மிணர்மலர்க் குருந்த மூல
மொன்றற வடைந்து போற்றி யுவப்புறு மனுவை பெற்றுத்
துன்றமின் சுவையான் மிக்க தோட்கோப்புப் பொதிசோ றேந்தி
யன்றலின் மதுரை நோக்கி யடைதர வழிக்கொண் டாரால். (௫௨)

தண்டமொன் றொருகை யூன்றித் தளர்நடைக் கிகலுண் டாக்கிப்
பண்டரி யுணராப் பாதம் பார்மக ளுடம்பு தோயக்
கண்டவ ரதிச யித்துக் கனிந்துநெஞ் சுருகா நிற்க
வண்டர்நா யகரோ யாய வையருந் தொடர்ந்து சென்றார். (௫௩)

வழிப்படு தலங்க டோறும் வழிபடு நியமத் தோரா
யிழிப்பருந் தீர்த்த மாடி யிலிங்கநா யகரைப் போற்றிக்
கழிப்பரும் பொதிசோ றுண்டு தண்ணீரும் பருகிக் காதல்
செழிப்புற வன்று பார்ப்பார் சேரியிற் றங்கிப் போவார். (௫௪)

மலைவனங் கலுழி பண்ணை வரம்பில கடந்து சென்று
கலையென வாடல் செய்த கண்ணுதன் மதுரை சார்ந்தாங்
குலைவரும் விமானக் கோயி லுட்புகூஉப் பணிந்து போற்றித்
தலைமறை யவர்க ளியாரும் பாண்டிய னவைமுன் சார்வார். (௫௫)

பாதகக் கொடியோன் செய்த படிறொழித் தருள்வீ ராயின்
மோதகத் தொடுதெங் கங்காய் முந்நூறு முந்நூ றாக
வாதவப் பிரிய ரேநீ ரமுதுசெய் திடுவீ ரென்று
போதகத் தலைமை யானர் புகன்றனர் போற்றிப் போவார். (௫௬)

செழியர்தம் பெருமான் கோயிற் கடைத்தலை சென்று நின்றே
யொழிவருங் காவ லோர்ப்பார்த் துரைமினெம் வரவை யுங்கள்
பழிதபு மரசற் கென்றார் நீவிர்யார் பகர்மி னென்னக்
கழிவனச் சிவபு ரத்து மறையவர் காணு மென்றார். (௫௭)

காவல ரரசன் முன்போய்க் கைகுவித் திறைஞ்சி நின்று
மேவலர் புரங்கள் செற்றார் சிவபுர மேவி வாழும்
பாவலர் சீர்த்தி மிக்க பனவர்க ளின்னைக் காணு
மாவல ரகி வந்து கடைத்தலை யடைந்தா ரென்றார். (௫௮)

மேயவந் தணர்க ணம்முன் விரவுமா விடுக்க வென்று
ஞயபொற் கடைகாப் பாள ரந்தணர் முன்ன ரெய்தி
நேயகம் மரசன் முன்னர் நீவிர்சென் றடைமி னென்னப்
பாயபன் மறையுந் தேறும் பனவரோ டடைந்தா ரியாரும். (௫௯)

தென்னவன் முன்ன ரெய்தித் திருத்தகு மாக்கள் கூறி
நன்னுத லீறு சாத்த நயந்துளங் களித்து போற்றி
யன்னவ னிருக்கை நல்க வனைவரு மிருந்தா ருங்கள்
பன்னரு மொழுக்க மெல்லா மூறின்றிப் படர்வ தேயோ. (கூ0)

குறையிலை யாகி வாழ்தல் கூடுங்கொ லெனவி னாவ
விறைவநின் னாணை யாலெங் கெழினெவன் ஞாயி றென்று
முறைமையி னிருந்தோம் வந்து முளைத்ததோ ரிடையூ றைய
வறையுமற் றதுவி னாவி னதிசயம் விளைக்கு மென்றார். (கூக)

அன்னதென் னெனவி னாவி னான்மகா யகா நாதி
முன்னவர் பணிசெய் பாக்குன முன்னவ ரெமக்கு விட்ட
நன்னில மனைத்து நின்னை நட்டலுண் டாக்கன் கொண்டா
னின்னதே யிடையூ றன்பா விசைத்திட வந்தோ மென்றார். (கூஉ)

இவர்மறை யனைத்தும் வல்லா ரிவருப நிடதம் வல்லா
ரிவர்கலா கமங்கள் வல்லா ரிவர்புரா ணங்கள் வல்லா
ரிவர்வியா கரணம் வல்லா ரிவர்தருக் கத்தின் வல்லா
ரிவரிதி காசம் வல்லா ரென்றுமீ னவுமு ரைத்தார். (கூங)

எல்லாம்வல் லவரென் றாலு மெடுத்தவிவ் வழக்கிற் கென்னும்
பொல்லாமெனக் கிலங்க வர்த்தா னெனப்புகன் றன்னீ ருங்கள்
சொல்லார்கள் னிலமென் றற்கா வணக்தொட ராட்சி மற்று
நல்லார்தல் காட்சி மூன்று மொன்றேனு நாட்டு மென்றான். (கூச)

மூன்றனு மொன்றை நாட்டு மென்றிறை மொழியக் கேட்டார்
தோன்றவொவ் வொன்றில் வல்லே மென்றமை தணியு மாறு
சான்றவவ் வரசன் முன்னா விளக்கிடச் சமைந்தார் கேட்ட
மீன்றவிர் கொடியா னென்னா மிவையென நகைத்து விண்டான். (கூரு)

ஆளுகை யவன தாயிற் றமைமுறி யையுங்க வர்ந்தா
னீளுறு மயலார் காட்சி யுண்டவர் நேரே சொல்லார்
கோளுறு குறும்பர் தோன்றல் கொல்லுவா னெனவு மஞ்சி
வாளுயர் மன்ன ரேறே யென்செய வல்லோ மென்றார். (கூசு)

என்றலுங் குறும்பர் தோன்ற லிம்மறை யவர்தம் பூமி
யொன்றநீ கவர்ந்த துண்டோ வில்லையோ வுரைத்தி யென்றான்
மன்றமற் றவன்கும் பிட்டு மன்னவா மறையோ ரென்பார்
முன்றம தென்பா ராயின் முயலுக்குங் கோடுண் டென்றான். (கூஎ)

இந்தவா றிசைப்பா யாகி லெனதுபா ரென்ப தற்கு
முந்தவா தாரம் யாது மொழியெனத் தொன்று தொட்டு
நந்தவா ளுதலா தாரம் வேறிலை நவிறற் கென்று
னந்தமா நிலத்திற் குள்ள வடையாள முரைத்தி யென்றான். (கூஅ)

இருபனை யளவ கழ்ந்த போதுநீ ருறா தந்தப்
பெருநில மென்றா லுங்க ணிலமெனிற் பெருமை மிக்கீர்
மருவடை யாளஞ் சொல்வீ ரென்றலு மறையோ ரெல்லாந்
தெருமர லுற்றா ரையர் தெரியயாஞ் சொல்வே மென்றார். (௬௯)

மண்டொடு கருவி கொண்டு வெட்டிடின் வெட்டு வாயி
னெண்படு குமிழி தோன்று மென்றுரை யெடுத்துச் சொற்றார்
திண்படு மனலுண் டாக்கன் சிந்தையு ளுவப்புக் கொண்டா
னண்புசான் மறையோ ரெல்லா நடுங்குபு சாம்பு கின்றார். (௭0)

கெடுநோணங் கிருகந் தோறு நிரம்பவுண் டிருந்த விந்தத்
தடுமாறு மறையோ னென்ன சாற்றினா னந்தோ விச்சொல்
வடுவாகும் வெட்டு வாய்நீர் காட்டிட வல்லான் கொல்லோ
படுமாறென் னென்று சிந்தை பதைபதைத் திருந்தா ரன்றே. (௭௧)

உண்மைகொ லைய ரேநீ ருரைத்ததென் றரசன் கேட்ப
வுண்மையே யுண்மை யேமற் றுண்மையே யென்றார் மீட்டு
முண்மையே யெனிலுண் டாக்கா வுளுற்றுவ தென்னை யென்றா
னுண்மையே யவர்பா ரேயென் றுரைத்தன னுலைத வில்லான். (௭௨)

மொழியுமந் தணர்கா ணீவிர் முன்செல்வீ ரென்று போக்கிப்
பழியிலான் பரிமேற் கொண்டு பரிசனத் தொடும்பின் சென்றான்
கொழிகளிப் புடையா னைய குறும்பனுங் கூடச் சென்றான்
வழியெலாங் கடந்தி யாருஞ் சிவபுர மருவி னாரால். (௭௩)

நன்னலம் பயக்கு மான்ம நாதனைத் தொழுது போற்றி
மன்னனோ ரிடத்து மேவி மறையவர் தம்முண் மூத்தீர்
சொன்னவா காட்டு மென்றான் றதிகவு மார மனனு
வின்னபோ தகழ்தற் காய கருவியிங் கிலையே யென்றார். (௭௪)

கருவியா யிரத்தின் மேலுங் காண்வர வரவ ழைத்தான்
வெருவின்மற் றவனைக் கொண்டே வெட்டுவித் திடுதி யென்றார்
பொருவிலா வெங்க ளையர் புரவலன் றலைய சைத்தாங்
கொருவிலுண் டாக்கா லைக்கொண் டோரிடத் தகழ்வா யென்றான். (௭௫)

அன்னவன் கருவி கைக்கொண் டவனொரீஇ மேடு நோக்கிப்
பன்னருங் களிப்பி னோடு மகழ்தரப் படருங் காலை
முன்னவ ரறபத் தாறு மொழிகோடி தீர்த்த மெல்லா
மன்னவாங் குள்ளங் கொண்டார் நினைத்தவா மரீஇய யாவும். (௭௬)

ஓரிடத் தொருகோட் டூன்றி வாங்கலு மூறுநீர் தோன்றிக்
காரிடர் மறையோர் நீங்க வவன்முகங் கலங்க மோதிற்
றோரிட நோக்கிப் பின்னும் வெட்டினா னாங்கு மிக்க
காரிடர் தனக்குண் டாக வெழுந்தது கங்கை தீர்த்தம். (௭௭)

உறுபுனல் வெட்டுந் தோறு முறவெழுந் தவன்மு கத்தி
னுறவித மறையா நிற்கப் பற்பல்கா லுறத்து டைத்தே
யறிவில்லா தா பின்னும் வெட்டுந்தோ றவ்வா றாக
வறிவுற் றதுபா ரென்றன் ஞானமு திறம்போன் றன்றே. (எஅ)

ஒழிதரான் வெட்டுந் தோறு முறுபுனல் பெருகி யெங்கும்
வழிதரப் பாவ லாலே பெருந்துறை யெனும்பேர் வாய்ந்த
தழிவிலக் காரங் கண்டோ ரியாவரு மதிச யித்தார்
பிழிமலர் வேப்பந் தாரான் பேருவப் புடைய னானான். (எகூ)

அந்தண ரெலாந்தி கைத்தா ரமரர்பூ மாரி தூர்த்தார்
சந்தன மலய வெற்பன் மறையவர் தம்மை நோக்கி
யிந்தவா றறிவித் தாரை யிங்கழைத் திடுமி னென்றான்
முந்தமற் றவர்கள் சென்று முண்டக மலர்த்தாள் போற்றி. (அ0)

மன்னவ னழைத்தா னுங்கு வருவது வேண்டு மென்ன
அன்னவன் பாலெ மக்கிங் காவதென னென்று கூறி
முன்னரு மொருகு ருந்த மூலத்துட் போயொ ளித்தார்
தன்னமு முணர்த ராவந் தனருளந் திகைத்தா ரன்றே. (அக)

உறவதி சயம்வி ளைத்தே யொருகுருந் தத்தொ ளித்த
வறவனு ரான்ம காத ரேயென வறிந்தார் கம்பான்
மறமறப் பன்னான் மேவி மணிதொறு முண்டி ருந்த
பெறலரும் பேறுந் தேர்ந்தோ மெனப்பெரி துவந்தா ரன்றே. (அஉ)

பெருவிறல் வழுதி முன்போய்ப் பெருவழக் காடி வென்ற
வொருவர்கம் மான்ம காத ரொளித்தனர் குருந்தி லென்று
மருவுற வுரைபப வன்னான் மலர்க்கரஞ் சென்னி கூப்பிப்
பொருவிலார் செயலோ வென்று புந்தியி லுவகை பூத்தான். (அங)

பாயதன் னுரிமை யெல்லாம் பறித்தனன் மிகச்சி னந்து
நியலுண் டாக்கன் றன்னைச் சிறைக்களம் புகச்செ லுத்தி
கேயவந் தனருக் கந்தச் சிவபுர கிலத்தி னோடு
மேயபற் பலவு நல்கி விருப்பொடு போற்றி விட்டான். (அச)

தன்னவைக் களத்தி னெய்தித் தகவழக் காடி வென்ற
முன்னவர் தமக்கா மாறு மொழிபல வளமு நல்கிப்
பொன்னடி தொழுது போகாம் பிகையையும் போற்றிச் செய்ய
கன்னலங் கழனிக் கூடற் பதிகவு மாறன் புக்கான். (அரு)

மறையவர் பலருந் தங்கண் மறைமுத லாட னுன்னிக்
குறையறு செல்வத் துய்த்துக் கோயிலி னகத்துச் செய்யு
நிறைபணி தலைமேற் கொண்டு நிரம்புவா னவர்வ யிற்றி
னுறைபசி யவித்து வாழ்ந்தா ரொள்ளழற் கருமத் தாலே (அசு)

பொருசினக் கடுங்கண் யானைப் புரவல புகழான் மிக்க
பெருவளச் சிவபு ரந்தான் பெருந்துறை யெனும்பேர் பெற்ற
தொருவற வெடுத்துச் சொற்று முபதேச மலரோன் பெற்ற
வருமைசா றிறமு ரைப்பா மற்புதம் பயப்பக் கேண்மோ. (அஎ)

பெருந்துறைப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் எஅஎ.

---

# பிரமனுபதேசப்படலம்.

---

சீரடி யான்செய் நிந்தையில் வெந்தை திருத்தக நாடொறு முண்டார்
பாரடி யுள்ளாக் கியகெடு மால்கொள் பாகமுள் ளார்க்குமீ னவனு
லோரடி கொடுப்பித் தார்நெடு மால்கொள் பாகமில் லேற்கொரு தாமே
யீரடி கொடுத்தார் ஞாயிறெங் கெழினு மெவனென விருப்பனியா னினியே. (க)

திரிபுவ னத்தும் வாழ்பவர் மூன்றுச் செப்புகா லத்தொடு வாழ்வர்
தெரிதரு மவற்றுட் கிருதக மொன்று திகழ்கிரு தாகிரு தகமொன்
றுரியகி ருதக மென்பதொன் றுதி யுரைத்தகா லத்தள வையினி
னரியரா மனுக்க ளொருபதி னால்வ ரழிவரென் றுரைக்குமெய் நூலும். (உ)

ஒருபதி னால்வ ரழிகிரு தகத்திற் குரைத்திடு மளவையா தென்னி
னிருசகத் திரமா மீரிரண் டுகமென் றியம்புவ ரிவையொரு நாளா
மருவுமிந் நாளோர் பதினைந்தோர் பக்க மதியிரு பக்கமா றயனங்
கருதிரண் டாண்டைம் பஃதொரு பரார்த்தங் களையிரு பரார்த்தமு மொழியின். (௩)

விதியவன் றபுமிந் நாட்பெயர் கிருதா கிருதக மெனவிளம் பிடுவார்
மதியிது பிரமப் பிரளய மாகு மலரவர் கோடியோ சிறப்பிற்
றதிமுகுந் தனுக்கோர் நாளந்நாட் கணக்கிற் றெருக்கனு ருண்டள வொழியிற்
றிதிபுரி யனையா னிறப்பனந் நாள கிருதக மென்றுசெப் பிடுவார். (௪)

சறுவசங் கார மாவதந் நாளே சாற்றுமுக் காலத்திற் றோற்ற
முறுவன வெவையு கொடிப்பவன் காலாக் கினியுருத் திரனொடித் துயிலா
மறவொழித் திடுவான் கேவலத் தொடுக்கி மறுவலுஞ் சிருட்டியா திகளைப்
பெறும்வகை விடுப்ப னவனென வென்னிற் பெருந்துறை யான்மகா யகனே. (௫)

உரைத்தவிவ் வண்ணந் தோற்றமுற் றொடுங்கு மும்பர்கள் பலருமெவ் விடத்தும்
விரைத்தலைத் துளவோ னுந்தியி னுதித்த விதியொரு கற்பத்தி னுகைக்கு
நரைத்தகுன் டையினு னருள்பெறல் கருதி நானிலத் தெத்தலம் புகலென்
விரைத்தசிந் தையினோ டெங்கணுந் துருவி யெய்த்தன னுதியே வருவான். (௬)

அடைதரு தொழிலை வெறுத்தவ னாகி யானந்த முத்தியை யடைவா
னுடைதிரை யொழியாக் குணகடற் கரையே யுறுவழி யாவியங் கிடுவான்
படைபரித் துயர்தோட் பாண்டியன் புரக்கும் பைதிரம் புக்கன னேகத்
தடையற மேல்பா லிரண்டுகா வதத்திற் றங்குமோ ரடவியைக் கண்டான். (௭)

கண்டவவ் வடவி பேரொளி மயமாக் கட்புலப் படுதலு முவந்து
கொண்டவா தரத்தின் விரைந்தவண் டாங்குக் குறுகலு மவ்வுழி மறைந்த
தண்டமூ டுருவு மொளிமறைத் ததுகம் மபக்குவத் தாலெனக் கலங்கிப்
பண்டவா வின்சொற் கலைமகண் மணாளன் பதைபதைத் தவனியின் வீழ்ந்தான். ()

அய்யகோ வைய கோவெனக் கதறி யலரவ னிரங்குத னோக்கிச்
செய்யமே னியின்வெண் ணீற்றொளி விளங்கத் திருவரை வெண்டுகில் பொலிய
மையமா தரிக்குங் கண்மணி விளங்க வண்குழை யிருசெவி யுறவோர்
கையமெஞ் ஞான புத்தகத் தொடுமோர் கையிற்சின் முத்திரை கவின. (௯)

வேதபா துகைமேற் கொண்டெமை யாளும் வித்தகர் பெருந்துறை யான்ம
நாதர்தாங் காட்சி கொடுத்தனர் கண்ட நான்முக னவர்முனஞ் சென்று
காதர மடைநா னொருநீயார் கவினுறப் பொலிபுழிவ் வனமா
ராதரம் பயப்பத் தோன்றிய வொளியா ரறைதர வேண்டுமென் றிரந்தான். (௧௦)

அன்னபோ தனையான் முதுகுதை வந்தெம் மான்மகா யகர்பெருங் கருணை
துன்னமா வையினின் றவனைவே றுக்கித் தோன்றுநீ சிருட்டிசெய் பவனியா
முன்னமே யுன்ன வான்மகா யகரிம் முளியிலா வனங்குருந் தவன
மென்னவோ துவர்பூ லோககை லாய மென்றுமோர் பெயரொடுத் துரைப்பார். ()

ஒளியுரு வாகி யண்டமூ டுருவி யுனக்கெதிர் நின்றதும் யாமே
தெளியென நவின்று சாம்பவ தீக்கை செய்தெழுத் தைந்துமுன் னவின்றாங்
களிவளர் சமய தீக்கையாற் சரீர மடங்கலுஞ் சுத்திசெய் தருளிக்
களிவிசே டத்தாற் பிரமமந் திரத்தைக் கனிவொடு மருள்செயக் கணித்து. (௧௨)

அழல்விழி நோக்கி யெழுபா தலக்கீ ழமைத்ததன் பாததீர்த் தத்தைக்
கழலுறு வெழுப்பி முன்னமே வைத்த கடுத்தழற் றீர்த்தத்தின் மேல்பா
லுழறவிர் கிணற்று நீர்மலர் மிசையோ னுவப்புட னுடைப் பண்ணி
யெழலுற சிறப்பி னினியதா யிலங்கு பிரமகா யத்திரி யிசைத்து. (௧௩)

தத்துவ ஞான மார்க்கமே சாரத் தவாக்கரு ணையிற்பின்பு முன்னமைச்
சுத்தவைந் தெழுத்தைத் துகளற நவின்று தோன்றுமித் தலத்துநின் வாழ்நா
ளொத்தவோர் வருடந் தவம்புரிந் தனையே யுளங்கரு தியதளிப் போமென்
றத்தனார் மறைந்தார் மறைதலு மலரோ னங்ஙனந் தவஞ்செயல் குறித்தான். (௧௪)

அல்லியங் கமல மனப்பறப் பூத்தே யலங்குறு சிறப்பமை சேர்தாக்
கொல்லியம் புனலுக் கழற்றிசை யமருங் குடவயிற் றூதவ முவக்கு
நல்லிளங் களிற்றை வணங்கிநீ ராட்டி நறியமோ தகமுத லூட்டிக்
கல்லிய வினையா னல்வரம் பெற்றுக் கரைத்தவத் தீர்த்தத்தின் மேல்பால். (௧௫)

தவம்புரி சாலை யினிதுறச் சமைத்துத் தனக்குப தேசஞ்செய் பரம
சிவன்றிரு மேனி காணுத லவாவித் தியானஞ்செய் தசைவற விருந்தா
னுவந்துமுன் னுரைத்த நாள்கழிந் ததற்பி னுமையொடும் விடைமிசைத் தோன்றி
நிவந்தபல் கணமுஞ் சூழ்தரக் காட்சி கொடுத்தன னிம்மலப் பெருமான். (கசு)

சடையிளம் பிறையுங் கங்கையு நெடுமா றங்கையு மானொடு மழுவு
மிடையற விலலாச் செங்கைய நெற்றி யிலங்குமுப் புண்டர நீறு
முடையென முயங்கு பெரும்புலித் தோலு முரகமா கியமணிப் பூணுந்
தடையில்கூற் றுயிருண் டொளிகெழு தாளுந் தயங்கநேர் கண்டன னெழுந்தான்.

எழுந்தனன் குழைந்து விழுந்தனன் மீட்டு மெழுந்தனன் றிருமுன நின்று
செழுந்தகை மலர்க்கை சென்னிமேற் கூப்பிச் சிந்தைநெக் குருகவெண் கண்ணுங்
கொழுந்துவிட் டோங்கு மருவிநீ ரொழியக் குறிக்கொளாச் சிறியனேற் கிருகாற்
றொழுந்தகைக் காட்சி கொடுத்தருள் பெருமை சொற்றிடத் தரத்ததோ வென்பான்.

பனிமழை வெயிலால் வருந்துபு பன்னுள் படர்புனல் காலுணக் கொண்டு
முனிவவற் றமைத்தும் புதலொடு மிலதை மொய்த்தபுற் றெழவத னுப்பட்
டனிமர மெழுந்து வானளாய் நிற்பத் தம்முரு வதனுள வமர்ந்து
மினியமா தவஞ்செய் பவர்க்கருங் காட்சி யெளியதோ சிறியனேற் கென்பான்.. ()

எண்ணிலா மறையும் வந்திய ராக விருப்பினு மெண்ணிலா வடியா
ருண்ணிலா வன்பிற் றுதிகனி புரிவ துலகெலா மாய்வினைக் கிடினுந்
தண்ணிலா மௌலி வேணியா யடியேன் சாற்றிடத் துதியுனோர் சார
மண்ணிலா தெனினுங் கொள்ளுதல் கடனென் றட்டகம் புகலுவ தானுன். (உ0)

வேறு.

சத்து ரூபசொ ரூப நிர்க்குண தற்ப ரச்சுக வற்புத
சித்து ரூபக துரிய மேற்படு சிற்ப ரச்சிவ போகமு
நித்தி யத்தனி யின்ப சாகர நின்ம லப்பத முத்தியு
மத்த சுத்தவ காதி முத்தக லான்ம நாதவெம் மையநீ. (உக)

இம்ப ரேத்திடு சத்தி பேதமி லைக்த நிட்கள பேதமும்
தம்ப மாய்த்திகழ் சகள நிட்கள தன்மை மேவுத டத்தமு
மும்பர் போற்றுச தாசி வாதிப வுத்த யுத்தர்கள் பேதமு
மம்ப ரந்தபெ ருந்து றைச்சிவ வான்ம நாதவெம் மையநீ. (உஉ)

வரி ணங்கும கேசு ரப்பிர வுத்த ரெண்ணதி காரமுஞ்
சடரி ணங்கயில் கொள்ளு ருத்திர கோடி யீசர்கள் வாசமு
கார ணன்கொள்வை குந்த மேயகன் னலமுஞ் சத்திய வுலகமு
மார ணம்புகழ் சிவபு ரப்பர வான்ம நாதவெம் மையநீ. (உங)

மாக முற்றபு ரந்த ரன்பெறு வாழ்வும் வானவர் வாழ்க்கையும்
பாக முற்றிரு நான்கு திக்கும் பரித்து. வாரமை யிட்டமு
மோக மற்றவ நேக சித்தர்கண் முனிவு பெற்றன சித்தியு
மாக மச்சது வேத மாபுர வான்ம நாதவெம் மையநீ. (உச)

சோர்ந்தி டாவலி கொண்ட சந்திர சூரி யர்க்குறு சோதியுஞ்
சார்ந்த செய்புத னாசன் வெள்ளிச னிக்கி ணங்குகு ணங்களுஞ்
சேர்ந்த சத்தமு திற்றி றங்களுந் திகழு டுக்கண ராசியு
மார்ந்த சூந்தவ னத்து மேவுக லான்ம காதவெம் மையநீ. (௨௫)

வழிப டுங்கலை கற்ற பன்னக மன்ன வன்சிர பாரமு
மெழில்கொ ளேழுல கேழ்ச முத்திர மெண்ப ருப்பத நிலைகளுந்
தழிய மைந்தபல் கோடி யண்டமுந் தாங்கு தாபர மாவது
மழிவில் பூதயி லாய மேவக லான்ம காதவெம் மையநீ. (௨௬)

படிக்கு மாகம வேத சாத்திரப் பல்க லைப்பொரு ளாவது
முடிக்கு காலவகை கடைக ளாற்பெறு முத்தி யின்பமு திர்ச்சியுங்
கடக்கொ ணுப்பவ சாக ரக்கரை காணு தற்கொரு மிதவையு
மடக்கொ ணுதெழு தேச சால்வன வான்ம காதவெம் மையநீ (௨௭)

சீர்பொ றுத்தெழு கோடி மந்திர தேச மிக்கவோங் காரமு
மேர்ப ரித்தபஞ் சாக்க ரப்பொரு ளாகி யெங்குமி ருப்பது
மோர்தி றத்தமை பிரம மந்திர வுறுதி யோடுமெற் றுள்ளவு
மார்ப ரச்சிவ கேத்தி ரப்புர வான்ம காதவெம் மையநீ. (௨அ)

இன்ன கற்றுதி யட்ட கம்புகன் றேத்து மின்னிசை கேட்டனர்
சென்னி கம்பித மாக வுள்ளமு வந்து செங்கம லத்தனுங்
குன்ன முற்புரி வினைக ளியாவுமொ ழித்து நல்லரு ளுதவியே
நன்ன யத்தினெ டுத்த மெய்ப்பய னண்ணு மாறுபொ ருத்தினுர். (௨௯)

வேறு.

எண்ணியகாரியமுடித்த தென்றுவிதி மிகமகிழ்ந்தா
னண்ணியகா யகர்மறைந்தார் நான்முகனும் வெருக்கொண்டே
யண்ணியமுன் கண்டவிடத் தணுகிநோக் கினனியாருங்
கண்ணியலைபங் குருந்தொன்றே கண்டுதொழு தின்புற்றுன். (௩0)

குருந்தருவப் பெருமானுர் விடைகொண்டு கோகனகத்
திருந்துலகம் படைப்பானே திமத்திவர்ந்து கண்களுக்கு
விருந்துசெய்தன் னுலகடைந்து வெண்கமலப் பெண்ணேடும்
பெருந்துறையா ரடிக்கமலம் பேணிவாழ்ந் திருந்தனனே. (௩௧)

தனக்கமைத்த நாண்முழுதுந் தான்புரியும் படைப்பியற்றி
மனக்கினிய பெருமாணு ருபதேச மறவானுய்ச்
சினக்கடுமை முதலொழிந்த சிவன்மூத்த னுயீற்றிற்
கனக்கருங்கண் டனைக்கூடிப் பாமுத்த னுய்க்களித்தான். (௩௨)

எழுகாவோன் புனலகமேற் கிலையந்தனைற் றுருவாநீர்
முழுதாய மறைத்திர்த்த மெனமொழிவ ரதின்மூழ்கிச்
செழுவேத முழுதுணர்ந்து வாதரா யணன்றிகழ்ந்தான்
பழுதாரா வதன்மேல்பாற் பண்ணினவ் விதிபொருநீர். (௩௩)

நீயவெலாந் தவிர்பிரம நீர்த்தத்துக் குடைக்தாடி
மேயசெபந் தபந்தானஞ் சிராத்தம்விதிப் படிச்செய்வோ
ராயவர்தாம் பெறும்பேற்றை யாமேயோ சொலவல்லோம்
பாயதலை யரவிறையும் பகரமாட் டானென்னில். (௩௪)

மருத்தவிரா மலர்வாவி மருங்குடுத்து வளமோங்கும்
விருத்தபுரி யெனுநகரில் விருத்தேச ராலயத்திற்
பொருத்தமுறப் பணிசெய்து போற்றிவரும் விருப்புடையான்
றருத்தகையந் நகர்வாழ்வான் சம்புவெனு மொருமறையோன். (௩௫)

அந்தமறை யவனொருதேண் மதிமதிவா ரத்தமையப்
பந்தமறுந் திருவிளக்குப் பணிசெய்ய வொருகின்ண
நந்தநறு வினாயான நெய்கொண்டு நயந்தேகிச்
சந்தவிருத் தேசர்திருச் சந்நிதியிற் போய்ப்புக்கான். (௩௬)

புக்கவன்பஃ றகழிதொறும் பொருந்தவாக் குபுதிரியிட்
டக்கணிமா லையருவக்கச் சுடர்பொருத்தி யவிர்தரக்கண்
டுக்கவினை யவனுகி யுவந்துபணிக் துறத்துதித்துத்
தக்கமனை யகம்புகுந்தான் கிண்ணமுந்தன் கைக்கொண்டே. (௩௭)

மட்டியலுங் கொன்றையார் மாத்தளிப்போய் வருகிண்ணத்
தொட்டியநெய் சிறிதுணரா னிருந்தனனவ் வொருமறையோ
னெட்டியலு மூர்த்தியார் பொருள்கவர்ந்தா னெனுந்தோடங்
கிட்டியதோ ரணுத்துணையா யினுங்கேடு பயக்குமே. (௩௮)

அளந்தநாள் கழிந்திறந்தா னந்தகனூ ரிடைப்புகுந்தா
னுளந்தவாத் துயர்பெருக வுறுநரகெ லாந்துய்த்தான்
கிளந்தபா தகசேடங் கெழுவலாற் கடலுடுத்து
வளந்தவாப் புவியகத்தும் வந்துபுழு வாச்சனித்தான். (௩௯)

அந்தவுருப் பலநீங்கி யழகியப வானிபொடு
சந்தமிகுங் காவேரி சங்கமமாம் பதரிவனத்
துந்தவொரு மண்டூகத் துருக்கொண்டா னக்காலை
முந்தவொரு கிழப்பருந்து முன்னியதைக் கவர்ந்ததால். (௪௦)

உண்ணமுடி யாமனனி தூரமுறப் பறக்குங்கா
லெண்ணமுனம் புரியறத்தா லேற்றமாம் பெருந்துறைக்கட்
டெண்ணமலர் நிறைபிரம நீர்த்தகேர் செலுங்காலை
யண்ணவினைத் ததுபருந்தாங் கப்புனல்வீழ்ந் ததுதவளை. (௪௧)

அந்தநெடும் புனல்வீழ்ந்த வச்சமயத் தொருபாம்பு
முந்தவிழுங் கியததனை முயங்குறப்பூ ணுக்கொண்டு
கந்தமலர் விண்பொழியக் கனஞ்செலுத்தும் விமானமிசைச்
சந்தமறை யவனிவர்ந்து தண்கயிலா யம்புகுந்தான். (௪௨)

தெரியாது கவர்ந்தபொருள் சிறியதினுஞ் சிறியதந்தன்
பரிகார மிதுவென்னிற் றெரிந்துகவர் பாதகத்தோர்
விரிவாய நரகமெலாம் விதியாயு ளளவமட்டுஞ்
சரியாது துய்த்தாலுந் துயர்நீங்குந் தாத்தரோ. (௪௩)

செறிபூமொய்த் தெழுபிரம தீர்த்தத்தின் பெருஞ்சிறப்போ
டறிவேதற் குபதேச மானதுறைத் தாமிதுமுற்
குறிஞான காண்டமெனக் கூறவ·ர் திருமால்வக்
தெறிபாசத் தவனுக வருள்பெற்ற தியம்புவாம். (௪௪)

பிரமனுபதேசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௮௫௧.

---

# திருமாலுபதேசப்படலம்.

*தென்றிசை கொள்ளுங் கொள்கை சென்னிகாட் டளத லத்து
னொன்றிசை யன்பெ ழுச்சி யுற்றவைம் பெயரி னுப்ப
ணின்றிசை யெழுத்தால் வேத னிருமித்த வெழுத்தை மாய்ப்பான்
றன்றிசை பவஞ்ச நீர்மே லெழுத்தெனத் துணிந்து ளோமே. (௧)

தளர்விலா வனந்த கோடி சருவசங் கார காலத்
தளவிலாக் கவேப ரங்கங் காளமா வகாதி மூர்த்தர்
வளர்புயத் தணிய மாய்ந்த மாயவ ரன்றிப் பின்போர்
விளர்தபு மாதி காலத் தயன்பெறு விண்டு வென்போன் (௨)

தன்றிருப் பதும நாபி தனில்வரும் பிரமர் கோடி
பொன்றிடு கால மட்டும் பொலிதரப் புவன மெல்லா
நன்றறத் திதிசெய் தன்ன காலெலாங் கழித்துக் கந்து
றன்றிய விரவு முற்றுந் துயில்கொளீஇ விழித்த பின்றை (௩)

பொருந்துகண் விழித்துப் பார்க்கும் போழ்தன் புண்டரீக
வருந்திரு நாபி மீதோ ரந்தணன் றோன்றி மேலா
வருந்தலச் சிவபு ரத்தின் மாதவ மியற்றி யின்பந்
திருந்துமெய்ஞ் ஞானத் தோடு சிரட்டியும் விடாது பெற்ற (௪)

சத்திய வுலக மேவித் தாமரைத் தவிசி னேறிப்
பத்தெனப் பழமு டம்பு பவிர்த்திடத் தனக்கு நல்கிச்
சித்தமெய்ப் பொருள்சால் சிவன் முத்தனுய்த் திகழக் கண்டு
புத்தியி னவன்பான் மேவிப் புயனிறத் தன்னல கேட்பான். (௫)

---

* தென்றிசை - அவாசி; கொள்கை - மதம்; தலத்துவொன்று - ஆலூர்; அன்பு - நாம்; எழுச்சி - எர்வு; இவற்றின் இடையேயுள்ள எழுத்துக்கள் வாதவூார்.

மைந்தனும் பிரம விந்த வாழ்வுனக் கார்கொ டுத்தார்
புந்திசெய் துரைத்தி யென்னப் புயனிறந் தவனை நோக்கித்
தந்தையாய் நீயெ னக்கு யான்றந்தை யாயு னக்கு
வந்திட வருளு முக்கண் வள்ளலார் தந்த தென்றான். (௬)

நன்றுரை செய்தா யென்று நளினயோ னியையு வந்தே
யுன்றனக் கருள்பு ரிந்த வுத்தமத் தலமியா தென்னத்
தென்றிசைப் பெருந்து றைக்கேத் திரமென்று செப்பக் கேட்டாங்
கின்றுநான் சென்றன போல வின்னருள் பெறுவே னென்றான். (௭)

வாகமை யுனது வேத வாக்கரு ளென்று பெற்றுத்
தாகமோ டாதி மூர்த்தத் தலமென விளங்கா நிற்கும்
பூகயி லாய ஞான புரமடைந் திரவோன் மேய
சேகரர் றுதற்கண் ணூற்செய் தீர்த்தநீ ரன்பிற் றோய்ந்து. (௮)

வெள்ளிய நீறு மேலோர் விரும்புகண் மணிதன் மேனி
கொள்ளிய வணிந்து நீழ லுவவாக்குஞ் சாத்தைப் போற்றி
வள்ளிய பீட மேவும் யோகநா யகியை வாழ்த்தி
நள்ளிய மால்கு ருந்த மூலத்தி னயந்து வந்து. (௯)

அட்டாங்க பஞ்சாங் கத்தோ டவனிமேற் பணிந்து போற்றி
யெட்டான மூர்த்தி யேயெண் குணத்தனே யிமையோர் வாழ்வே
சிட்டான வான்ம நாத தேசிகா சிவனே காவென்
றுட்டாகம் பெருக வகையு மூரிமைகண் டுவந்து நாதன். (௧0)

குருந்தமர் கோலங் கண்டு கொள்ளுஞா னக்க ணல்கிப்
பொருந்திய சமயா சாரப் பொருள்பெறு விசேட தீக்ஷை
பரிந்தருள் செய்து நீநற் பத்தியோ டுத்த ரத்தி
லிருந்தபிப் பிலத்தின் கீழ்ச்சென் றிருந்தவ மியற்றின் வந்து. (௧௧)

வேண்டிய வரங்க ளெல்லா மிகமகிழ்ந் தருள்வோம் போவென்
றாண்டவன் புகலக் கேட்டே யாவயின் மகிழ்ச்சி யோடு
நீண்டசெஞ் சடையார் பாத நெஞ்சுற நினைந்து கொண்டு
மாணடகு மரசின் பாற்போய் மாதவம் புரிய லுற்றான். (௧௨)

அஞ்செழுத் தோங்கா ரத்தோ டன்பொடு சபித்து நெஞ்சக்
கஞ்சமீ தான்ம நாய கனைபிரிஇப் புலங்களை மாற்றித்
துஞ்சலோ டுணர்வி லாது சுகாசன மிசையி ருந்து
விஞ்சுநல் யோக மாய மெய்த்தவஞ் செய்ய லுற்றான். (௧௩)

நீலவெற் பசைவ தொன்று நிலமிசை யிருந்தல் போல
மாலமை யோகத் தன்மை மலர்க்குருந் திறைவ னோர்ந்து
சாலவு மகிழ்ந்தம் மாயோன் றவம்புரி வைப்ப டைந்து
மேலெலாங் குளிர்ச்சி பொங்க மென்கையாற் றடவும் போது. (௧௪)

அமிழ்தசி தனக டற்க ணழுந்திமே லெழுவான் போலுட்
டமிழுற வுணர்ந்தெ ழுந்து சரோருக நோக்கா னொக்கி
யிமிழ்குயின் மொழியாள் பாகன் குருவடி வியையக் கண்டான்
கெமிதயத் துற்ற கோல மிதுவென விறைஞ்சிச் சொல்வான். (கரு)

## வே று.

பரனே கணங்கண் முதல்வா புரங்கொல் பலைகவா புயங்க மணிவாய்
வரனே சிவந்த வடிவா துலங்கு மழுமா னமர்ந்த பிரியாக்
கரனே காக்கை சிரமாலை கொன்றை கமழார்பொ ருந்து சடையா
யரனே குருந்த வனகாத நின்ற னடிசேரு மன்ப ருளுவாய். (கசு)

இமையாரொ டியானு னியஞ்ச வேலை யெழுநஞ்ச முண்ட திறலாய்
கமையாது மின்றி வருகாலன் மாள விறைநீள் கமழ்ந்த சரணு
வுமையாண் மணந்த மணவாள நந்தி யுரிபோர்வை கொண்ட வொருவா
வமைவார் குருந்த வனகாத நின்ற னடிசேரு மன்ப ருளுவாய். (கஎ)

தொழுகேயம் வஞ்ச மறமேய வன்பர் துடர்ந்திர நின்ற சுடரே
தழன்மாழ்கு நின்ற திருமேனி கொண்ட தருவேதெ ருண்ட குருவே
பழகார ணங்கண் மிகுமாக மங்கள் பலநூலி னுஞ்சொல் முதலே
யழகார்கு ருந்த வனகாத நின்ற னடிசேரு மன்ப ருளுவாய். (கஅ)

பொருமார னங்க மனன்மூழ்கி வெந்து பொடியாக வென்ற விழியாய்
வருமோர் விலங்கி னுரியாடை கொண்ட வாதாவி லங்கை நகரா
னொருபாத கன்றன் வலிபோய டங்க வொருதாள கங்கொ டடர்வோ
யருமாகு ருந்த வனகாத நின்ற னடிசேரு மன்ப ருளுவாய். (க௯)

பெண்ணூத ரஞ்செ யொருபாக வங்கி பிணையேந்தி சண்ட னெனுமுக்
கண்ணூவி ருண்ட களநாத வன்பர் கருதுள்ள மோவ ரியசெவ்
வண்ணூம துப்பெய் துறவாசம் வீசு மதலைத்தொ டைக்கு ரியனே
யண்ணூகு ருந்த வனகாத நின்ற னடிசேரு மன்ப ருளுவாய். (உ0)

## வே று.

இவ்வண மாவன் மிகத்துதி செய்திட வெழின்மேய
வைவண நீல மிடற்றிறை போக்கரு மகிழ்வெய்தி
யுய்வகை பெற்றிடு பஞ்ச தசாக்கரி யுபதேசத்
திவ்விய மாவருள் செய்துவி னைப்பகை தீர்த்திட்டு. (உக)

வலையும் வெற்றிகொ ளுக்கிற முக்கிரு வெஞ்சத்தி
யவமினி நத்தக லாமவி ருக்கவு மழகார்ந்த
புவனமெ லாந்திதி யாணை நடாத்தவும் பொருவில்லாத்
தவமிகை யாலுறு மாதவ னென்றெுர்த்த னிப்பெரும். (உஉ)

சிந்தையி லன்பொடு தம்மை நினைந்திடு செயலுந்தத்
தந்தமி லின்பநி றைந்தமர் வாழ்க்கையு மருளாகுஞ்
சந்திர சேகர காதர்ம றைந்துயர் சதுவேத
மந்திர மாநகர் மேவிய மர்ந்தனர் மாயோன்பின். (உ௩)

ஈசன னுக்கிர கித்தசெல் வத்தொடு மிதமேவ
வாசக ருன்றவ மாற்றிய தேத்தொா ருங்கோயின்
மாசமை யாதவை குத்தவி டத்தினும் வளமேவத்
தேசமை யும்படி செய்தமர் வுற்றான் றிருவோடும். (௨௪)

வேறு.

மாயவன் றவஞ்செய் தேத்து வைகிய தீர்த்த நா
ராயண தீர்த்த மென்ப ரறிந்தவ ரதனிற் றோய்வார்
பாயமுப் பகையுஞ் செற்ற பண்பினு லுயர்மெய்ஞ் ஞான
மேயவ ராகி யெல்லா வினைகளும் வீட்டி வாழ்வார். (௨௫)

கலைபொரு மணிமுத் தாற்றங் கரைக்கணோர் நகர முண்டா
லுலைபெறு குடிக ளொன்கு மக்க ளொருங்கு வாழும்
வலைவில்சம் பத்தி னோடு வைணவ வணிகனீர்சூழ்
தலைவெறுத் திடவுள் ளான்கே சவனென்பா னவ்வூர் வாழ்வான். (௨௬)

அனையவன் கொடிய பாவக் குழிசியா யறிஞ ராகி
நினையவுள் ளவராய்ச் சைவ நெறிநிற்கு மேலோர் தம்மைத்
துனையவிக் கிப்பான் சைவ துரோகத்திற் றலைநின் றுள்ளான்
புனையவாஞ் சிவால யத்துப் பொருளெலாங் கரவிற் கொள்வான் (௨௭)

தீயமா பாவி யிந்தச் செய்கையி னொழுகு நாளின்
மேயசம் பத்த னைத்தும் வீந்தன சுவாச காச
மாயதீப் பிணிமுன் னான வடர்ந்தன வமைத்த வாழ்நா
டேயவிவ் வுலக நீத்துத் தீநர குலகத் துற்றான். (௨௮)

ஆங்குவெந் நிரய மெல்லா மளப்பினா ளனுப வித்துக்
கோங்கின முலையாள் பாக னாலயப் பொருட்கோ ளாய
தீங்கினின் றிதந லாலச் சேடமுங் கழிப்பான் மண்மே
லோங்கும்வெம் புலையர் சேரி யிடையொரு ஞமலி யானான். (௨௯)

இழிதரு ஞமலி யானோன் பெரும்பசி யெழுந்து பற்றி
யொழிவற வருத்த வெய்ய புலையரு மொருங்கு மொத்த
வழிவுறீஇ யலந்து நின்று மடுத்ததோர் வேடச் சேரி
செழியின னக்குச் சற்றூண் கிடைத்துயி ரோம்பு நாளில். (௩௦)

அனையவெஞ் சேரி வாழ்ந ரடவியென் றடுத்து வேட்ட
வினைசெய றணிந்தார் மேவும் வெய்யநாய்க் குலங்க ளோடு
துனையமற் றிதுவுஞ் சேர்ந்து சொல்லொணா விடுக்க ணுற்றுக்
கனைகுரன் மிருகம் வாழுங் காட்டகத் துற்ற தன்றே. (௩௧)

செறியுமக் காட்டோர் கேழல் சினத்தினை முடுக்க வோடி
நெறிபல கடந்தெய்த் தேகா னிலவிட் டுலக மெல்லா
மறிபெருந் துறைக்கண் ணேகா ராயண தீர்த்தக் கோட்டு
முறிவற வுந்தந் நீரின் முயங்குற வீழ்ந்த தன்றே. (௩௨)

வராகமு மொக்க வீழ மாய்ந்தன விரண்டு மப்போ
தாரவணி கைலை யெம்மான் கணங்களை யனுப்ப வாங்கு
விராவிய கணங்க டெய்வ வுருச்செய்து விமானத் தேற்றிப்
புராதன கைலை யுய்ப்பப் பொவ்வெனப் போகுங் காலை. (௩௩)

நன்றியின் றிழிந்த நியகாயுரு வொழித்த தேவன்
பன்றியி னுருவ நீத்த பண்ணவன் முகத்தை நோக்கி
யொன்றிய நமக்கச் சென்ம மொழிந்துயர் புற்ற தெவ்வா
றின்றியா னுணரு மாறிங் கியம்புவாய் கொல்லோ வென்றான். (௩௪)

தெரிந்தனன் புகல்வே னென்று செப்புவான் வராக தேவன்
விரிந்தநீர்த் தரங்க மார்கா விரிப்பெருந் தீரத் தோர்பாற்
புரிந்தபல் வளமார்த் தாண்ட புரமென்றோர் நகருண் டாங்குப்
பரிந்தபன் மறையோ ருள்ளோர் பனவன்யான் பாவி யானேன். (௩௫)

தினநசைஇ யோடி யோடிச் சிராத்தபோ சனமே செய்வேன்
கனநிகர் கண்டன் கோயிற் பொருளெலாங் கரவிற் கொள்வான்
மனனமர்ந் தொருநாட் கஞ்ச பாத்திர மொன்று வவ்வித்
தனபதி யனைய நின்னைத் தந்தன னீயுங் கொண்டாய். (௩௬)

அந்தவே துவினு லியான்செத் தளவினு னரகந் துய்த்து
முந்தவெங் கேழ லாகி முட்பயில் காட்டு ழன்றேன்
றந்தது மறும லேற்ற வணிகனுக் தகவி னீயு
நந்தவெந் நிரயத் தாழ்ந்து நாயுரு வானு யன்றே. (௩௭)

இருவரு மநேக கால மெரிபுரா துன்பந் துய்த்துப்
பொருவரும் பெருந்து றைக்கட் பொருந்தினா ராய னப்பே
ரொருவருந் தீர்த்தந் தாழ்ந்தவ் வுருத்துறந் திவ்வா றுறோம்
வெருவருங் கைலை சார்வா மினியென விளம்பி னானல். (௩௮)

எண்ணருங் கோடி கால மிருந்தவ மியற்றி னோர்
கண்ணருங் கயிலா யத்து நாயும்பன் றியுமா யுள்ள
தண்ணரு முருவ நீத்தார் சார்ந்துவாழ்ந் திருந்தா ரென்னிற்
பண்ணரு மரிதீர்த் தத்தின் பெருமையார் பகர வல்லார். (௩௯)

வாசித்த மலர்த்தார் மார்ப மன்னவ திருமால் வந்து
பூசித்த வண்ணஞ் சொற்றும் புத்தியு னிலைப்பார் பாவ
மோசித்த கருணைக் காலாக் கினியுருத் திரர்தா முற்றி
தேசித்த திறத்துப் பூசை நிகழ்த்திய திறமுஞ் சொல்வாம். (௪௦)

திருமாலுபதேசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௮௧௧.

---

# காலாக்கினியுருத்திரருபதேசப்படலம்.

*புதல்வியே சேய்மை தனக்கெதிர் மறையே பொருந்தவெள் ளிலைபுணர் கமுகே
யிதரவில் இனியே திரட்சியே செவ்வா யென்றுரை செயுநில மகனே
முதல்விசம் மிறைமே னியிற்கொளும் பங்கே முகத்தலங் காரமாங் கண்ணே[டே.
சுதமிலிவ் வெண்பேர் காப்பமெட் டெழுத்தெட் டெழுத்தெனிற் றோற்றமு முண்

வேறு.

சங்கார காலமரி யயன்வாழ் வைப்புந் தருவுலகுந் திசைப்பாலர் தங்கு வைப்பும், பொங்கோத வுததிவரை புவிமற் றியாவும் பொடியாக்கி வெள்ளியநீ றெடுத்துப் பூசிச், சிங்கார வுருவமாய் நிற்குங் காலச் செந்தழற்பே ருருத்திரரா சிரியற் கண்டு, பொங்கார்வத் தொடும்பூசித் தருள்கொள் வான்றம் போனூற்றெட் டுருத்திரர்கள் புடையிற் சூழ. (உ)

செஞ்சடா மகுடம்விரித் தொளிர நாகச் செம்மணிக்கல் கணம்விளங்கச் செறிபூங் குல்லை, கஞ்சநா றியபஞ்ச வடிவி ளங்கக் கரும்பன்றிக் கோடாமை யோடுதூங்க, விஞ்சுதலை மாலையெலும் பணிகு லாவ வேன்மழுவா ணேமிதண்டு சூலந்தோட்டி, யஞ்சரோ ருகக்கையமை தாச்சி லம்பொன் னடியலம்ப முக்கண்ணும் விராவி நிற்க. (௩)

நெடுவகழுத்துங் குறுந்தாளும் பருத்த கையு நீளுசிரும் பிறையெயிறு நான்றவாயு, மொடுங்கலில்பல் சித்தலையுங் குழிந்த கண்ணு முயர்மார்பும் பெருவயிறு மொன்று ரஞ்சுங், கொடுங்கொலைச்சூ லமுங்கபா லமும்வி ளங்கக் குழையசைய வுடைதுவளக் குதித்துத் துள்ளி, யடுங்கனத்தி னிடிமுழக்கு மஞ்சப் பாடி யாடியெண்ணிலாப்பூதப் படைக ளெய்த. (௪)

துந்துபிகா ளம்பூரி மணிசே கண்டி துடிமுரசு பம்பைசின்னந் தடாரி பேரி, மொந்தைகல்ல வடக்கைகை முழவு வீணை முருடுமுதற் பல்லியமு மியம்பா நிற்கச், சுந்தரவெள் விடைக்கொடிமுன் போத மற்றுஞ் சொல்லாத சின்னமெலாந் துவன்றி மொய்ப்பச், கொந்தலர்பூம் பொழில்புடைசூழ் சிவபு ரத்தைக் குறுகியர்கண் முன்னமைத்த கோல நீங்கி. (௫)

சாந்தகுணத் தவவுருவங் கொண்டு நீறு தரித்துருத்தி ராக்கமணி தலைதோண் மார்பு, வாய்ந்தகரத் திடைமருவப் பூண்டு குந்த வனத்திறுக்கு மாறளிகரும் வடமேழ்த் திக்கி, லேய்ந்துவளர் மகிழ்வனத்திற் சாலை செய்தாங் கிருந்துபஞ்சாக் கரசெபத்தோ டிடைவி டாமற், பாந்தளணி பெருந்துறைச்சிற் பரன்று ணைஞ்சிற் பதித்துமிகு தவஞ்சிலநாட் பண்ணுங் காலை. (௬)

* புதல்வி - குமாரி; சேய்மைதனக்கு எதிர்மறை - அணிமை; வெள்ளிலை புணர்கமுகு - பாக்கு; இனி - சுகம்; திரட்சி - கவான்; நிலமகன் - குசன்; பங்கு - பாகம்; கண் - பார்வை; இப்பெயர்களினிடையேயுள்ள எழுத்துக்கள் மாணிக்கவாசகர்.

சதுவேத புரமேவு மான்ம நாதர் தவம்புரிசீ லத்தமைகா லாக்கி னிப்பேர், மூது வாய்மை யுருத்திரருக் கருள்வா யென்று மூக்துபுதம் பெருங்கருணை யுந்த லாலே, கதிமேய விடையேறி யொருபால் யோகக் கன்னியமர்ந் திடச்சடைமேற் கலை வெண் டிங்க, ணதிபோகி தலைமாலை கொன்றை தும்பை நக்ககூ விளந்தூர்வை யெருக்க ளாவ. (எ)

திருவிதிரு முகக்கருணை யொழுகச் செவ்வாய்ச் சிறுமுறுவ லொளிரமிளிர் வனைத்தோ டாட, வரியரவும் புரிநூலு மிசழித் தாரு மணிகெழு பொற் பணிபலவு மார்பின் மின்னக், கரியவிடத் திருநீல கண்ட மியாருங் கைகுவிக்கும் படிவிளங்கக் கரங்க ணான்கும், தெரிமறிமான் மழுவபய வரதந் தாங்கத் திண்புலித்தோ ரிருவரை மேற் செறிந்து நால. (அ)

வேதமுருத் திரிந்தபரி புரம்போற் றூண்மேல் வீழ்ந்தலற மலரவன்மால் விண் ணோ ரேத்தப், பேதமிலா முனிவரர்கிம் புருடர் சித்தர் பிறங்குகா ரதர்முதலோர் புகழ்ந்து பாடச், சீதமதிக் குடைகவிப்பப் பதங்க ரெங்குஞ் சிறந்தவொளி விளங் கெடுப்பத் திசைகாப் பாளர், போதமணி யடைப்பைமுதற் பலவுந் தாங்கிப் போத நறுங் கற்பகம்பூ மாரி பெய்ய. (கூ)

கணநாதர் தொண்டரெலா மிருகை கூப்பக் கனிந்துரைக்கு மரவொலியேழ் கடலிற் பொங்க, மணநாறு மிளந்தென்றல் வந்து லாவ மாமுகில்கள் விதானமிட மகிழ்ந்து நந்தி, குணமார்கட் டியங்கூற வெயிலு வந்த குஞ்சரமா முகக்கன்றுங் குமர வேளுந், தணவாமு டிகமயின்மே லிவர்ந்து முன்போ தரவெளியே வழியாகச் சார் ந்து வந்து. (க௦)

மகிழ்வனத்திற் றவம்புரியு முருத்தி ரேசர் மனமகிழுந் திருக்காட்சி வழங்குங் காலே, கெகிழ்தருகண் மலர்குளிரக் கண்டெ ழுந்து நிலமீது வீழ்ந்திறைஞ்சி நிகர்த ராவன், புகிழியவிழ்த் தெனவளர வாடிப் பாடிப் பொலிந்திருகண் மழைபொழியப் புளகம் போர்ப்ப, முகிழுறுகை செஞ்சடா முடிமேற் செல்ல முன்னின்று தோத்தி ரங்கண் மொழிவ தானார். (கக)

அடிநடுவீ றொன்றுமிலா முதலே போற்றி யகண்டபூ ரணஞான வமுதே போற்றி, முடிவில்வெளி யெனநிறைந்த வெளியே போற்றி முத்திக்கு வித்தாய வொளியே போற்றி, வடிவெழுத வரியபெரும் பொருளே போற்றி மறைமுடிவு மெட்டாத மணியே போற்றி, நடியெனவன் பினர்வேண்ட நடிப்பாய் போற்றி நறுமலர்ப்பூங் குருந்தவன நாதா போற்றி. (கஉ)

காதமரும் வண்சங்கக் குழையாய் போற்றி கைலாய மலைமேய கடலே போ ற்றி, சீதமதிக் கொழுந்தணிந்த சடையாய் போற்றி திரிபுரமு நீறெழமுன் சிரித் தாய் போற்றி, பாதமலர் கொடுகாமனை யுதைத்தாய் போற்றி பங்கயத்தோன் றலையரி ந்த பரனே போற்றி, நாதவுரு வேதவுரு வானாய் போற்றி நறுமலர்ப்பூங் குருந்தவன நாதா போற்றி. (கங)

தேனமருங் கொன்றைமலர்த் தாராய் போற்றி சித்தசனை யழற்குணவு செய் தாய் போற்றி, மானமர்செய் மழுவிருகை பொறுத்தாய் போற்றி வரிசிலையா மா மேரு வளைத்தாய் போற்றி, போனகமா விடமுண்மெ் பொலிவாய் போற்றி பொற்

பொதுவி னின்றுநடம் புரிவாய் போற்றி, ஞானவொளி யாய்விளங்கு சுடரே போற்றி நறுமலர்ப்பூங் குருந்தவன நாதா போற்றி. (௧௪)

இச்சையின்றிப் பிச்சைகொண்ட விறைவா போற்றி யேழுலகுங் கடந்துநின்ற வெளியே போற்றி, கச்சையென வரவசைத்த கடவுள் போற்றி கதிகெழுவெள் விடைவருமுக் கண்ணா போற்றி, பச்சையொடும் பவளநிறம் படைத்தாய் போற்றி பசுபதியா மகாருத்தப் பரனே போற்றி, நச்சையமு தாக்கியன்பர்ப் புரப்பாய் போற்றி நறுமலர்ப்பூங் குருந்தவன நாதா போற்றி. (௧௫)

ஓமவழற் கிறைபோமுட் பொருளே போற்றி யோகார யகிபுணருத் தமனே போற்றி, தாமரைக்க ணொன்றணிந்த சாரணா போற்றி சக்கரமால் வேண்டவரு டலைவா போற்றி, மாமனென விமாசலத்தை மகிழ்வாய் போற்றி மலைமகளை மணம் புணர்ந்த மணியே போற்றி, நாமவெழுத் தைந்துணர்த்துங் குரவா போற்றி நறுமலர்ப்பூங் குருந்தவன நாதா போற்றி. (௧௬)

வேறு.

இப்படிநற் றுதிபுரியு மிசைகேட்டு மனமகிழ்ந்து
செப்புமழ லுருத்திரர்க்குத் திருநோக்காற் றீக்கைபுரிந்
தற்புதச்ச டாக்கரத்தோ டகோரவுருத் திரமனுவு
மொப்புயர்வொன் றில்லாத வுபதேசஞ் செய்தருளி. (௧௭)

ஐந்தலையுந் தொழிலினடு வாயதொழி லுனக்குமுனந்
தந்ததுவர்த் தித்திருக்கச் சகலவர முங்கொடுத்தோ
மெந்தமருட் பதத்திலுதித் திறசெய்கா ளொடுங்குதலா
லுந்தனக்கு மலமாயை யொடுக்கமிலை யென்றுணர்தி. (௧௮)

நீயேகாம் பேதமென நிகழ்த்துதலொன் றிலையுனக்குத்
தாயான திரோதவருட் சத்தியே யுன்கோப
மாயாத பேர்கடமோ குணமென்ப ரத்தனையும்
வீயாத பல்லுயிர்கண் மேவுமலம் விடுப்பதற்கா. (௧௯)

களிம்பகற்றப் பொன்சுடுவோர் கணக்கெனநீ கொண்டதுவாம்
விளம்புமல மற்றவுயிர் மேற்கருணை யுனக்குமுண்டா
மளந்தறியா மலவுயிர்கட் கதிகாரி நீயேயாந்
துளங்கலிலாச் சங்காரத் தொழிலொடுவாழ்ந் திருசுகத்தே. (௨௦)

நச்சும்வர மினியுனக்கு நம்பாஃவேண் டுவதுண்டே
லச்சமற வுரைத்தியென வஞ்சலித்தென் னுளத்துன்றுன்
வைச்சிருக்கும் வரம்வேண்டு மஃதன்றி மாண்புடையாய்
நிச்சயமா வினுமொன்று வேண்டுமெது நிழ்த்துவல்கேள். (௨௧)

அடியனேன் றவம்புரிந்த வித்தானத் தடிகேணன்
கொடிதராச் சிவலிங்க வுருவாதல் வேண்டுமய
விடியவோர் சிவகங்கை யெனப்புகநீர்த் தமும்வேண்டுங்
கடியபூ வாதிகொண்டியான் களித்தருச்சித் திடல்வேண்டும். (௨௨)

கலம்பொலியுங் கயிலாய நாதரென வொருதிருப்பேர்
நிலம்பொலியும் படியடிகே ணீர்பூண்டு கொளல்வேண்டும்
வலம்பொலியு முமைக்கண்டு வணங்கிவாழ்த் துநரெல்லாம்
பலம்பொலியும் யாவையுநன் கனுபவிக்கும் படிவேண்டும். (௨௩)

இந்தவர மருளுகென விலிங்கமுந்தீர்த் தமுமாங்குச்
சந்தமுறத் தோற்றிமறைத் தொருகுருந்த வனஞ்சார்ந்தா
ரந்தமிலாப் பெருங்கருணை யான்மநா யகரிப்பாற்
கந்தமல ராதிகொடு பூசிக்குங் கடன்பூண்டார். (௨௪)

வளைத்தபுகழ்ச் சிவகங்கைப் புனலாடி மகிழடியின்
முளைத்தவொரு சிவக்கொழுந்தை யத்தீர்த்த முகந்தாட்டி
விளைத்தமது மலர்சூட்டி விரும்புநிவே தனமூட்டித்
திளைத்தமகிழ்ச் சியிற்றூப தீபமுங்கோட் டினர்மாதோ. (௨௫)

பிரியாம லுடன்வந்த பெருங்கணநா யகர்மலர்மா
தரியநதி வடனவர்க ளாராயு முனிவரர்க
ளரியாராஞ் சித்தர்முத லோதுபெருந் தவத்தரெலாஞ்
சரியாத வன்பினராய்த் தாந்தொழுது பூசித்தார். (௨௬)

ஏத்துதிரு மகிழடிக்கீ ழிவ்வண்ணம் பூசித்துச்
சோத்தனடி யோமென்று குருந்தடியும் போய்த்தொழுது
வாய்த்தவுருத் திராண்ட முகட்டினிற்போய் வாழ்ந்திருந்தார்
சாய்த்தவினை மற்றோருந் தத்தமிடம் போயமர்ந்தார். (௨௭)

விரைத்தமலர் மகிழடியில் வீற்றிருக்கும் பெருமானை
யுரைத்தவிதிப் படிபூசை யுபகரணத் தியற்றுநரும்
புரைத்ததுதி புரிகுநரும் புந்தியுற நினைக்குநருந்
திரைத்தவினைக் கடல்கடந்து சிவலோகத் தின்புறுவார். (௨௮)

மதியுதய மதிவார மதிசதிரை யாக்கவர்நா
ளதிபலஞ்செய் பிரதோட மாதியவாய்ப் பூசிப்போர்
துதிகயிலை புகுவர்சிவ கங்கையுறத் தோய்வாரும்
பதிகருணைக் கிலக்காகிப் பரலோகத் தின்புறுவார். (௨௯)

கனசவுராட் டிரதேயக் காளிந்திக் கரைவில்வ
வனமெனுங்கேத் திரம்வில்வ வனநாத ரெனப்புகலு
மனகருள ரவரமரு மாலயத்திற் பணிபுரிவான்
றனமுனெவற் றினும்வாஞ்சை சற்றேனு மில்லாதான். (௩௦)

அந்தநக ரிடையேற்கு மையத்தாற் பசியொழிப்பான்
பந்தமென லணுகாத படியொழுகும் படிமத்தான்
சிந்தவிலாச் சிவநேயஞ் செறிபண்டா ரம்பொருவான்
வெந்தமடி போலமர்வான் விருபாக்க னெனும்பெயரான். (௩௧)

அன்னவன்றன் சீலமுழு தறிந்தங்கா டினிதோம்பு
மன்னவனோர் வரவழைத்து மறையவர்தங் குலமணியே
நன்னயமார் வில்வவன நாயகர்கோ யிலையோம்ப
வென்னருநின் போலாகா ரென்றுசிறப் புறத்துதித்து. (௩௨)

அன்னதளி முழுதோம்பு மதிகார நடத்திவர
னின்னதெனக் கொடுத்தனம்யா னேர்ந்துகாங் கோடியென
மன்னவன்பல் காவிரப்ப மறுத்தனன்மற் றமைச்சர்முனோ
ரென்னருஞ்சொல் வார்த்தையினா னேற்றமீண் டனன்மாதோ. (௩௩)

கதிருதய மெழுமுனமைங் கன்னலெனத் துயிலுணர்ந்து
பிதிர்தலின்மெய்ச் சுசியாற்றிப் பிறங்கியவெண் ணீறணிந்து
மதியமையுந் தலத்தடைந்து மலசலநீத் தருநூல்சொல்
விதியமையுங் கோன்மென்று மெனறுமிழ்ந்து தூயவனாய். (௩௪)

தளிமுனுறு மிலக்குமிதீர்த் தம்படிந்து நீறணிந்து
களிசெயுங்கண் மணிபூணடைந் தெழுத்துமுனத் துறக்கணித்தே
தெளிதருமா லயம்புகுந்து வில்வவனச் சிற்பரனை
யெளியவர்பங் காங்காருண் ணியநிதியைப் பூசித்து. (௩௫)

தழையவதி காரஞ்செய் தானத்தி னினிதமர்ந்து
விழையவரு சிவத்துவிசர் முதலோரை விளித்துமனங்
குழையவவர் முகநோக்கிக் குறைவினா வுபுமுடித்துப்
பிழையமையா விதநடத்தும் பெருந்தொழிலிற் றலைநின்றான். (௩௬)

பொறையொன்று திருமனத்தான் வில்வவனப் புராதனராம்
பிறையொன்று சடையார்த மாலயத்துப் பேணுதொழிற்
குறையொன்றும் வாராது நடாத்துபுகொள் பொருளிலனை
விறையொன்றுங் கொளானீறே யேற்றைய மேற்றுண்பான். (௩௭)

சிலர்பாற்போய்ப் பாற்பசுக்க டெவ்வுபுசேர்த் தனன்றளிக்காச்
சிலர்பாற்போய் நந்தவனஞ் செயநிலஞ்சேர்த் தனன்கவர்ந்து
சிலர்பாற்போய்ச் சோலைவளஞ் செறிதரக்கைக் கொடுவிட்டான்
சிலர்பாற்போய்க் கொணடுவினை நிலமேன்மே லுஞ்செறித்தான். (௩௮)

சீலங்கொள் விருபாக்கன் சிறந்தவதி காரத்திற்
காலங்கொள் பூசையினாற் கருதுபல விழாவினா
லாலங்கொண் மிடற்றுருக னமுதாகுஞ் சிறப்பினாற்
கோலங்கொ ளொன்றாலுங் குறையிலையென் றிறைமகிழ்ந்தான். (௩௯)

மிக்கமகிழ் மேவுதலால் விருபாக்கன் றனையழைத்துத்
தக்கமணிப் பணிகாம்பு தாணிபுகழ் சேத்திரங்க
டொக்கபல்பாத் திரம்விளைநன் னிலமாதி துன்னூர்
நக்கழலாக் கினர்க்கென்றே யிறைகொடுத்து நலஞ்செய்தான். (௪௦)

இந்தவித மொழுகுநா ளெங்குஞ்சென் றையமெடீஇப்
பந்தமற வுண்ணும்விரு பாக்கனுக்கு மூப்புவர
கந்தவுட லந்தளர்ந்து நரம்பெலும்பு வெளிப்பட்டுச்
சந்தமுற நடக்குநடை தடுமாறக் கோல்கொண்டான். (௪௧)

உணவொழியத் தளர்காலை யுமாபதியா லயத்துள்ளா
லணவுசிவத் துவிசனத்தி யயனஞ்செய் வான்கரணன்
பணமலிகோ சங்காப்பான் பாகஞ்செய் வானாகத்
தணவருமை வருங்கூடி விருபாக்கன் றனைச்சார்ந்தார். (௪௨)

ஐயரே மூப்பினா லலசினீ ரலைந்தமுது
செய்யமுடி யாதினிமேற் சிகரிமடத் திடையமர்ந்தா
லுய்யநா மொவ்வொருநாட் கொவ்வொருவ ராக்கொணர்ந்து
வெய்யதா வமுதுசெய விரும்பியுத வுவமென்றார். (௪௩)

ஆயவிரு பாக்கனுமற் றவ்வார்த்தை தனக்கிசைந்து
பாயமடத் தமர்ந்தான்மேற் பன்னியவை வருமிக்க
நேயமுட னெவ்வொருநாட் கொவ்வொருவ ரயிரம்பத்
தூயவமு தளித்துவந்தார் தொலைந்தவவிப் படிப்பன்னாள். (௪௪)

சோறுசமைத் தனுத்தாரித் தொழினமக்கே லாதென்று
மாறுபடு மனத்தாராய் மற்றொருநா ளவன்பால்வந்
துறுதவிர் தாயாங்க ளுதவுவதி லொருநாள்போ
லேறுதவத் தீர்நடக்க வருத்தமுறு மாலின்னும். (௪௫)

ஆறிப்போம் சமைத்தவெலா மதுநுகரி னோயின்மை
மாறிப்போம் பிணிவந்து மூப்பினிடை வருத்துமேல்
வீறிப்போம் பெருந்தவத்தீர் மேன்மேலு மபராத
மேறிப்போ மெங்களுக்கோன் றியம்புதல்கொள் வீரென்றார். (௪௬)

நீர்தேடி வைத்தவிலை நிலமுழுதுந் துரோணமலர்
கார்போது மெனவெண்ணெ னனிவிளையுங் கமழ்சோலை
யோர்சாலின் கனிகாய்மற் றினுமுதவும் பசக்கவெலாம்
பார்சோரப் பால்பொழியும் பாயமடப் பள்ளியிடை. (௪௭)

ஒருவனைவைத் தெண்ணியவா றடப்புரிவித் துன்பதுவே
பெருலலெனென் றூர்கேட்ட விருபாக்க னதுபேணி
வெருவலிலா முன்புரிந்த வினையினா லுடன்பட்டான்
மருவியமற் றவர்போனார் மதிவழிச்செய் துண்டிருந்தான். (௪௮)

சின்னாளிப் படியுண்டு நீரகோய்க் கோட்பட்டு
முன்னாவெந் துயரழுந்தி முதுமறையோ னிறந்தொழிந்தான்
றன்னாமக் கடுங்கூற்றின் றமர்கொடுபோய்த் தீவிடமு
மன்னாவெந் நிரயமெலாம் புகுத்திவருத் தினர்மாதோ. (௪௯)

எண்ணிறு ணிரயமெலா மனுபவித்து மீறாகக்
கணணிலபா தகத்தாலே காவிரிநாட் டொருகிளியூர்ப்
புண்ணில்வாய் வைத்துழலும் புலையர்சே ரியினுழனாய்ப்
பெண்ணிலோர் பெண்ணுருவாய்ப் பிறந்தனன்வா தனைப்படுவோன். (௫௦)

புலையர்மனை யுட்புகுந்து புலாற்பாண்டம் வாய்வைத்து
நிலைகுலைய வவர்மொத்த கெடுத்துரங் குழைத்தகன்றே
யுலைவுமிக விவ்வண்ண முழிதருநாட் கருக்கொள்ள
வலைமுனவி லவர்களு மடித்துபற ழாயுதித்தார். (௫௧)

முடிவல்பற ழாயுதித்த வறுவருமு முதுமறையோன்
வடிவமையு மிழிசென்ம நூறெடுத்து மாய்ந்துமாய்ந்
திடுகுமொரு புலைச்சேரி யிடைப்புலைய னாய்ப்பிறந்தான்
கடுமுதலை யாய்ச்சிவகங் கையிற்பிறந்தா ராவர்களும். (௫௨)

புலையுருக்கொண் டவனெடுநாட் போகாத துயரமுழந்
தலைபுனறு டகன்றதென்று டணையவரு காலனவா
விலைமலர்செற் றியகுருந்த வனநோக்கி யெய்துவான்
மலைவின்முனல் வினைதழுவ மகிழ்வனத்தி னிடைப்புகுந்தான். (௫௩)

முதுவேனில் வருத்தமுற மூச்செறிந்து வருபுலையன்
சதுவேத புரவடகீழ்த் தங்குமகிழ் வனத்தருகு
மதுவேயு மலர்ப்பொய்கைச் சிவகங்கை வந்துவீழ்ந்
திதுவேகம் முயிர்காப்ப தென்றுதுலை தருகாலை. (௫௪)

ஐந்துபொறி யலைப்பதுபோ லைந்துமுத லையும்பற்றி
யைந்துசித றிடவுறுப்பு கலியவவ னுயிர்மாய்ந்தான்
வந்துபர சிவனருளாற் கணநாதர் மானமிசை
கந்துசுர வுருகல்கி யேற்றிகடந் தனரம்மா. (௫௫)

மானமிசைச் சென்றவவன் வன்கயிலா யம்புகுந்தான்
றனையில்பல் போகமுந்துய்த் தினிதிருந்தான் சிவகங்கை
யானதடத் துதித்தசிறப் பான்முதலை யானவருக்
தானவுல கடைந்தாங்குத் தவிர்போகந் துய்த்திருந்தார். (௫௬)

இரும்புலைய னுறவு மெண்ணாது படித்தாலும்
பெரும்புவன மேத்துகயி லாயபதம் பெறக்கொடுத்த
தரும்புலர்ச் சிவகங்கை யஃமட்டோ முதலைகட்குஞ்
சுரும்படையாக் கற்பகப்பூஞ் சோலையுல களித்ததால். (௫௭)

பத்தியுட னடைந்தொருவர் பகரும்விதிப் படிமூழ்கிச்
சுத்திதரு நீறணிந்து தூய்தாங்கண் மணிபுனைந்து
சத்தியனைத் தெழுத்தெண்ணி மகிழடியார் தமைப்போற்றின்
முத்தியடை குவரென்றே மொழியவும்வேண் டுவதேயோ. (௫௮)

*போதவருந் திராவிடத்து போற்றுதிற மெடுத்துரைத்தா*
*மோதவளம் புவியுவப்ப வொள்ளியசெந் தமிழ்பொலியப்*
*பாதகங்கள் பறந்தோடப் பரசமயந் தடுமாற*
*வாதவூ ரடிகளவ தரித்ததிறம் வகுத்துரைப்பாம்.* (ருக)

காலாக்கினியுருத்திரருபதேசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கரு0.

---

# திருவாதவூரர் திருவவதாரப்படலம்.

---

*முடியார்கொள் பெருமானும் வாதவூர் முனிவரரு*
*மடியாரு மாண்டானு மாயமுறை யினாவரைக்*
*கடியாரா யடைதருவார் கலந்துறக ரினபத்தோர்*
*படியாரே யெனிலவருக் கென்னமுறை பகர்வாம்யாம்.* (க)

*வரைவளைய நடுப்பொலியு மாநிலமா மடக்கொடிக்குப்*
*புரையிரு முகமாகும் பூழியர்கோ மான்றிருநா*
*டுரைசெயுமம் முகக்கண்ணு யொளிர்தருங்கா விரியினுநீர்*
*கரையறமே லெழும்வலயக் கரையுளதாம் வாதவூர்.* (உ)

*இழைகாட்டு நுண்ணிடையா ரெழில்காட்டும் பொழிலெங்குங்*
*குழைகாட்டு நறுஞ்சூதங் குயில்காட்டு மயில்காட்டுந்*
*தழைகாட்டு மற்றுமுள தடஞ்சினைகள் வயலனைத்துங்*
*கழைகாட்டும் பொய்கையினுள் கண்காட்டுங் கயல்காட்டும்.* (௩)

*கடுத்துவரு புனல்வையைக் கரையுபாக் கடிதலைக*
*ளெடுத்தெறியு மணியஞ்சி யிரிந்தோடு மோட்டெருமை*
*யடுத்தொருவா வியிற்பாய வாங்குவரால் முட்டிடப்பால்*
*விடுத்துமிதக் கிடுமொருபால் வெள்ளமிதக் கிடுமால்போல்.* (௪)

*வேலியென விடைகரும்பி னடிப்பாகம் விளைகதிர்ச்செஞ்*
*சாலியறை தாக்குறி தாக்குலைந்த தண்டலைத்தாய்*
*வாலியசா ரெழுகவிடப் பெருகியது மடையுடைத்துக்*
*கோலியவெங் கும்பாவுங் குறிக்குமொரு கடலேபோல்.* (௫)

*மழைபொழிவ தெனநாளு மதுப்பொழிவ மலர்ச்சோலை*
*தழையுமுகிற் கொடியென்னத் துகிற்கொடிதங் குவகொச்சி*
*விழையுமலை மாறுபடுஞ் சோறுபடும் வியன்மாடங்*
*கழைவின்மத னெனப்பொலிவார் வனப்பொலிவார் கழன்மைந்தர்.* (௬)

இழையணிமங் கையர்கடையு மிட்டிடையு மொருபிடியே
குழைநிகர்வ துஞ்செவ்வாய்க் கொழும்பாட்டும் வள்ளையே
மழைநிகராம் பான்முன்கை மருவியொலிப் பனவண்டே
விழைதொடர்மா லையுமுள்ளம் விரும்புமா லையுங்கற்பே. (எ)

இருள்காட்டுங் கரியகுழ லெரிமணிப்பூண் கிழக்குதயப்
பொருள்காட்டு மறையோர்முற் புக்கிசெய்கால் வரும்புனைந்த
மருள்காட்டுந் தாமுணரா மாநீறு மதிக்கிரணத்
தெருள்காட்டு மெனிலிரவுந் தினகரனு மதியுமிலை. அ)

ஊடலெடுத் தெறிமுத்த மொள்வயிர மாணிக்கங்
கூடல்கொள்வீ திகளுவர்நீர் கூடாத கடலொக்கும்
வாடலின்மா லையுஞ்சார்ந்து மான்மதமு முறல்கொள்வா
ளூடலமை தாப்பரப்ப னயந்தவா வணம்பொருவும். (கூ)

வேதநனி முழங்கொலிக்கு மிக்கவா கமமாம்பல்
பேதநனி முழங்கொலிக்கும் பெருமகளூ ரியவொலிக்குங்
கீதநனி முழங்கொலிக்குங் கெழுகளிறு திகளொலிக்கு
மோதநனி முழங்குமொலி யொவ்வாதா லொவ்வாதால். (க0)

வாதவூர் மறையொழுக்க மல்லான்மற் றொன்றுமரு
வாதவூ ரடைந்தாரை மலக்குரம்பை யகத்தினிரு
வாதவூர் சிவானந்த வாரியிடை யழுத்தலொரு
வாதவூ ரெனப்புகலும் வார்த்தைவா னிடத்துமுள. (கக)

ஒளிகெழுதற் குறுபெயர்கொண் டுலகமெலாம் வழங்குமொரு
வளியுதவ விரண்டெனவுண் மதித்துதவல் கற்றென்ன
வளிமருவ விஃதைமறு மையுமடைந்தார்க் களித்துவக்குந்
தெளிமருவு பன்மறையோர் செறிந்ததிரு வாதவூர். (க௨)

சோணாடு தலைசிறப்பத் துதைபிரம புரமெனவும்
வேணாடும் வளப்புடையார் மிடைந்ததிரு நடுநாட்டின்
வாணாடு நாவலூர் வளர்திருவா ரூரெனவு
நாணாடு மதிவழியோ னாட்டுளதவ் வாதவூர். (கங)

புத்தர்முதற் புல்சமயப் பொய்க்குழிவீழ்ந் துழல்கின்ற
மத்தர்நினை தோறுநினை தோறும்வாய் வெரீஇத்தாழ
வத்தர்தொழும் பியற்றியாங்க ணினைதோறு மகமகிழ்ந்து
முத்தரினுங் களித்துயா முனைந்துளதவ் வாதவூர். (கச)

சிறவாத நெறியகற்றிச் சிறந்தநெறி யினைநிறுத்தி
மறவாத வன்புகொடு மண்ணுடுவான் றுதித்துய்யப்
பிறவாத நெறியடைந்த பெருந்தகைமு னவதரித்த
வறவாத வூர்ப்புகழை யாமேயோ வறைகிற்போம். (கரு)

இந்தநக ரகம்வாழு மிருபிறப்போர் தங்குழுவு
ளந்தமிலாப் புகழ்பெறுமா மாத்தியர்தங் குலத்துதித்தார்
சந்தமிகு மறையொழுக்கந் தலைநின்ற பெருங்குணத்தார்
பந்தமகற் றிடுஞ்சைவப் பற்றுவழி வழியமைந்தார். (கசு)

தன்னமுமா சில்லாதார் சம்புபா தாசிருத
ரென்னநவி லுமத்தா ரெல்லாருந் தொழப்பொலிவா
ரன்னவரில் லறக்கிழமை யமைந்தொழுகு கடன்பூண்டார்
மின்னவிருஞ் சிவஞான வதியெனும்பேர் மேவினார். (கஎ)

இத்தகைய மனையாரோ டியைந்துவாழ் தருமறையோ
ருத்தமர்வெம் பரசமயக் குறும்பொழிக்கு மொருமதலை
யத்தாரு ளாற்பெறவா னாதரித்த கருத்தினராய்ச்
சித்தமொரு வார்தினமுஞ் சிவாலயத்தில் வழிபடுவார். (கஅ)

கதிருதய மெழுமுனைமல் கடிகையெனத் துயிலொருவி
யதிர்புனலின் முழுகுபுநீ றணிந்துவிழி மணிபூண்டு
சதிருறுமைந் தெழுத்தெண்ணித் தழைதருநந் தனம்புகுந்து
பிதிர்தலிலா மலர்குற்றுப் பிறங்குதொடை தொடுத்தணிந்தும். (கசு)

ஆனநறு நெய்வாக்கித் திருவிளக்கு களியமைத்து
மோனவடி யவர்க்காணின் முந்துபுசென் றுபசரித்து
மானவமு தூட்டியுமவ் வாதவூ ரிறைவர்விழா
வீனமறச் சிறப்பித்து மினும்பலசெய் தியலுநாள். (உ௦)

கெடுந்துயிலே முத்தியென நினைந்துநூ லுரைத்துமேற்
படுந்திறமொன் றேனுமுண ராதபா தகரடர்ந்து
விடுந்திறமில் வேதநெறி யுறமாற்றி வெய்யபெருங்
கொடுந்துயர நெறியமைத்தார் குலவுதமிழ் நாடனைத்தும். (உக)

அதுதெரிமா முனிவரரு மமருமற் றவர்க்கிறையுஞ்
சதுமுகனு நெடுமாலுந் தாங்கரிய கவலையராய்
முதுபுகழ்சா னிருக்கயிலை முன்னுபுசந் நிதிவணங்கிக்
கதுமெனயா மிறையவன்பொற் கழறொழுவந் தனமென்றார். (உஉ)

நந்திபுகுத் திடப்புகுந்து நம்பெருமான் கழல்வணங்கிப்
பந்தியினின் றனர்வந்த கருமமெவன் பகர்மினென
வந்திமதி முடித்தபிரா னருளுதலு மாறெழுது
முந்திமொழி குவன்பிடகர் முயன்றுசெய்தீ வினையனைத்தும். (உங)

திரைக்கடல்சூ ழுலகமெலாஞ் சிவரப்போர் வையரடர்ந்து
வரைக்கரும்வை திகசைவ மார்க்கமொழித் தனரதனு
னுரைக்கருந்திக் கருமமிலை யும்பர்பசித் தனர்மெலிந்தா
ரரைக்கலைநிக் காகவுளா யடியேங்கள் செய்வதெவன். (உச)

என்றுகுழைந் திஃதடியேம் விண்ணப்ப மென்றிசைப்பக்
குன்றுகவித் தவன்முதலீர் கொடியசாக் கியர்வலியை
வென்றுகளை குவனீவிர் போகிரென விடைகொடுத்து
மன்றாடிப் பவனவர்கோன் மாற்றன்மனங் கொண்டிருந்தான். (உரு)

அதுகருதி யமர்தருகா லாயிரவர் கணநாதர்
சதுமறையும் புகழ்காலாஞ் சத்திபதிந் தவர்குழுமிப்
புதுமதிய முடித்தபிரான் பொன்னடிதாழ்ந் தனரெழுந்தார்
முதுபுகழா கமத்துண்மை மொழிந்தருள்வேண் டுமென. (உசு)

இரந்தருளத் திருவுள்ள மிரங்கியிது பெறவேண்டின்
வரந்தருமுத் தரகோச மங்கையிடை நீவிரெலாம்
பரந்துசெலீஇ நமைத்தொழுது பணிவிடைசெய் திருப்பீரேற்
புரந்தருளு மாங்கருள்வோம் போமினென விடைகொடுத்தார். (உஎ)

அடிபணிந்து கணநாத ராயிரரு மங்கின்று
படிபுகழும் பெருவளஞ்சால் பாண்டிநாட் டகம்புகுந்து
கொடிமதிலுத் தரகோச மங்கையிடைக் குறுகினார்
முடிவில்பர மானந்தக் கடற்றனையு முதக்குறைவார். (உஅ)

வலனமையுத் தரகோச மங்கைபுகுந் தவர்தீர்த்தக்
குலமுற்றும் படிந்தாடிக் கோமளவெண் ணீறணிந்து
நலமருவு மைந்தெழுத்து ந[illegible]மய மனத்தெண்ணிப்
புலனமையுந் தம்பிரான் றிருமுன்னர்ப் போய்ப்பணிந்தார். (உகூ)

இரவுபக லிவ்வாறு தொழுதுருகி யிருக்குமவர்
கரவதவிர் செயல்கண்டு கண்ணுதனா யகன்கருணை
விரவுமுளத் தொடுமறையோர் வேடங்கொண் டாங்குற்றான்
வரவுதெரிந் தாயிரரு மலரடிக்கீழ்ப் பணிந்தெழுந்தார். (௩0)

எழுகணநா யகர்தமையோ ரிடத்திருத்தித் தானுமிருந்
தழுபமரம் பசியவிய வொழுர்குதேங் கொன்றையினான்
முழுவலுடை மற்றவர்தம் முகநோக்கி யாகமத்தின்
செழுமயமா முண்மைசொல வுபக்கிரமஞ் செயல்குறித்தான். (௩க)

அப்போது முப்பத்து முக்கோடி யமரர்களுங்
கைப்போது குவித்தணித்தாக் கலந்துசூழ்ந் தனர்போத
வெப்போது கொடுந்தொழிலின் விராயிரட்டி யவுணர்களுந்
துப்போது தூரத்தே சூழ்ந்துசே வித்தவர. (௩உ)

அரம்பையுருப் பசிதிலோத் தமையாதி யரமாதர்
வரட் . விது முழுவாதி மாண்புதழீஇ யெதிர்கடிப்பப்
பரம்புபலர் வெண்கவரி யெடுத்திருபக் கமும்வீச
நிரம்புவலா மிலைசமதிபோ னிகழொருவெண் குடைநிழற்ற. (௩௩)

கொழுங்கதலித் துடலையெனக் கொடிக்காடு முன்போதச்
செழுந்தரளத் தாலிசைத்த சிவிறிபல வளியெழுப்ப
வொழுங்குறதண் டமுங்கோணற் றண்டமுமுன் னுறநடப்ப
வழுங்கலிலா வொலியன்முத லாம்விருதா வளிசெறிய. (௩௪)

சங்கநிதி பதுமநிதி தயங்குசிந்தா மணியளவாத்
துங்கவளம் பொலிகாம தேனுமுதற் சொலுமனைத்தும்
பங்கமற வெழுதலைக்கட் பார்வையெதிர் நோக்கிவர
வங்கனகத் தருவைந்து மலைமயமிழ னல்கிவர. (௩௫)

வெள்ளியமா மலைமேலோர் மின்னலொடோர் கருமேகம்
வள்ளியசெந் தாமரையா யிரம்பூத்து வைகுதல்போற்
றெள்ளியவெள் யானையின்மேற் றிகழ்புலோ மசையினொடு
முள்ளியவா யிரங்கண்மலர்த் திறவராக் கம்புகல. (௩௬)

வெளியாய நடலையிடை விளங்கவரு மிந்திரனைக்
களியாய கருத்தினொடுங் கண்டுவக்தொல் லையின்மறந்தார்
தெளியாய கணநாத ராயிருட் சேரொருவர்
வளியாய வுணவுறும்பூண் மாதேவ னஃதுணர்ந்து. (௩௭)

திருவாத வூரினிடைத் தினந்தோறும் பணிவிடைசெ
யொருவாத தவமறையோ ருள்ளியகா ரியமுடிய
வெருவாத தேவரெலாம் வேரற்று ரென்றருகில்
பொருவாத மேனியன்முற் புலவரெலா மகிழ்தூங்க. (௩௮)

உண்மையுளத் திடகாமே யுபக்கிரமஞ் செயுங்காலை
வண்மையிது வெனவேறோர் விடயத்து மனமுய்த்தாய்
தண்மையின்மற் றிதனுவித் தரணியிலோர் பிறப்புற்றே
யண்மையினச் செல்வமனு பவித்தநமை யடைகென்றான். (௩௯)

என்றுசொல நடுநடுங்கி யென்செய்கே னெனக்கதறு
நன்றுதெரி கணநாதர் முகநோக்கி நம்பெருமா
னென்றும்வெரு வலைநமே யுன்றலைமே லடிசூட்டிக்
கொன்றுமல மின்பநிலை கொளச்செய்வோ மெனப்புகன்றான். (௪0)

விடைகொண்டு பரமனருண் மேற்கொண்ட கணநாத
ருடைகொண்ட கடன்மடக்கை யுவப்பெய்த வாதவூர்
நடைகொண்ட சம்புபா தாசிருதர் நன்மனையா
லடைகொண்ட திருவயிற்றி னங்குரிக்குங் கருவானார். (௪௧)

கற்றதிரு மறையவர்தங் காதலியார் பாற்கருப்ப
முற்றதிறங் குறிப்பினா லுணர்ந்துபிரா னருள்போற்றி
மற்றதிடை யூறடையா வண்ணமுற மாமறைநூல்
சொற்றசடங் குகளனைத்துந் துகளறச்செய் தனர்முடித்தார். (௪௨)

மதியமொரு பதஞ்செல்ல மாமறைநூ றலையெடுப்ப
விதியமையு மாகமங்கண் மேன்மேலுங் களிசிறப்பத்
துதியமைபு ராணமெலாந் தொக்கொருங்கு கூத்தாடத்
திதியமைபல் பாவடையுளுந் திராவிடமிக் குவப்பெய்த. (சங)

சதுவிதமாம் பாதங்க டனித்தனியுண் மகிழ்ச்சிபெறக்
குதுகலித்து வைதிகமுஞ் சைவமுமேன் மேற்குலவப்
புதுமலர்கற் பகநாடு பொழிந்துதுயர் கழிந்திருப்ப
வதுபொருண்மற் றிதுபொருளென் பாருளத்து மையமற. (சச)

அருகாத பரசமய மத்தனையுந் தடுமாற
வுருகாத கன்மனமு முடைந்துநெகிழ்ந் தொருங்குருகக்
கருகாத பொய்யுரைவாய் களுமெய்ம்மை சொலத்தொடங்கப்
பெருகாத நதியனைத்தும் பெருவெள்ளங் கொடுபெருக. (சரு)

களவகத்து மறமறியார் களுமதனிற் றலைநிற்ப
மனமொழிமெய் யொருமூன்று மியாவருமா றுறாக
வனகபர சிவபத்தி யடியேமைப் போல்வார்க்குத்
தனமணியா தியிற்சிறப்பக் காப்பாற்றுஞ் செயறழைப்ப. (சசு)

வெய்யவன்முற் கோளனைத்தும் விரோதமிலா நிலைநிற்க
வையகமெல் லாம்பரந்து மந்தமா ருதமுலவக்
கையமையாக் குறும்பனைத்துங் கலைந்துலகம் புரப்பவர்தஞ்
செய்யநெடுங் கோல்பொலியத் திருவவதா ரஞ்செய்தார். (சஎ)

தந்தையா ரதுகண்டு தாவாத மகிழ்சிறப்புற்
றெந்தையார் திருவருளா லிவையந்ததெனப் பாராட்டி
நிந்தையார் பரசமய நீறுபட்ட தெனத்துணிந்து
முந்தையார் ஜாதவினை முதலியன முடிப்பரால். (சஅ)

ஒருநாம மேனுமிலா வுத்தமருக் கெண்ணிறந்த
வருநாம மெடுத்தோத வல்லாரா யெல்லார்க்குங்
கருநாம மொழித்தருளக் கடவார்க்குக் கடவாத
திருநாமந் திருவாத வூரரெனச் செப்பினார். (சகூ)

ஈசானர் முதலாக வியம்புபதி னொருவரையு
மாசான கனிசெய்து மழவிடையூ ருகிவரு
மாசான பலவுகற்றி யருளுவீ ரெனப்போற்றித்
தேசான பெருங்கருணை செழிக்கிடக்காப் பியற்றினார். (ருO)

பரசமயர் வாயிலிடப் பற்றியெடுப் பவர்போலக்
கரமலரோ ரிரண்டனையுங் காசினியின் மிசைப்பதியா
வரமுழந்தா ளொன்றெடுத்து வயங்குதிரு முகமெடுத்துத்
திரமுறுபொற் குழையாடச் செங்கீரை யாடினார். (ருக)

விரவுகருங் கன்மனமும் வெந்தழல்வெண் ணெயினுருக
வுரவுடைய ரியாவோரு முவப்புறத்தா லசைத்திடவா
ரரவுமணித் தொட்டின்மிசைக் கிடக்கவரு மையிற்கிடத்திப்
பரவுபல ருன்னுருகித் தாலசைப்பப் பரிந்துவந்தார். (௫௨)

திருவாத வூரினமர் செஞ்சடையோன் கருமிடற்றூர்
பொருவாத நடைவிலும் போதினடிப் போதின்வலைக்
தொருவாத சிலம்பினொலிக் கொப்பத்தாக் குதல்பொருவத்
தருவாத வூரர்கையாற் சப்பாணி கொட்டினார். (௫௩)

வித்தமெனப் பாராட்டி மேயவிரு முதுகுரவர்
சித்தமுவந் திடப்பிணங்குஞ் செயன்மார்க்கத் தகப்பட்டுத்
தத்தமனம் புண்படுவார் தாம்விருப்புற் றுறிற்பவஞ்ச
முத்தமளித் தருளுவார் முத்தமளித் தருளினார். (௫௪)

அருகர்பவுத் தராயாதி யாஞ்சமயர் தடுமாற்றம்
பெருகவினி தவதரித்தாய் பெருமான்ற னருட்பேறே
திருவமையாக் குணவமாத் தியர்குலசிந் தாமணியே
வருகவரு கெனவழைப்ப வந்துதழீஇ யுவப்பிப்பார். (௫௫)

மூகைவா யாம்பன்மலர்த் தலினைத்தாய் முதற்குரவ
னுளைகூ றருள்பெறலா லொவ்வாய்வந் தணையேற்பாம்
பீகைசா னட்புறவா யில்லையே லிறப்புறவா
யாகையா லம்புலிநீ யாடவா வெனவுவப்பார். (௫௬)

வெருக்கழலத் தமையடைத்தார் மேவியபல் சிற்றிலெலா
மருக்கமழுந் திருவடியாற் சிதைத்தல்வயக் கியதென்னப்
பெருக்கமிகு புழுதியெலாம் பிறங்குறசிற் றடிபடியத்
தெருக்கடொறும் பேதையர்செய் சிற்றில்சிதைத் தருளினார். (௫௭)

விரவுபர சமயமெனும் விடவரவுக் கிடிமுழக்கா
வரவுமிகு சைவமெனு மயில்களுக்கு முகின்முழக்கா
வுரவுசெழு வழுதிபகை யும்பல்களுக் கரிமுழக்காப்
பரவுகுணில் கொண்டுசிறு பறைமுழக்கி யருளினார். (௫௮)

சேயவினம் பரிதியினுந் திகழுமினங் குழவியா
ராயவரி மருத்தனொ மடல்வழுதிக் கமைச்சாகிப்
பாயவவ னேமிதிசை திசையுருளப் பண்ணுதல்போ
லேயமணி பலபதித்த வெழிற்சிறுதே ருருட்டினார். (௫௯)

முகையனைத்து மலர்காலை முன்னவன்பொன் னடிக்காக்கிப்
பகையனைத்து மறமாற்றிப் பரமசிவ நெறிவளர்த்து
நகையனைத்துந் திரண்டென்ன நகப்பொலித்து நால்வேதச்
சிகையனைத்துந் தெரிவார்க்கோர் சிகையமைத்தார் திருநாவில். (௬௦)

மறையாதி யெக்கலையும் வயங்குமுதல் வழிசார்பென்
றறைவார்கள் மூவகையா யத்தகைய முந்நூலு
நிறைவாய மனத்தரென வேதெரிப்பார் போலமறை
முறையாலே திருமார்பின் முந்நூறுங் கப்புரித்தார். (கக)

பிறையெனநா டொறும்வளர்ந்து பிறங்கியா வோருமெடுத்
தறைபதினா றகவையுளா லாரணமே யாகமமே
நிறைதருபு ராணமே நிகழ்த்திடுமற் றளவனைத்துங்
குறையறக்கற் றுணர்ந்தாரெங் குடிமுழுது மடிமைகொள்வார். (கஉ)

திருவமிரு குடிப்பிறந்த செயலானு மதர்வணனு
லொருவவுணர்ந் தவரல்ல ருதனாலுங் கரிபரிதேர்
மருவவுகைத் தலுந்தெரிந்தார் தெரியாத வகையாதே
பருவமுறு வெமக்குமருள் பாலிக்கும் பெருந்தகையார். (கந)

வேதமுத லெக்கலையு மேதினியி லுணர்வார்தம்
போதமொரு சங்கையுறிற் றிருவாத வூர்பகுந்து
காதவெனத் தொழுதேத்தி கவின்றுதெளிந் தேகுவரேற்
சாதமிவர் கல்வியிலை யெவரளக்கத் தக்காரே. (கச)

போதமார் தரப்பொலியும் புரூரவா மன்னவனே
வாதவூ ரிறையவர்தா மவதரித்த மாண்புரைத்தா
மேதமார் மறையவர்சூழ் வியன்மதுரைப் பாண்டியன்பா
லேதமோ வமைச்சாகி யியலுமுறை யெடுத்துரைப்பாம். (கரு)

திருவாதவூரர் திருவவதாரப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ககரு.

---

# அமைச்சுரிமைபூண்டபடலம்.

---

அட்டொழித் தருளு மைய ராரு டலைமேற் கொண்டு
மட்டொழி யாது பெய்யு மலர்க்குழன் மூகை செவ்வாய்க்
கட்டொழித் தவரே கந்தங் கட்டொழித் திடுவா ரென்று
விட்டொழி யாம லன்னோர் விரைமலர்ப் பதம்பூண் டேமால். (க)

எதிரினம் மிறைகு லத்து முதலிலங் கோதந் தோற்றங்
கதிர்பொரா திலைத்துக் கூறுங் கைக்கொடு நரைத்து வானத்
ததிர்வுற வியங்குந் தாங்க லறமென மாட மூன்றுற்
பிதிர்வறத் தாங்கி யுய்க்கும் பெரும்புகழ் மதுரை மூதூர். (உ)

இருந்தவர் துதிமு ழக்கு மிகற்கரி பரிமு ழக்கும்
பொருந்தவின் னவர்கள் வந்து போதலிற் படுமு ழக்குந்
திருக்கமற் றெழுமு ழக்குஞ் செயிரறத் துஞ்சும் போது
மருந்தமிழ் முழக்கத் துஞ்சா தாலவா யென்னு மூதூர். (௩)

விழவொலி கண்ப டாது வீதியின் மிஞிறும் வண்டு
முழவொலி கண்ப டாது தொங்கலி னுவக்குஞ் செவ்வாய்
மழவொலி கண்ப டாது மாடத்தி னரங்கந் தோறு
முழவொலி கண்ப டாது முத்திகண் படுக்குங் கூடல். (௪)

திகழ்பெரும் பாண்டி நாட்டின் றிருமுக மாகி யென்றும்
புகழ்மிகு மனைய கூடல் புரப்பவ னூறற் றூலு
இகழ்தரு தன்மை நீங்கா விலாமதிக் குலத்து வந்தா
னகழ்மறத் தினன்கு லேச னருந்தவத் துதித்த நீரான். (௫)

அருளுரு வாய செல்வி யங்கயற் கண்ணி யோடுக்
தெருளுற வமருஞ் சுந்த ரேசர்தந் திருத்தாட் கன்பும்
பொருள்பெறு தமிழு மோவாப் புகழுநன் னீதி யாவு
மருளறத் தவஞ்செய் தீன்ற மகவுபோல் வளர்க்க வல்லான். (௬)

எங்கணும் வியாபித் துள்ள னிவனென வறியா ராகித்
தங்களுள் வேறு வேறு பிதற்றுவார் தவாகாண் கொள்ள
வங்கையிற் பிரம்பு கொண்டே யறிவிக்கு மறிவான் மிக்கான்
கங்கையிற் பொலியுந் தூய்மை கருத்துறத் திருத்தி னானல். (௭)

திரிபற வினைத்து நூலுந் தெரிந்தவன் பகைவர் தம்மைப்
புரிசினக் களிற்றிற் சிங்கம் புகுந்தெனப் புடைக்கு மாற்று
லரிமருத் தனனெ னும்பேர் பெற்றவ னவனி யெல்லாம்
பரிவறச் செங்கோ லுய்த்துப் பண்பொடு வாழு நாளில். (௮)

அறிவுடை மாந்தர் சில்லோ ரடுத்தன ரொருகா லன்னார்
செறிவர வுவப்பி னேற்று நிலவிய நந்நாட் டேனுங்
குறிகெழு பிறநாட் டேனுங் குலவதி சயமென் னென்றான்
செறிமலர்த் தொடையி னாயீ தென்றவர் செப்ப லுற்றார். (௯)

இந்தமா நகர்க்க டுத்த விரும்பொழில் வாத வூரி
லந்தமா தியிலம் பெம்மா னருட்பெருந் திறத்தி னாலே
வந்தவா றுரு மாமாத் தியமறை யவர்கு லத்தின்
முந்தவா தரித்து தித்தா ரொருவரியா மொழிவ தென்னே. (௧௦)

அவர்பெயர் வாத வூர ரகவையீ ரெட்டிற் றூர்மற்
றவரதி மதிநுட் பத்தைக் கல்வியை யளப்பா ரியாவ
ரவர்திற மூலக மூன்றும் வேட்பதா யமைந்த தைய
வவர்திற மொருநீ காணத் தக்கதென் றுரைத்து போனார். (௧௧)

சான்றவர் வார்த்தை கேட்ட தார்த்தடம் புயக்கோ மாற
னான்றவ ரவரைக் காணு மதிவிருப் புடைய னாகி
யேன்றவர் சிலரை விட்டா னெய்தியாங் கவர ழைப்ப
மான்றவர் கருதா வையர் வழுதிமு னடைந்தா ரன்றே. (கஉ)

இளங்கதி ருதய மேயென் றிசைதிரு மேனிப் பண்புங்
களங்கமின் மதியந் தோன்றிற் றெனுங்கவின் முகமுங் கமே
ருளங்கெழு செய்ய வாயு மொள்ளிய கருணைக் கண்ணும்
வளங்கெழு மார்புந் தோளு மனங்களி பயப்பக் கண்டான். (கங)

மறைமுதற் கலைக ளெல்லா மாண்புற வினவுந் தோறுங்
குறைதவிர் விடைகொ டுக்கக் கொற்றவ னுவகை பூத்து
நிறையெது வினவி னானு நிகழ்த்திடு மிவர்க்கின் றாகி
யறைகுநிர் பிரம ராய ரென்றமைச் சரைப்பார்த் தோதி. (கச)

ஊனிட ரகற்றுங் கல்வி யொருங்குணர்ந் திருந்த வையர்
மானிட ரல்லர் மற்றை வானவர் தம்மு ளியாரோ
கானிட கட்ட மாடுங் கடவுட னருளோ பன்னா
ளானிட ரறச்சூழ்ந் தாலுந் துணிவதில் லெனை யந்தான். (கரு)

கற்றமற் றிவரை யுள்ளான் கருவிக ளில்லா னேனு
மற்றமின் றாக வுள்ளா னவைமிக வுள்ளா னேனுஞ்
செற்றமில் லிவரை யில்லா னில்லனெத் திறத்தி னேனும்
பொற்றமற் றிவரைக் கொள்கை பொருளெனப் புலத்தி னுய்ந்தான். (கசு)

பழுதற நமக்குக் கண்ணாய்க் கவசமாய்ப் பாது காக்கு
முழுதுண ரமைச்சி ருக்க டமக்கெலா முதன்மை யாகச்
செழுமறைப் பிரம ராயர் தமைச்செய்தோஞ் செய்தோ மென்றான்
வழுதியவ் வமைச்ச ரெல்லா மகிழ்ந்தன மகிழ்ந்தோ மென்றார். (கஎ)

மிக்கதுங் குறைந்த துஞ்சீர் தூக்கிடும் விறல்சால் வேந்தன்
றக்கது செய்தா னென்னாத் தந்தமி னமைச்சர் சொற்றார்
புக்கது நமக்கோர் செல்வ மெனமற்றோ ருவகை பூத்தா
ரக்கது பூண்பெம் மான்செ யருளென வையர் ரேற்றார். (கஅ)

வழுதியர் பெருமா னிக்கா ளாதவ ரரைய ழைப்பித்
தெழுதருங் கல்வி யாராய்ந் தினியவோர் பேர்பு னைந்து
தொழுதகு முதல மைச்சின் பாரமுஞ் சூட்டி னானென்
முழுதுல குய்ய வென்று மொழிந்தன வுலக மெல்லாம். (க௯)

பெருவிலைச் செம்பொ னுடை பிறங்குகுப் பாயந் தேசு
தருதலைச் சாத்து மாயோன் றானும்வெஃ குத்த ரீய
மருமணி மதாணி யாழி யாரமொண் கடகம் பொன்னுண்
டிருமணிக் குழைமுன் மற்றுஞ் செயிரற வழங்கிப் பின்னர். (௨0)

மழைமதக் களிறு பாய்மா வாவுமான் பூண்ட பொற்றே
ரிழைமணிச் சிவிகை மற்றும் வருதினிக் கியல நல்கிக்
குழையுடற் கவரி வெற்றிக் கொடிகுடை யால வட்டக்
தழைதரு மொலிய லாதிச் சம்பத்தும் பெருக நல்கி. (உக)

குடமுழா முருடு மொத்தை கொக்கரை தடாரி பேரி
படகமுற் பலவு நல்கிப் பசும்பொழி லுறையுள் செக்கெ
விடனற விஜெ ராம மெண்ணில நல்கிச் சந்தக்
தொடலையு நல்கி மறறுக் தொகுசிறப் பனைத்துஞ் செய்தான். (உஉ)

பெருஞ்சிறப் பனைத்தும் பெற்று ஞாயிற்றிற் பிறங்கா நின்ற
வருந்தவப் பிரம ராய ரசிமருத் தனனுக் தென்னன்
றரும்புற விடைபெற் றெல்லாச் சம்பத்தும் புறத்தே சூழ
விருஞ்சிவி கையின்மேற் கொண்டாங் கியமெல்லா மியம்பப் போனார். (உந)

எரிமணி யிமைக்கு மொச்சி யிந்திர விமானக் கோயிற்
பரிவொடு புகுந்து சோம சுந்தரர் பாதம் போற்றிப்
புரிகருங் கூந்தற் செவ்வா யங்கயற் கண்ணி பொற்று
ளுரிமையிற் போற்றி நீறேற் றுவந்தனர் மீண்டா ரன்றே. (உச)

இருமுது குரவ ராய விருந்தவ ராச னல்கப்
பொருவரு மமைச்சின் பாரம் புதல்வனார் பூண்ட தோர்ந்து
வெருவரும் பரமார்க் கங்கள் வெல்லுதற் கிதுவுந் தானோர்
கருவியா யிருக்கு மென்று கருதின ருவகை பூத்தார். (உ௫)

நிறைகுடந் தீப முன்னு நெருங்குமங் கலங்க ளேந்திப்
பிறைநுதன் மடவார் சேரப் பிறங்குபல் லியமு மார்ப்ப
மறையவர் வாழ்த்து மல்க வளமலி யுறையுள் புக்கார்
கறைமலி காயே னெஞ்சங் காணியாப் புக்க வையர். (உசு)

அவரவ ரிருக்கை செல்ல வனைவர்க்கும் விடைகொ டுத்துப்
பவர்படு சடில மோலிப் பண்ணவற் கன்ப ரோடுங்
கவர்மன மில்லா வையர் கலந்தன ரமுது கொண்டு
தவர்புக ழமைச்சின் பாரந் தரித்ததற் காய தோர்வார். (உஎ)

மறநின முறைபு ணின்றும் வழுதியர் பெருமாற் கான
வறபெருஞ் சிறப்பி னோடு மூர்திமேற் கொண்டு போந்து
தெறுவலி யவனைக் கண்டு திகழுந்தன் னிருக்கை மேவி
நறுமுறு பகைவ ரச்ச நண்ணுமா றெண்ணு வாரால். (உஅ)

பெருவெளி மேல்பா லாகப் பெருங்கடல் கீழ்பா லாக
வொருவரும் புனல்சால் வெள்ளா றுத்தர மாகத் தெற்குப்
பொருவருங் குமரி யாகப் பொருந்தகான் கெல்லை யுள்ள
மருவிய குடிக ளெல்லா மிறைப்பொருள் வருவாய் தேர்ந்தும். (உகூ)

பொலிதர வெய்து மூல்கு பொருளுடை வருவாய் தேர்ந்தும்
வலிமரு வலர ளக்கு மாண்பொருள் வருவாய் தேர்ந்து
மெலிவிலா காங்க ணல்கு மிகுபொருள் வருவாய் தேர்ந்து
கலிவற வகாதர் நல்கு நகுபொருள் வருவாய் தேர்ந்தும். (௬௦)

இன்னமு தருத்துஞ் சாலே யினியநீர் வாக்குஞ் சாலை
நன்னலம் பயக்குங் கோயி லுறுறங் கல்விச் சாலை
சொன்னமற் றறப்பு றத்து வழிச்செலுந் தொகையு நாளும்
பன்னரும் படைக்கு நல்குந் தொகையும்பார்த் தறம தித்தும். (௬௧)

பல்வகை வரவு தம்முட் பல்வகைச் செலவும் போக
வொல்வகை யெச்ச மாகிப் பண்டாரத் துறையப் போகு
நல்வகைப் பொருளி ருப்பிவ் வளவென நன்கு தேர்ந்துஞ்
சொல்வகை வல்ல வைய ராசனுக் குறுதி சூழ்வார். (௬௨)

ஒருவினை தொடங்குங் காலே யுறுபொருள் படையி ரண்டவ்
வருவினை தொடங்குங் கால மதுதொடங் குபாய மற்று
மருவிடை யூறு நீக்கி முடித்திடு வண்ண மாகப்
பொருவரு மங்க மைந்தும் பொருந்தவா ராய்ச்சி செய்வார். (௬௩)

வினைபுரி திறத்தெஞ் ஞான்று மேவகை விலாமை நாளும்
புனைகுடி காத்த னீதி நூல்களைப் பொருந்த வாய்ந்து
தினைவிதி விலக்குற் றோர்த னிகழ்த்திய வைந்த னோடு
மினையவுங் கைக்கொண் டுள்ளார் முயற்சியை யிகவா ரென்றும். (௬௪)

பொருதொழி னோர்ந்த காலேப் பொருதிடு பகைஞர்க் கோகை
தருதுணை யாயி னோரைப் பிரித்தலுந் தம்மைச் சார்ந்தார்
மருவலர்ச் சாரா தின்சொல் கொடையினால் வசமாக் கல்லும்
வெருவறப் பொருத்த வேண்டிற் பொருத்தலு மிகத்தேர்ந் துள்ளார். (௬௫)

காரியச் செய்கை யொன்று பலவித மாகக் காணி
லோரிய வவற்று ளாவ தொப்பவா ராய்ந்து தேர்வார்
சீரிய வதுசெய் போது பலிப்பது நாடிச் செய்வார்
வீரியம் பெறப்பி ரித்தல் பொருத்தலில் வேட்பச் சொல்வார். (௬௬)

அறிந்துசொற் றிடவல் லார்த மறிவையுஞ் சிதைத்துத் தானு
மறிந்திட வில்லா னேனு மாசனுக் குறுதி யொன்றே
யறிந்துரைத் திடுதல் வல்லா ரரசனுள் வெகுண்ட போது
மறிந்தவர் தமக்கு றெண்ணு தரசனுக் குறுதிர்த்தல். (௬௭)

பலவுரைத் திடலென் மூன்றுட் பகைவரா யுள்ளா ரியாரும்
விலகுறு தரசன் பாங்கர் மேவினர் நட்புப் பூண்டார்
வலமிகு செங்கோல் செல்லாத் தீபத்து வாழ்கின் றாரு
நிலவரும் பொருள்வி டுத்து நேசிப்ப வியற்றி வாழ்வான். (௬௮)

அழிபொரு ளுணர்வு மென்று மழிவதின் றாகி யின்பங்
கொழிபொரு ளுணர்வும் போதின் மணமென மனத்துட் கூடப்
பழிபடு மிம்மை யாசை பந்தமா மறுமை யாசை
யொழிதர வெச்ச மாகி யுள்ளது பெறுதல் வேட்பார். (௩௯)

படிமுழு வதும ளந்த பைந்துழாய்ப் படலை மார்பன்
படிமுழு வதுமில் லென்னும் படியொரு கேழ லாகிப்
படிமுழு வதுமி டந்துங் காணொணாப் பதும பாதம்
படிமுழு வதுங்கொண் டாடும் பத்திகொண் டுணர வேண்டில். (௪0)

வேறு.

கறையடி முதலா வுறவியீ றாகக் கணைபல யோனியிற் பிழைத்து
நிறைதரு மக்கட் பிறப்புறல் வேண்டு நிகழ்தரு மப்பிறப் புள்ளுங்
குறைவரு மாயுட் டாய்வயிற் கருவாக் கூடுறல் வேண்டுமற் றதனு
ளுறைகொடுங் கிருமிச் செருமுத லாக வுளைப்பவை பிழைத்திடல் வேண்டும். (௪௧)

ஒருபது மதியஞ் சென்றவக் காலத் துறுதுயர் பிழைத்துமண் மேலால்
வருதிறம் வேண்டும் வந்தவக் காலும் வருடந்தோ றடைதுயர் பிழைத்துப்
பெருகிய காலை மலம்பகற் பசிநித் திரைபிறங் கிருளிவை பிழைத்தும்
வெருவற வெழுங்கா லிளமுலை மடவார் விழிக்கடை யெனும்வலை பிழைத்தும். (௪௨)

கலையெனப் புகலும் வாரிதி பிழைத்துங் காமரு திருவெனப் பட்ட
நிலையுறு செல்லற் பிழைத்துநல் குரவு நிகழ்பெருங் கொடுவிடம் பிழைத்து
மலைசெய்புன் வரம்பாம் பலதுறை பிழைத்து மாதரங் கூரமா மேருச்
சிலையுடைப் பெருமா னவனென நினையுஞ் சித்தமுண் டாகுதல் வேண்டும். (௪௩)

கடவுண்மற் றொருவ னவனெனுஞ் சித்தங் காதலிற் றோன்றிய பொழுதே
மடனமை சற்ற முழுமையுங் கூடி வாய்திறந் தாற்றிடுமே தான்று
திடமிஃ தென்று நாத்திகர் பலருஞ் செறிந்தனர் பிதற்றுவ ரின்னு
மிடனமை விரதம் பரமெனப் புகல்வ ரிவரையும் பிழைத்திடல் வேண்டும். (௪௪)

உலைசெயூ றினைத்துங் கடப்பினுங் கரும முயிரிறை யுண்டெனப் புகற
றிலைசெய்நீர் ஞாலத் தில்வழக் காகுங் கிருந்துட லலாதுயி ருண்டோ
வலைசெய்பூண் முலையா ரொடுகலந் துவக்க வாய்த்திடு மின்பமே யின்பம்
புலைசெய்மற் றோர்கள் புன்மையிற் புகலும் புகழ்ச்சியென் றுருவ தின்னும். (௪௫)

இளமுலை மடவா ரொடுபரி யங்கத் திலயத்தலைக் தமளிமே லிவர்ந்து
வளமிகு விலைசால் பாகடை மென்று மருங்குறு கலையற நெகிழ்த்தாங்
குளநெகக் கலச முலைமுகம் வருடி யுவப்பவா யூறன்மிக் குண்ணுந்
தளர்வறு புணர்வே யின்பென வுலைப்பான் சாற்றலோ காயதன் மன்னோ. (௪௬)

பகாவீ காரக் குழியிடை யழுந்தும் பன்றிமற் றதைவியங் கிடல்போற்
சிகரமா முலையார் மயலகத் தழுந்துஞ் சிதடர்மற் றதைவியங் கிடுவார்
புகரவாந் தோலெய்த் தோரென்பு நிணமுட் பொருந்திய முலையே மச்சை
விகாரமாஞ் சிதநீ ரிவைதிரண் டசுத்த மேயது சுத்தமெவ் விதத்தால். (௪௭)

இறைகொலை யிலன்மற் றவனலா லுயிரி லியையுமைக் கந்தமு மிலவே
நிறைபெறு முத்தி யெனப்பவுந் தன்சா னெறிகொளா ரறிவுடை யவர்தா
மறைவறத் தோன்றும் பொழுதுதாய்க் கொலைசார் வழுவின னிறந்தொழி காலத்
தறைதரு முத்தி பெறுவரியா ரென்னி லதற்கொரு விடையிலா மையினால். (௪௮)

தலைமயிர் பறித்துப் பாயுடை யுடுத்தித் தழைசமக் குடல்வருத் திடலே
நிலைதவம் பழைய கருமமுண் டொழியி னிலவிய பொன்னெயில் வட்ட
மலைவற வமர்வா னருகமர்ந் திடலே மாண்புறு முத்தியென் றுரைப்பா
ரலைதர வுத்தி யாத்தியென் றுரைத்த லமைந்ததால் கொடுபயி லமணர். (௪௯)

உடம்பினை வருத்த லேதவ மென்னி லுறைகழித் தொளிறுவா ளேக்கி
யடம்படச் சேதித் திடுதலுந் தவமா மடருமுற் கருமமுண் டொழிவுற்
றிடம்பட வமைந்த பொன்னெயில் வட்டத் தெய்துதல் கூவத்துட் படிந்த
கடம்படிந் தொருவ ரடமென்மே லெழுமோர் காரியம் போலுமான் மாதோ. (௫௦)

நிகழ்தரு மாயா வாதத்தோர் பேத நிரீச்சுர சாங்கிய னென்றே
யிகழ்வருஞ் சுத்த னுயிர்திரி குணமு மிரிதலே முத்தியென் றிசைப்பன்
புகழ்தரு சுத்த னெனின்மறைப் புன்றான் பொலிதரு பிரகிரு தியினாற்
றிகழ்தரு முத்தி பெற்றுளா னெனினுஞ் சேர்ப்பதற் கோரிறை வேண்டும். (௫௧)

புரிவினை முடிவின் ஞானமொன் றுண்டாய்ப் பொருந்துறு மதொழிற் பட்டே
யிரிதர வலைகற் போலுயிர் கிடத்த லெனல்பிர வாகரன் முத்தி
தெரிவினை மறமைப் பயன்றரா தொழியா சிலையென வுயிர்கிடந் திட்டாற்
பரியுமவ் விடத்தோர் பேறிலா மையினாற் பழிபடு முத்தியே யாமால். (௫௨)

குளிகைதாக் குதலுங் காளிதஞ் செம்பு குலைந்துபொன் னானவா போல
வொளியருள் வலியான் மலங்கெடன் முத்தி யென்னவோ துவன்பேத வாதி
தெளியுமா கமங்க ணித்திய மெனலாற் செறிமலங் காளிதம் போல
விளிதரா தென்றும் பேறொடு பெறுவான் மேவுத லெங்ஙன மாமால். (௫௩)

புழுவினை வேட்டு வாளிசெய் திடல்போற் பொருந்துயி ரினையரு னெடுத்து
வழுவறு மாயா சரீரமே யாக்க மற்றது நித்திய மாகிப்
பழுதற விருக்கை முத்தியென் றுரைப்பான் பகர்தரு சிவசம வாதி
முழுதுமா மதுசா ரூபமே யன்றி முத்தியென் றுரைத்தலு மாமோ. (௫௪)

நிருமல வெளியை முகின்மறைத் தாங்கு நிலாவிய சுத்தமா யிருக்கு
மொருபிர மத்தை மறைத்திடு மாயா வுபாதியவ் வேதுவி னாலே
பெருகிய சீவான் மாவெனப் படுங்காற் பெருவெளி யுதிப்பப்போ முகில்போ
லொருவறி வுதிப்ப வுபாதிபோ முத்தி யுதுவென்ப னான்மாயா வாதி. (௫௫)

இத்தச்சீ வான்மா வினுக்குள தாகி யிலங்கிய விவேகஞா னத்தான்
முத்தத்தா னேயுள் ளஃதெனின் மாயா மோகத்தான் மூடப்பட் டிடாறு
னத்தப்பின் புன்ன தாயதென் றெடுத்து நவின்றிடி னிலதனை தாகா
தெத்தப்பான் மையினா விதனையு முத்தி யென்றெடுத் திசைப்பர்மற் றவரே. (௫௬)

பாயமா யாவா தத்திற்பாற் கரியன் பரமொன்றே பவஞ்சமா யுயிராய்
நேயமா கிகழு ஞானமாம் பொழுதே நிறைபரஞ் சார்ந்துயி ரழியு
மாயதே முத்தி யென்பன்வான் பிரம மாகாது பவஞ்சமோ டான்மா
தூயவான் மாக்கெட் டிடுதலிற் பெறுவான் சொல்லுதற் கியாருளர் மாதோ. (௫௭)

மேயசங் கிராந்த வாதியென் றுரைப்பான் விமலனூர் திருவருள் பதிந்து
தேயமிக் கலைந்த பசுகர ணம்போய்ச் சிவகர ணங்களாய்க் காட்டத்
தாயவக் கினிபோ லொன்றபட் டிடுத லாவதே முத்தியென் றுரைப்பான்
தூயவக் கினியுங் காட்டமு மொன்றாத் தோக்குமின் றிடுதிற மின்றே. (௫௮)

ஆதியாங் கடவு ளாய்வழி பாட்டி னமைந்தபல் லுயிரையு மழியாச்
சோதிலை குண்டத் திருத்துமா லென்று சொல்லுவர் பாஞ்சராத் திரர்தா
நீதிலை குண்டத் திருத்துவ னென்று நிகழ்த்துத னிற்கவவ் வாதிக்
கோதிய வந்த முறுமெனின் முத்தி யுண்மையை யுரைக்கவேண் டுவதோ. (௫௯)

இயம்பிய விவைமுற் பல்லவுந் திருத்தி யில்லன வுள்ளது வாகி
நயம்படு முத்தி யுணர்தல வேண்டு நாடிது நன்குணர்த் திடுவார்
வியம்படு புவனத் தெவரெனத் தெரிவான் விடாதுகல லாரடை தோறும்
பயம்பட விறைவி யுள்ளது பெறுத பண்பின ராய்த்தனர்ந் தமர்வார். (௬௦)

பொதுமையிற் புகலும் வேதமுஞ் சிறப்பிற் புகலுமா கமங்களுந் தெள்ளி
முதுதவப் பெரியோ ராய்ந்தமர்ந் தனர்தா முறையுற கடாத்தமைச் சியலென்
பதுகுறை யுறுமற் புருரவா வேந்தே பகர்ந்தன மந்திரி யாய
புதுமைமற் றவரே பெருந்துறை மருவப் போந்தகா தையுமெடுத் துரைப்பாம். (௬௧)

அமைச்சுரிமைபூண்டபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௦௫௬.

---

# திருப்பெருந்துறையடைந்தபடலம்.

திருவா சகத்திற் கொருமுதல்வா செல்வா செல்வர் போரேறே
தருவா சகத்து மென்முறைகே ளென்று புல்லர் தமைத்தாழ்ந்து
மருவா சகத்து மிகக்கொண்டு மாழாந் தலைந்து மறையாதி
யொருவா சகத்து முருகாதார் திருவா சகத்து ளுருகாரே. (௧)

வெளிமுன் னுருவெட் டாய்ச்சிவமுன் னுருவொன் பானும் விலக்கிடுபே
ரொளியஞ் சரண மிரவுடக லொழியா துள்ளத் திருத்தலொடு
மளிதுன் றியதாரப் புயவமுதி யமைச்சின் றொழிலும் வழுவாமற்
றெளிவொன் றியபல் கலைபின்வலார் சிறப்ப நடாத்தி வருநாளில். (௨)

இந்த வுலக போகவெறுப் பெய்திற் றென்ப தெவனமரர்
முந்த வணங்க விண்முழுதாண் முதல்வன் மலர்மே லவன்றிருமா
லந்த வமையும் போகமெலா நாடா வமன பதமாகச்
சந்த மருவு மொருகாலாஞ் சத்தி பதிந்த வைதயர்பால். (௩)

சத்தி பதிந்த மாத்திரத்தே தக்கோர் புகழ்மக் கிரியார்க்கு
முத்தி விருப்ப மேன்மேலு மூளா நிற்க வதுநல்குஞ்
சித்தி யமைந்த வாசிரியற் றேடித் தேடி வருந்துவார்
பத்தி யமைந்தோ ருருக்கொண்டு பயின்று லன்ன பான்மையார். (௪)

ஞானு சிரிய னென்றவரு நம்மு ளுறையுஞ் சங்கையெலா
மானு விருப்பின் வினைவினு யறையத் தெளிவ தெப்போது
மானு வவன்பே ரருட்கிலக்காய் வயக்கி யடிக்கீழ் வைப்பதென்று
தேனு தரிக்குஞ் சிவானந்தத் தினைத்தின் புறலென் றெணநினைப்பார். (௫)

பொருப்பா லென்னுஞ் சுமைபரித்தோன் போகட் டிடவென் னுதல்போலு
நெருப்பால் வளையப் படுமொருவ னீங்க நினைக்கு மதுபோலுங்
கருப்பா லுறுத்தும் பிரபஞ்சக் கலப்பின் வீடு கருதுவார்
திருப்பா லுறவ தென்றென்று தெரிந்து தெரிந்து முயலுவார். (௬)

வேறு.

அருள்பெற வணிய ராய வன்புரு வாத வூரர்
பொருள்பெறு மொருகான் வில்லும் புலியுந்தங் கொடியு யர்த்தார்
தெருள்பெறு மற்றை மன்ன ரியாவருந் திரண்டு சூழ
மருளற விருக்கும் பாண்டி மன்னவ னவையிற் புக்கார். (௭)

புக்கவர் வழுதிக் கென்றும் புரிவது போல வன்றுந்
தக்கது செய்தன் ஞன்கை காட்டிய தவிச மர்ந்தார்
மிக்கவ ரிவர்தஞ் சூழ்ச்சி வியாழமு மடையா னென்று
தொக்கமன் னவரெல் லாருந் துதித்தன ரமைச்ச ஞனை. (௮)

அதுபொழு தத்தில் வாவு மபரித் தொகுதி பேணு
முதுதொழி லாளர் வேம்பன் முன்புவந் தடியில் வீழ்ந்து
கதுமென வெழுந்து நின்று காலுறக் குடந்தம் பட்டாங்
கிதுசெய்வின் னப்ப மென்றே யினையன புகற லுற்றார். (௯)

சிறந்தவாம் பரிகண் மேய திளைபொரு மிலாயத் துள்ளா
விறந்தவாம் பரிகள் போக வெஞ்சிய பரிக ளுள்ளும்
விறந்தமூப் படைந்த பல்ல மேயகோ யடைந்த பல்ல
மறந்தவா வேலாய் நல்ல தரிதென வருத்தா ரன்றே. (௧௦)

இவரிஃ தறைத்த லோடு மிரும்புலி யுயர்த்த வேந்துந்
தவர்கொடி யுயர்த்த வேந்துந் தண்மதிக் குலத்து வேந்தே
யுவர்படு குணக டற்பா லுறுதுறை யனைத்தும் வந்த
வவரவர் தேயத் துள்ள வபரி யனைத்து மென்றார். (௧௧)

என்றலும் வாத வூரர் திருமுக மிறைவ னோக்கி
யொன்றகம் பண்டா ரத்தின் வேண்டுவ வொருங்கு கொண்டு
கன்றல்செய் காடு காடுங் கடந்துகீழ் கடற்க ரைக்கட்
சென்றுவாம் பரிக ளெல்லாங் கொள்ளுதிர் சிறப்ப வென்றான். (கஉ)

விடையது பெற்றெ ழுந்து மீனவன் பண்டா ரத்தி
னடைதரு புதவ னைத்துந் திறந்தன ராங்குட் புக்கு
மிடைதர வேழேழ் கோடி பசும்பொருள் மிதப்பக் கொண்டு
கடைமுனம் போல டைத்துக் கயலிலச் சினைபொ றித்து. (கங)

வெளிவந்து கெலிங்க ழுத்தல் வெரிந்மிசைப் பொதிசெய் தேற்றித்
தெளிவந்த காவலாள ரோடுமுன் செல்ல வேவி
யொளிவந்த கோயி லுள்புக் கும்பர்கா வலனை யேத்தி
யளிவந்த சிந்தை யாளர் செல்லுதற் கமைந்தா ரன்றே. (கச)

மேயபாற் கடலெ ழுந்த வெண்டிரை காப்ப னுள்ளாற்
றூயமா மதிவி ளங்குந் தோற்றமே யென்ன முத்தத்
தாயவான் சிவிகை காப்ப னலங்குற வமர்ந்தார் மேனிப்
பாயநீற் றொளிவி ராவ வென்னுளத் தமரும் பண்பார். (கரு)

குழையொளி மதாணி மின்னுக் கொளுந்தலைச் சாத்தி யாரும்
விழைமணிக் கடக மாதி விளங்கிளங் கதிரைச் செய்யத்
தழைமணிச் சிவிகை மார்பிற் றங்குமுத் தார மற்றும்
பிழையற வொளிகால் வீசிப் பெருமதி யுதயஞ் செய்ய. (கசு)

சல்லரி முருடு மொந்தை சகுணிச்சங் குடமு ழாவே
கல்லவ டஞ்சின் னங்கா ளம்பேரி பீலி தாரை
மல்லலம் பம்பை வண்கொக் கரைமற்று முள்ள வாய
பல்லவுங் கடலு டைந்த பான்மையி னியம்பா நிற்க. (கஎ)

குடைகொடி யால வட்டங் கோளுறுத் தண்டங் கோண
லடைதரு தண்டம் பிச்ச மயிர்மணித் தோர ணங்கண்
மிடைதரு மொலிய லாதி மேவவா வனிக ளெல்லா
முடைகட லுதிக்கும் வெய்யோ னொளியற மறைத்துச் செல்ல. (கஅ)

இடியுன முட்க வார்க்கு முழக்கின வெழிலி மாண்பு
மடிதரப் பொழியா நிற்கு மதத்தின புடவி யஞ்ச
மடியின பெருங்கா லஞ்ச மஞ்செவி யினவெஞ் ஞான்றும்
படிதுழாங் கைய வெங்கும் பாந்துகுஞ் சரம்பல் செல்ல. (க௯)

நிலமக ளுடலந் தோய்ந்துந் தோய்வில வெனநேர் போகும்
வலமிகு கதிய மாற்றார் மணிமுடி யுறுகு ரத்த
கலகல வார்க்குந் தார கழிதராக் கடிவா ளத்த
பலபல வாக மொய்த்த பரித்திர ளொருங்கு செல்ல. (உ௦)

கிரியெனப் பெயர்தோற் றத்த நீண்டுவான் மேற்சென் மேல
பரிபல முழங்கப் பூண்ட பார்கிழித் தோடுங் கால
வரியயப் போத்து நேரு மடங்கலார்க் கசனி யேற்றிற்
றெரிதர முழக்கஞ் செய்யுந் தேர்பல செல்லா நிற்க. (௨௧)

படைபல மின்னுக் காட்டப் பரிசைமா மேகங் காட்ட
வுடைதிரை யுட்கத் தோன்று மொலியுரு மொலியைக் காட்ட
மிடையுட லொழுகும் வேர்வை மிகுமழை பொழிதல் காட்ட
வடையவும் வான மேவந் தடர்ந்தென வீரர் செல்ல. (௨௨)

பரிமிசை யிவர்ந்து வாரும் பாய்மதம் பொழிக போலக்
கரிமிசை யிவர்ந்து வாருங் காற்றெனச் செல்லும் பொற்றேர்க்
கிரிமிசை யிவர்ந்து வாரு மாய்க்கிளர் வீரர் நாளு
மரிமிசை யிவர்ந்து வான்சிற் றடிமுடிக் கொடுஞ்சூழ் போத. (௨௩)

எண்ணிய தெண்ணி யாங்கே யெய்துதல் குறித்துப் பெம்மான்
மண்ணிய மணியே நேரும் வாலருள் செலுத்தச் செல்லும்
புண்ணியர் தாமி வர்ந்த சிவிகையைப் பொறுக்கப் பெற்றார்
கண்ணிய வியக்கா நிற்ப வியங்கினார் நாடு வாழ்த்த. (௨௪)

புண்ணிய வாத வூரர் பொங்கெழின் மதுரை மூதூர்
கண்ணிய கோட்டை வாய்தல் கடந்தனர் கண்ணுங் காலை
யெண்ணிய குமர வேளுக் கிருப்பிட மாகி யாருங்
கண்ணிய வுயர்கு றிஞ்சித் திணைசென்று கலந்தா ரன்றே. (௨௫)

ஆசக மில்லா வைய ராரரு ணிரம்பப் பெற்ற
வாசக மென்னுந் தேறல் வழங்குதல் காட்டி யாங்குப்
பேசுப விறாலு மேலூர் பிறைக்கோட்டி றாலு டைந்து
வீசுபல் லருவி யாக விடுவன சுவையந் தீந்தேன். (௨௬)

இவரளப் பரிய செம்பொன் கொண்டன ரெய்து கின்றார்
கவர்மன மில்லா ராகிக் கண்ணுதற் சார்பி னின்றா
ரவர்கொளக் கொடுப்ப வன்னார் கையேற்ப தறிவித் தாங்குப்
பவர்படா தயருங் காந்தள் பரவுற மலர்ந்த வெங்கும். (௨௭)

ஆணவ மலமென் றோது மகிமனக் களிற்றை நாளு
மேன்மை யருளென் றோது மிகற்றோட்டி கொண்டி யாருங்
காணவென் றுள்ளார் கம்மை யென்செயக் கடவ ரென்று
நாணமுட் கிடப்ப வஞ்சி யிரிவன கருமா வியானை. (௨௮)

நன்புல மறையோ ரென்று நானிலம் புகழப் பட்டா
ரன்பொரு வடிவ மாகி யாருள் பெற்ற போதே
வென்பெலா முருகா நிற்க விருவிழி பொழிதல் காட்டும்
வன்புல வளாக னெங்கு மருவிழி யருவி யீட்டம். (௨௯)

இனையன நிகழா நின்ற விரும்பெருங் குறிஞ்சி நீங்கிப்
புனைகட லனீகத் தோடு புண்ணிய வாத வூரர்
சினைமலர்க் கடுக்கை யாதி நலந்திகழ் தருக்க டென்றித்
தனையிகர் வளத்தான் மிக்குத் தவலருங் காடு சார்ந்தார். (௩௦)

எண்ணரும் பொருள்கைக் கொண்டு வாதவூ ரிறைவர் செல்வா
ரெண்ணருங் குதிரை கொள்வா ரெய்துவ மொருங்கிங் கென்றே
யெண்ணரும் புகழ்சால் வேம்ப னெண்ணிய தென்று மென்றே
யெண்ணருந் தவவ மெல்லா நகைத்தன விடங்க ளெங்கும். (௩௧)

இவரிடை யிருந்த நம்பேர் பெற்றதொன் றிரிந்து போய்
இவர்வர வுணர்ந்த நாமிங் கெதிர்ப்பட லொல்லா தென்று
தவர்பயில் காட்டி னூடு தங்கிய மான்க ளெல்லாந்
தவர்விடு கணையெ திர்ந்த தன்மையிற் றுவி யோடும். (௩௨)

வாசக நவிலுங் காலை வயங்கிய தமைச்சி றப்பித்
தாசற நவிலு நன்றி யறிந்தன மகிழ்த லேய்ப்பப்
பாசடைத் தருக்க டோறும் பயில்செழுங் குழைப்பான் மேவிக்
கூசமொன் றின்றிச் செங்கட் கோகிலந் தொழிக்கு மாலோ. (௩௩)

மேயமற் றிவர்பெம் மான்பால் விடாவிருப் புடையா ரென்ப
தாயவெவ் வுலகுக் தேற்றற் கமைந்தவோர் சான்று போன்ற
பாயபுற் கறிக்கக் கல்லாப் பச்சிளங் கன்றை நீத்து
மேயமை யாம லெங்குங் கதறுபு விராய சேதா. (௩௪)

அந்தமில் புகழான் மிக்கா ரடைந்தனர் நம்பா லென்று
கந்தமென் மலர்க ளேவி வழிபடு கான நீங்கி
முந்தவுன் னாதா யாசை முதலிய வொருங்கு மாய்ந்த
பந்தமில் லவர்ம னம்போற் பசையறு பாலை சார்ந்தார். (௩௫)

சுழல்கின்ற சூறை மோதத் தாங்குகோங் கிலவின் பஞ்சி
யுழல்கின்ற தன்மைத் தாகி யொய்யெனப் பறக்குந் தோற்றங்
கழல்கின்ற காமத் தையர் கருதிவா தாடு காலத்
தழல்கின்ற சினவெம் புத்த ரிலைதிறங் காட்டிற் றம்மா. (௩௬)

வெடியவான் முதுவா யோரி விராவெதிர் பயிலுங் காட்சி
நெடியவாம் புரவி கொள்ள நிதியங்கொண் டணைவீ ரேனுங்
கடியகா மணைவோ மன்றிக் கடும்பரி யணையா வென்று
படியவாந் தன்மை காட்டும் படியென லாயிற் றன்றே. (௩௭)

சேயமா வந்த ணீர்துங் கிகழ்வினைக் காடு முற்றத்
தூயவாம் பெருந்து றைக்கட் சுடுதலெவ் வாறு கூடுந்
தீயவாந் தழற்கொ ழுந்தாய்ச் சிவனுமென் னிடத்தஃ தொல்லும்
பாயநூற் றகுதி தேர்ந்தீ ரெனப்பாம் புவவெந் தியே. (௩௮)

நயப்பெரும் புகழ்சா லெங்க ளூவினுக் கரசர் முன்னாள்
வியப்பரு மமண ராய வீணர்தங் கலப்பு நீங்கி
யுயப்படுஞ் சைவஞ் சார்ந்த தொப்பவெம் பாலை நீங்கி
நயப்பிலா மருதஞ் சார்ந்தார் கருதவென் னுளத்துஞ் சார்ந்தார். (௩௯)

தனியனா யமரு ஞானா சாரியற் றேடிச் செல்வீ
ரினியவ னெதிர்வா னும்மை யெதிர்ப்படுங் காலத் தெம்மை
முனியலா காமை வேண்டு மெனல்போ முழங்கி வண்டா
னனியலர் கழுநீர் வாவி நயப்பவெவ் விடத்து மல்கும். (௪௦)

புறவிரு ளகலத் தோன்றும் பொங்கொளி ஞாயி றென்ன
வுறவக விருள கற்று மொருஞான பானு வெய்தத்
திறமுறுஞ் சைவ ரியாருந் திருமுக மலர்வ தேய்ப்ப
நறவெழ மலர்ச்சி காட்டி நக்கபங் கேரு கங்கள். (௪௧)

மாரவே ளங்கை மேவி வரிசிலை யாகி யேவு
மாரமா மலர னைத்து மருச்சனை மலராக் கொண்ட
வீரர்தா மணைந்தார் காண வெல்குது மெனவ ளைந்தாங்
கீரமார் சுவைத்தண் டெல்லா மிடந்தொறும் வளைந்து நின்ற. (௪௨)

நருபுகழ் வழுதி நாடு நாடுமந் திரியாய்த் தொன்னாற்
புகுமுறை நடாத்த லாலே பொழிதரு முகின்மற் றியாவு
மிகுவிழை வுற்று மன்ன மேன்மையார் தமைவ ணங்கத்
தகுமென வணங்கல் போலத் தலைவணங் கினசெஞ் சாலி. (௪௩)

நீறணி வேணிப் பெம்மா னிருமல வுமையா ளோடும்
பேறணி யன்பர் நெஞ்சப் பிறங்குபோ தமர்த லேய்ப்ப
வீறணி புண்ட ரீக மிசைப்பேட்டோ டன்ன மேய
சேறணி மருதந் தீர்ந்து திரையெறி நெய்தல் சார்ந்தார். (௪௪)

அரசிய லமைச்சின் மேயு மதிற்சிறு பற்று மின்றிப்
பரசமே வியகம் மையர் திறமெனப் பாக்த வாரி
விரசழல் கொழுந்து கொள்ள மேவுவர் நீருட் டோய்ந்து
முரவவுப் புறைத்த லின்றிப் பயிலுவ வுளமீ னெல்லாம். (௪௫)

மலிதரு புகழான் மிக்க வாதவூ ரடிக ளாரு
மொலிதரு சுத்த முற்று ருற்றன ரிங்கி லத்திற்
பொலிதரு புலவ னைத்தும் போக்குவா மென்று தாழை
கலிதரப் பூத்து நாற்றக் காவதம் வாசம் வீசும். (௪௬)

கரிமுதற் படைக ளோடுங் காணவிந் நிலத்தி யங்கும்
பெரியவ ரிதற்கோர் பாங்கர்ப் பெருந்துறை மருங்கு வந்தார்
தெரியுமவ் வெல்லை வந்து சேர்தலு நெக்கு நெக்குப்
பரிவுள முருகிற் றெண்டைப் படுமெழு கினும்வி ளைந்தே. (௪௭)

பொறுக்கலா காத பாரம் பொறுத்தவ னிறக்கி யாங்குக்
குறுக்கலா காத வாதை யாவையுங் குலைந்து போக
வெறுக்கலா காத வின்ப மேவிய திரண்டு கண்ணு
மறுக்கலா காத வாரி பொழிந்தன வருவி மான. (சஅ)

இந்திய மைந்த னுக்கு மினியன வெய்தா நிற்கச்
சந்திய ரேளுங் கண்ணுந் துடித்தன தவ லத்தே
கந்திய விவற்று லென்னை யாள்பவ னயந்து வைகு
முந்திய விடமீ தென்றே முன்னின ருவப்புக் கொள்வார். (சகூ)

சிவிகையின் றிழிந்தா ரிந்தத் தேமடைந் தார்தஞ் சென்ம
மவிகைசெய் திடுத லாகு மாதலா லமர்வா மென்றார்
குவிகைய ராகிப் பக்க நின்றவர் குறித்த வாறே
கவிகையீர் செய்வ தென்று காரியஞ் செய்ய லுற்றார். (ருo)

கரிபரி யிரதஞ் சூழ நிறுத்தியக் கடையி னுள்ளால்
வரிகழல் வீரர் சூழ்ந்து வைகிட விருக்கை செய்து
தெரிதர வதனுக் குள்ளாற் றிகழ்பட மாடஞ் செய்து
புரியுடை முந்நூன் மார்பர் பொருந்திகன் கமரச் செய்தார். (ருக)

அணிபட மாடத் துள்ளா லமர்பவர் வேத நான்குந்
துணிபொரு ளான்ம நாதர் துணையடி வணங்க வெண்ணிக்
கணிதயில் சனங்க ளோடுங் கைகுவித் தெழுந்து வல்லே
மணிமதிற் கோயிற் புக்கார் வாரழத் தீர்த்தந் தோய்ந்தார். (ருஉ)

நீறுகண் மணிபு னைந்து நிழலுவ வாத லைங்கை
யாறுசெய் தான மோனப் பிள்ளையை யடிவ ணங்கி
யேறவர் தேறு மான்ம நாதர்தந் திருமு னெய்திப்
பேறவர் தளிப்பா ரென்று பேசபு வணங்கி னரால். (ருங)

வெள்ளிய நீறு வாங்கி விளங்கநெற் றியிற்பு னைந்தே
யொள்ளிய கருணைத் தாயாம் யோகநா யகிமுன் சென்று
வள்ளிய வன்பு பொங்க மனநெகிழ்ந் துடையத் தாழ்ந்து
தெள்ளிய கருணை பெற்றுச் சென்றனர் குருந்தஞ் சூழ்ந்தே. (ருச)

பரிசன முன்னும் பின்னும் படர்தர வந்து தாழ்ந்து
தரிசனஞ் செய்து செல்வார் தமையறிந் தாங்க னுள்ள
புரிமறை யுணர்முந் நூற பூசுரர் களுந்தொ டர்ந்தார்
வரிகழ லரச மைச்சர் தமக்கிது வகுக்க லுற்றார். (ருரு)

இத்தல மகாதி மூர்த்தத் தலமிதி னடைந்து போற்றி
முத்தலம் படைப்போன் முன்னா மூவரும் பேறு பெற்றார்
கைத்தல நெல்லி யென்னப் பலந்தருங் கருதி னனு
மெத்தல மிதனுக் கொப்பென் றெடுத்துரை யாட வல்லேம். (ருசு)

என்றுபற் பலவு ரைத்துத் தொடர்தரு மிளைய ரோடு
நன்றுதம் மிருக்கை யெய்தி நகவவர்க் கிருக்கை நல்கிக்
குன்றுத லில்லாச் செம்பொன் கோடிசன் மானஞ் செய்து
பொன்றுத லில்லா வன்பிற் போக்கினர் தனிய மர்ந்தார். (௫௭)

மறையவர் போன பின்பு மஞ்சனஞ் செய்து கொண்டு
பிறைமுடிப் பெருமான் பூசை பேணுபு பிறங்கச் செய்து
நிறைசுவை யமுத முண்டு நிலவவாய் பூசிப் பின்றை
யறையயர் வுயிர்த்த மர்ந்தா ரடியனேன் மனத்த மர்ந்தார். (௫௮)

வழியியங் குதலால் வெப்பம் வாதவூ ரடிகட் காய
தழியகா மறையே மெண்ணி லரும்பழி யாகு மென்று
பழியறத் தன்னு ளோர்ந்தோர் பசும்பொழில் புகுந்து வான்போற்
கொழிகதிர்ச் செல்வ னோடிக் குடகட லழுவம் புக்கான். (௫௯)

தாவர மாகி யுள்ள சைவந்தா பிக்க வல்லார்
மேவர வோரூர் நின்றும் வேறோரூ ரடைந்தா லென்ன
மாவர வொளியோன் றென்பா லொரீஇவட பாலிற் சாரச்
சேரப் போர்வை யென்னச் செக்கர்வா னெழுந்த தன்றே. (௬௦)

ஒருங்குவா தாட வல்லா ரொருவரு மில்லை யென்று
நெருங்குபல் பவுத்த ராய நிறையிலார் வளைந்தாற் போல
மருங்குசூ ரியனு மில்லை மதியிலை யுடுவு மில்லென்
றிருங்கடல் சூழ்வைப் பெங்கு மிறுத்தன வந்த காரம். (௬௧)

இரவுமே விட்ட தந்தோ வென்செய்வா ருலகத் துள்ளார்
கரவுமே விடுமே யென்று கண்ணோட்ட நனிய டைந்து
புரவுசெய் மதிக்கு முன்னம் போயுப கரிப்போ மென்று
தரவுகூர் தாமு ளைத்த தாரகைக் கணங்க ளெல்லாம். (௬௨)

இவைகொலோ நகைமயி ரிக்கு மெண்ணுமை யொன்று செய்த
னவைபடா ததுவோ வென்று நத்தமெண் ணுற்ற காலைச்
செவையுறு வதுபொ ருளாய்ச் செழுமதி யுதயஞ் செய்தான்
குவையுறு வரும லம்ம கொடிசெடி யகத்தோ துங்க. (௬௩)

இன்னண நிகழுங் காலை யிரவுசெய் கடன்கண் முற்றி
நன்னலத் தமுது செய்து நகுபுக ழமைச்ச னார்தா
மின்னகு மமளி மேலான் மேவினா ரான்ம நாத
ருன்னரு மருளா லாங்கோர் சிறுதுயி லுற்றா ரன்றே. (௬௪)

கனவிடை யான்ம நாதர் கதிர்க்குமோ ருருவந் தாங்கி
யனகமார் குருந்த நீழ லமரவும் விடாது சூழ்ந்து
வினவுமா ணாக்கர் பல்லோர் மேவவுந் தாமெ திர்ந்து
மனநெகு மாறு மேன்மேல் வணங்கவுங் கண்டா ரன்றே. (௬௫)

அருந்தவத் தினரிவ் வாறு கண்டழு தழுதி ரங்கப்
பொருந்தமுன் காணுக் காட்சி கண்டனம் பொய்யா காது
திருந்தமற் றவனே யென்னை யாட்கொளுந் திறத்தோ னென்று
வருந்தலற் றிருந்தார் வெய்யோன் வருதலை நோக்கி மாதோ. (சுசு)

சேதீர் வளத்தான் மிக்க திருப்பெருந் துறையை நாடி
வாதவூ ரடிகள் வந்து சார்ந்தமை வகுத்துச் சொற்றும்
போதகா யகனே யான பொங்கொளிக் குரவற் கண்டு
காதலி னுபதே சம்பெற் றிடுதிறங் கரைய லுற்றும். (சுஎ)

திருப்பெருந்துறையடைந்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ககஉ௩.

---

# உ ப தே ச ப் ப ட ல ம்.

---

பாம்பரன் செவ்வாய்ப் பாடல் பத்தத்தை நல்க லோடு
நிரம்புமுத் தியையு நல்கு நிகழ்திரு வாத வூரர்
வரந்தழை செவ்வாய்ப் பாடன் மயக்கறத் தெந்த ஞான்று
முரம்பெறு முத்தி யொன்றே நல்கிடி னுரைப்ப தென்னே. (க)

கதிரவன் வரவு நோக்கிக் கண்டுயி லாம லைய
ரதிர்புன லிருகண் வார வழுதழு திரங்குங் காலை
முதிரருட் குரவன் காட்சி முந்தபு தானுங் காண
வெதிரற வருவான் போலவ் வினன்குணக் குதயஞ் செய்தான். (உ)

சிவப்பிர காசத் தோன்றுஞ் செயிரறு காலத் தேமுன்
னவப்பிர காச மாகி யமைந்தன மாய்ந்தாற் போலத்
தவப்பிர காசஞ் செய்த சந்திர னுடுக்க ளெல்லா
மெவப்பிர காச மெய்திற் றென்றபோய் மாய்ந்த வன்றே. (௩)

கருமல மென்னப் பேசல் காரிருட் டடைவுற் றங்குப்
பொருமிருள் வலையப் பட்டுப் போதற்றே மதுபோய் மான
வொருகதி ருதித்த தூரெுன் றுளதுகொ லினியென் றையர்
திருமுக மலர்ந்த தென்னச் செய்யதா மரைம லர்ந்த. (௪)

ஒன்னிய வாத வூர ருபதேசம் பெறுவா ரின்று
தன்னிய நமக்கென் னுங்கொ லெனப்பர சமய செல்லாந்
துன்னிய வாய்கு வித்த தோற்றம்போ லோடை யெல்லாந்
தென்னிய வாம்ப லாதி செய்பவாய் குவித்த வன்றே. (௫)

இன்னண மிகழுங் காலை யெங்களை யாளு மையர்
சொன்னதங் கரும மாற்ற வெழுந்தொரு துறைக்கட் சென்று
ரன்னவர் வருமு ஞன்ம காதரா சியராய்ப் பல்லோர்
துன்னவொண் குருந்த நீழ லமர்திறஞ் சொல்ல லுற்றும். (௬)

கதிரொரு கோடி யொன்றாய்த் திரண்டெழு காட்சி யென்ன
முதிரொளி மேனி காட்ட மூவுல கத்து மொய்த்த
பிதிர்தலி லழகெ லாமிப் பிறங்குருக் கொண்ட தென்ன
வதிர்மறைக் கப்பா லாரோ ரந்தண வடிவங் கொண்டார். (௭)

வீழ்சிக ழிகைக்கு மேலான் மிலைச்சிய வருத்தி ராக்கத்
தாழ்வட மிலங்க நெற்றி தடம்புய நிறமுற் பாவம்
போழ்திரு நீற்றி னோடக் கண்மணி பொலிய வுந்தி
யாழ்திரு வரையில் வெண்டு சன்னொளி நிலவு வீச. (௮)

துலங்குமில் வுருக்கொண் முன்னந் துதைமுடி மதியொ ழுக்கு
மிலங்கமு தொருவு ரும லியைந்தென முந்நூல் பொற்ப
வலங்கிள ரிருசெ விக்கண் வனைக்குழை பிணங்கா நிற்ப
கலங்கிலர் பொன்செய் வேற்றுக் குழைமரீஇ நயப்பத் தூங்க. (௯)

வந்தலைபங் குருந்த நீழல் யோகவா சனம்வ லத்தா
ணந்துறக் கீழ மைத்தாங் கிடத்தாண்மே னகவ லைத்து
முந்துமுந் தரியம் யோக பட்டத்தின் முயங்கப் பூண்டு
கந்துசெய் கூற்ற முட்கக் கருதவ ஞசை நோக்கி. (௧௦)

தெருளிர வுரவ மாய சிவஞான போதந் தாங்கி
யருளிடக் கரங்க வித்து ஞானமுத் திரைய மைந்த
பொருள்வலக் கைவி ளங்கப் புன்னகை முகத்த ரும்ப
மருளற வீற்றி ருந்தார் மாலயன் றேடிக் காணார். (௧௧)

இவர்நிலை யின்ன தாக வொருவரி லீரைஞ் ஞூற்று
ருவரிலா மனத்தார் முன்சொ லுத்தர கோச மங்கைத்
தவர்சொறே யிருந்தா ரெல்லா மானிட ராகிச் சார்ந்து
கவரிலார் வனைந்து வைகி யாற்றலுங் கழறி யுய்வாம். (௧௨)

வேதநூ லுரைப்பார் சில்லோ ருரைத்தவை விளக்க மிக்குப்
போதமாம் படிப குத்துப் பொருளுரைத் திடுவார் சில்லோ
ராதரம் பயப்பக் கன்ம காண்டத்தை யறைவார் சில்லோர்
மேதக வமைந்த ஞான காண்டமே விரிப்பார் சில்லோர். (௧௩)

உரைத்ததன் சென்னி யாய வுபநிட முரைப்பார் சில்லோர்
வரைத்தவிப் பொதுமை நிற்கச் சிறப்பென வகுக்கப் பட்ட
விரைத்தவா கமங்கண் மேலு மேலுமோ திடுவார் சில்லோ
ரிரைத்தமற் றவற்றி னுள்ளு முண்மையேற் றிசைப்பார் சில்லோர். (௧௪)

பரசம யத்தின் ரூடம் பகுத்தெடுத் துரைப்பார் சில்லோர்
தரமிகு சைவ மொன்றே சான்றதென் றிசைப்பார் சில்லோர்
விரவது வுளுஞ்சித் தாந்த சைவமே விட்ட காலை
யுரனறு மென்பார் சில்லோ ருண்மையென் றுரைப்பார் சில்லோர். (கரு)

சரிவையே முதனு னாலுந் தனித்தனி யோதி யோதி
விரிதரு பொருளு மாய்ந்து மேதகப் புகல்வார் சில்லோர்
தெரிதரு புராண மெல்லாந் தெரிந்தெடுத் திசைப்பார் சில்லோர்
பரிதரு முபபு ராணந் தனித்தனி பகாவார் சில்லோர். (கசு)

உடைவெண்கோ வணமே யூனே யுணவுசைப் பலியே யொண்கண்
படையக விடமே சாந்தாப் பரிப்பது தெய்வ நீறே
மிடைகல னுருத்தி ராக்க மாலையே வேறு வேண்டா
நடையினர் தனித்தி ருக்கை நயந்தவ ரானார் சில்லோர். (கஎ

திருவிய றங்க ளுள்ளாற் றிகழ்ஞான பானு விற்கு
மருவிய வுதய மத்த மயமென்ப தின்மை யாலே
கருவிய விருளு மில்லார் காண்டகு பகலு மில்லா
ரருளிய லென்னுந் தானத் தமர்ந்துவாழ் கின்றார் சில்லோர். (கஅ

ஆடுவர் சிலர்கை கொட்டி யாடுதற் கிசையா வண்ணம்
பாடுவர் சிலருன் மத்தர் பாலர்பை சாசர் போல
நீடுவர் சிலர்கை கூப்பி நேருறத் தொழுவார் சில்லோர்
கூடுவர் சிலர்நி னைந்து குழைநதுளைந் தழுவார் சில்லோர். (கக

இத்தகை யடியா ரானு ரொருவரி லீரைந் தூறு
வித்தகர் விருப்பிற் சூழ நடுமினிர் குருந்தி னீழ
லுத்தம ரமருங் காட்சி யொளிர்தாரா கணங்கள் சூழ
முத்தவெண் மதிய காப்பண் முயங்கிய தோற்றங் காட்டும். (உ0)

வழிபடு நால்வ ருக்கா வடநிழ லமர்ந்த காட்சி
மொழிபடு வாத வூரமா முனிவரற் காகப் பைந்தேன்
கொழிபடு மலர்க்கு ருந்தக் கொழுநிழன் மேவ வோவென்
றொழிபடு திறமில் காட்சி யுறவரு ருவகை பூத்தார். (உக)

அழகிய துறைக்கட் சென்று ராவயிற் கரும முற்றி
மழவிளங் கன்றை நாடி மனம்பதைத் தனையாப் போன்று
குழகர்தங் கோயில் வாயில் குறுகினார் நெடுங்க ணீர்த
வழவகன் மார்பின் மேனி மயிர்ச்சிலிர்ப் பொருங்கு மேவ. (உஉ)

செஞ்சடைக் குருகா கிற்க நேர்பணிந் தெழுந்துள் புக்கார்
வஞ்சமி லான்ம நாதர் சந்நிதி வந்து கூடிக்
கஞ்சமென் கரங்கள் கூப்பிக் கைகுவித் தோ காம்பி கைத்தாய்
செஞ்சாண் டொழுது சூழ்ந்து சென்றனர் திகைத்து நின்றார். (உங)

நின்றன மதித்த லோடு நெடியமா லயன்முன் னானோர்
சென்றுசென் றணுகுந் தோறுஞ் சேயனாய்ச் சிந்திப் போருக்
கன்றவர் சிந்தை யுள்ளே யணியனாய்ச் சுடரோர் மூன்றும்
வென்றுமிக் கொளிவிட் டோங்கு சோதியை விளங்கக் கண்டார். (௨௪)

மறைமுழு மையுமென் கோவம் மாமறைச் சென்னி யென்கோ
நிறைபெருந் தொண்ட ரானோர் நெஞ்சகக் கோயி லென்கோ
நறைசெயிக் குருந்த நீழ னாயனா ருறைவ ரேலோர்
குறைவிலா விதையா தென்று குறித்துளங் கூற கிற்பேம். (௨௫)

பைங்கள்வார் குருந்த நீழ னென்னனாம் பார்த்த தில்லை
கங்கனான் குடைய தேவுங் காணுமா தவமுன் னானோ
செங்கண்மா விடந்துங் காணாத் திருவடி மலர்மண் டோய
வெங்கலை யாள வென்றோ வெழுந்தரு ளியவிக் கென்பார். (௨௬)

வெள்ளிய நீற்றி னோடு வெள்ளிய முறுவ னாயேங்
கொள்ளிய வமைந்த மூல மலம்விளர்த் திடக்கு மைக்குக்
தெள்ளிய மேனித் தேசே சிந்தையுட் டேசு செய்யு
மள்ளிய தொழிதற் கெண்ணி யடியர்தங் குழுவே சாலும். (௨௭)

நெருநலிற் கனவிற் கண்ட வண்ணமே நிரம்ப வின்று
கருதுதற் கரிய காட்சி நனவினுங் கண்டே னீது
பெருகொளி யமர ரேனுங் கனவினும் பெறுவ ரோவென்
றுருகுவர் நெக்கு நெக்குள் ளுடைவரோ வியம்போ னிற்பர். (௨௮)

மறையவ ராகி யிங்கண் வைகுவார் காந்த மொத்தார்
பொறையவ ரருணோர் நின்று பொருத்திடு வாளை யொத்த
இறையுமன் பில்லா நாயே மனமிரும் பொத்த தென்றாற்
குறையெவ னுய்யுங் காலங் குறுகிய தென்று வப்பார். (௨௯)

இவ்வண்ண மெண்ணி மற்று மெண்ணுவ தொன்று மில்லை
செவ்வண்ண விவரே நம்மை யாட்கொள றேற்றக் தீரா
நவ்வண்ண மவ்வண் ணம்போய் நசித்தவென் றோடிச் சென்றே
யவ்வண்ண மாயி னார்த மடிவண்ண மலர்க்கீழ் வீழ்ந்தார். (௩௦)

வீழ்ந்தவ ரெழுந்தி ராமல் வீழ்ந்தவா கிடப்ப நோக்கி
யாழ்ந்தவான் கருணைச் சோதி யெழுகவென் றருள நேர்ந்து
வாழ்ந்தனேன் வாழ்ந்த னேனென் றெழுந்திரு மலர்க்கை கூப்பித்
தாழ்ந்தடி மலரின் பாங்கர்ச் சார்ந்துநைந் துருகி நின்றார்.. (௩௧)

ஆயவப் பொழுதாங் குள்ள வடியவ ரொருங்கு கூடித்
தூயதம் பெருமான் செம்பொற் றிணைப்பதந் தொழுது வாழ்த்தி
நேயமிக் கனைந்து ளாளை யாட்கொள னெறியே யாகு
நாயனே யென்று வேண்ட நகைமுகக் கருணை பூத்தார். (௩௨)

கண்ணிய காலம் வேண்டேங் கனவிய துணர்தல் வேண்டேம்
புண்ணியந் திரண்டு வந்தாற் போன்றமற் றிவர்பொ ருட்டியா
மெண்ணிய தெண்ணி யாங்கே முடித்துமின் றிரவே யென்றார்
தண்ணிய வடியா ரெல்லாந் தாழ்ந்தர முழக்கஞ் செய்தார். (௩௩)

ஐந்தொழி னடாத்துந் தேமா யான்மகா யகர்வி ளங்கு
மைந்தெழிற் சபைக்குப் பின்னர் வண்குருத் தடியொன் றேயவ்
வைந்தொழி லுங்க டந்த வனுக்கிர கத்தே மென்ற
மைந்தடி யவர்பல் லோரு மதித்தன ரலங்க ரிப்பார். (௩௪)

விரிமலர்க் குருந்தஞ் சூழ வெண்பளிங் குள்ளு மப்போ
தரிபளிங் கெடுத்தோர் வேதி யாக்கிமற் றதற்கு மேலாப்
புரிசெய்காற் றூணி றீஇமேற் போகட லனைத்தும் போகட்
டுரியபைம் பொன்ப ரப்பி யொருசபை விளங்கச் செய்தார். (௩௫)

தேசிக னமருந் தான மென்பதுதேற்றி யாங்குத்
தேசிக மமரா நின்ற செம்பட்டு விதானஞ் செய்து
கோசிகப் பிரியர் வைப்பா மிதுவெனல் குறிப்பிப் பார்போற்
கோசிகங் கொய்தெ டுத்துச் சூழவுங் குலவத் தூக்கி. (௩௬)

அரும்புவெண் டாள மாலை யலங்ககாற் புறத்துந் தூக்கி
விரும்புகப் புரசாந் தத்தால் வேதிமே லிடத்தை நீவி
வரும்புதை ஞாயி றென்ன மணிவிளக் கனந்த மேற்றி
யிரும்புளுங் கலாய மற்று மியல்புற வலங்க ரித்தார். (௩௭)

செய்யசீ ரடியார் கூடி யின்னன செய்யும் வேலை
வையமுற் றுய்ய வந்த வாதவூ ரடிகண் முத்தித்
தையலைப் புணருங் காலஞ் சாந்தரே யுறுத லன்றி
வெய்யயா முறல்கூ டாதென் பானில்வெய் யோனொ ழிந்தான். (௩௮)

கதிரவன் மறைத லோடுங் காரிருள் வான வாய
ததிர்தர வுடுக்க ளாங்காங் கரும்பின வவைக்கு காப்பட்
பிதிர்தலில் கலைகள் வீசிப் பிறங்கினன் மதிநீ லப்பட்
டெதிர்வின்முத் துறநட் குஞ்ச மிலையந்தமேற் கட்டி யானும். (௩௯)

பூவினுட் சிறந்தா மேனும் பொழுதுபோ குற்ற காலை
மேவுநர் தமக்கென் னுமென் றரவிந்த மொருங்கு வீந்த
தேவினுட் சிறந்தார் பாதஞ் சிவனுத வியாமே யென்று
வாவியுட் பொலிந்த முத்தி மாண்டசெங் கழுநீ ரெல்லாம். (௪0)

அளிகிள ரந்தி யாதி யத்தயா மத்தின் காறுந்
தளியமை பணிசெய் வாருந் தகச்செய்து கழித்த பின்றைத்
தெளிகிளர் மூன்றும் யாமந் தீர்ந்தது காலாம் யாம
மொளிகெழத் தோன்றிற் றுங்கண் வாதவூ ரருமுற் றூரால். (௪௧)

ணிமலர்க் குருந்தி னீழ லக்கவா சனத்தின் மேலாற்
றனிமுத றென்பா னோக்கி முன்புபோற் சார்ந்தி ருந்து
புனிதமிக் கமைந்து வந்த வாதவூர்ப் புலமை யோனைக்
கனிவுற வெதிரி ருத்திக் கனித்துபக் கிரமஞ் செய்வார். (சஉ)

அருள்கொடு மனுமுன் னுமா றத்துவா வையுஞ்சோ தித்து
வெருள்கொடு பதைத்து நீங்க வவற்றினை வேறு செய்து
தெருள்கொடு பயிலா நிற்குஞ் செவ்விய திருநோக் கத்தான்
மருள்கொடு மறைத்து நின்ற மாமலஞ் சிதைய நோக்கி. (சந)

கரமலர் சென்னி சூட்டி மாயையுங் கருமந் தானும்
விரவுறு வண்ணம் போக்கி விளங்குபொற் கலையான் மூடி
யுரமிகு சூக்க பஞ்சாக் கரவுப தேசஞ் செய்து
வரமிகு முயிர்தா மாகும் வண்ணம்பா வனையி யற்றி. (சச)

உளத்தொடு முயிரை வவ்வி யுற்றதோர் பிரம காடி
வளப்பெரு நெறியே போய்த்து வாதசாந் தத்தின் மேலா
லளப்பரு மிருப குப்பற் றுனந்தத் துய்க்க வுய்த்து
கொளப்படு மொருபற் றின்றிக் கோதிலா வொருதா மாக்கி. (சரு)

உடல்பொரு ளாவி மூன்று மொழுக்குநீ ரொடுக வர்ந்து
விடலரும் விருப்பிற் பாத பூசனை விளைத்தி யென்ன
மடலவிழ் கழுநீர் சாந்த மான்மத மாதி யாய
கெடலில்பல் பொருளுங் கொண்டு கேழ்கிளர் தரப்பூ சித்து. (சசு)

மறைபுகன் முகம னெல்லா மரபுளி முடித்த பின்னர்
நிறையருட் குரவர் தாட்கீழ் நேர்பணிந் தெழுவார் சென்னிக்
குறைவிறம் பாதஞ் சூட்டிக் குறிக்கொளு நுதலின் மீது
கறையில்வெண் ணீறு சாத்திக் கழுநீர்மா லையுந்த ரித்தார். (சஎ)

ஆரிய னடிப்பூ மாலை யணிமுடி புனையப் பெற்ற
சீரிய வாத வூரர் செவ்விய வான்ம காத
ரேரியற் கருணை யோகாம் பிகையிவர் பதம்ப ணிந்து
துரியம் பரம ஞான மூர்த்தியா யமர்ந்தா ரன்றே. (சஅ)

புறவிருண் மாறு மாறு போதரு மென்னைப் போல
மறவிரு ளாய தீய வகவிருண் மாறு மாறே
யறவுரு விவர்வாய் நின்றோ ரருங்கதி ருதிக்கு மென்று
திறமுறத் தெரிக்க வந்தான் போற்றின கரனெ ழுந்தான். (சகூ)

தினகர னுதயங் கண்டு திருவருள் பெற்ற வையர்
மனநெக வெழுந்து போந்தக் கிளிப்புனன் மருவி யாடி
முனைகர்கொள் ளாத நீறு கண்மணி முழங்கத் தாங்கி
யனகவா ரியன்பொற் றாட்கீழ்ப் பணிந்தெழுந் தருகு நின்றார். (ருo)

வேறு.

நின்றமையும் வாதவூர் முனிவரலா யருணோக்கா னிரம்ப நோக்கி
நன்றமைய நேரிருத்திச் சிவஞான போதமெனு நன்னூல் கைக்கொண்
டின்றமைய வுலகோப காரமாக் கைக்கொண்மி னென்று நல்கி
யன்றமைய வதனகத்துப் பொருளனைத்துந் தொகுத்தருளி னறைவ தானார். (ருக)

புறமகமா மதத்துழன்றும் புகல்வருணச் சிரமநிலை போற்றி நின்று
மறமிருதி மறைபகரு மாற்றுவழு வாதமக மனைத்துஞ் செய்து
முறவுயரும் வேதாந்தப் பொருடேர்ந்து முற்றியபி னுணர்வான் மிக்கோர்
திறமருவு பெருஞ்சைவ நெறித்தீக்கைக் கிழமையுறு நேய ராவார். (ருஉ)

புரிதருமத் தீக்கைபல திறனுகு நோக்கூறு புகற லெண்ணல்
விரிதருநூ லியோகமவுத் திரியெனவே ழிவற்றீற்று விளம்புந் தீக்கை
பரிதருமா றமைகிரியை ஞானமொரோ வொன்றேமுப் பால தாகு
முரிதருமா றமைசமய விசேடநிரு வாணமென வுளுற்ற லானே. (ருங)

எண்ணியவித் தீக்கையடைந் தவர்கம்மைச் சேர்தவமீ ரிரண்டே யாகு
மண்ணியவண் சரியையெனக் கிரியையென யோகமென வமல மாக
நண்ணியமெய்ஞ் ஞானமென வவைகொடுத்த னம்முலக நண்ண லாதிக்
கண்ணியநம் மொடுகலத்த லீறாக நாற்றிறனுங் கலந்த நான்குன். (ருச)

அறிவருநா மமர்கோயி லலகிடுதன் மெழுகன்மல ரடவி மேவிச்
செறிமலர்குற் றெண்ணிருடை செய்தணிதல் விளக்கமிகத் தீப மேற்றன்
முறிவினம தடியவரா மெனக்கருதிப் பணிபுரிதன் முதலாந் தாத
நெறியமையுஞ் சரியைவினை யாற்றுவா ரெம்முலக நிலவி வாழ்வார். (ருரு)

தூயமக நெறிக்காகும் விசேடமெய்திப் பூசைசெயச் சொற்ற கொண்டே
யாயதிற லாதார சத்திமுதற் சத்தியெனு மம்பு யத்து
மாயமிலா தனமுதலாப் பாவித்தா வாகித்தா வரண மாதி
யேயவியற் றுபுதீயோம் பிடுகிரியைப் புத்திரரெம் மருகி ருப்பார். (ருசு)

இயமாதி யெட்டுறுப்பி னியல்படைந்தே யிருவளியி னியக்க மோப்பி
வயமாரு நடோடி யுறப்பயின்று றாதார மரீஇய வோர்த்து
நயமாக மதிவளைப்பி னெய்தியமு தருந்தியொளிர் நம்மோ டொன்றும்
வியமாய சகமார்க்க யோகுழப்போ ரெம்முருவ மேவி வாழ்வார். (ருஎ)

பழியிலவை முற்றியருள் பதிந்துவினை யொப்பெய்தும் பருவத் தியாமே
கழிமகிழ்விற் றேற்றமுறீஇ நிருவாணத் தத்துவாக் கழலப் போக்கி
யழிவிலரு ளுறுக்குமெழுத் தைந்துநவின் றைம்பாச மகற்றி யின்ப
மொழிவரிதா யுய்த்திடுதல் சன்மார்க்க மென்பதஃ துணைக்க லுற்றும். (ருஅ)

உருவருவங் குறிகுணங்கள் கட்டுவீ டொரீஇயனைத்து முயிர்க்கு நல்கி
மருவியுடன் றொழிற்படுத்துப் புலன்கொளுவி வீடுதவு மாட்சித் தாகி
நிருமலமா யழிவறவின் றோங்கொளியாய் நனிவிளங்கி நிகழும் வேதத்
தொருமுதலாம் பதியொன்றே யன்னதுநா மேவுயிரி னுண்மை கூறில். (ருகூ)

அரிபனிக்கிற் பற்றியவை தாமாய்ச்சத் தசத்தும்பாத் தறிசத் தாகித்
தெரிவரிப்ப வருகிறைவாய் மூவகையென் னிலவாய்நித் தியமாய் நாளும்
பரிபிருளு மொளியுமலாக் கண்ணியல்பா யுறசம்மாற் பகருஞ் சத்தி
விரியவமைத் தின்பமொன்றே யுறவனசிற் றுணர்வினவாம் வெம்பா சந்தான்.(சுo)

ஒன்றாயெண் ணருமாற்ற லுடைத்தாய்நித் தியமாய்ச்செம் புறமா சொப்பாய்த்
தொன்றாய்கம் மருளிரு ளீங்குவதிக் கருமலத்தின் றொடர்ச்சி நீங்க
நன்றாய தனுவாதி தருமாயை யுணவாக நவிலுங் கன்ம
மென்றாய மூன்றொடுமோ வேயநிகழ் திரோதாயி யிரண்டுங் கூட்ட. (சுக)

ஆயமல மைந்தாகு மவற்றினொடு பழவினையு மாண வத்தின்
மேயவொரு முதலுநமக் கில்லையான் மாவிற்கே விரியு மாயை
யேயகன்ம நமதருளல் லாமலா விக்கென்று மியங்கா வாகுந்
தாயமல பந்தவுயிர்க் கிப்பந்தம் பொருத்தலப்பந் தந்தீர்த் தற்கே. (சுஉ)

மாசகழித் திடப்புடைவைக் குவருட்டு நிறம்போலும் வைய மாதி
வீசபடைப் பளிப்பழிப்பு மறைப்பதுநீக் குதலாய வினையோ ரைந்தந்
தேசமலர் மிசையுறைவான் முதலியவை வலாக்கொடுகொஞ் செயவு மோர்நா
மேசவிகா ரம்படையே மவிகார வியல்பினுக்கோ சீறின் றாமால். (சுங)

விடமரவை யெவன்செய்யுந் தீயினைச்சு டெவன்செயுமிவ் விதமே போல
வடருகெடு மாயையெம துடைமையா யினுமயக்க மாற்றா தெம்மைத்
தொடர்தருமிக் கிரஞாலம் புரிபவனை மயக்குவதோ தொடங்கான் மாயை
யிடர்செய்மல மயக்காதேன் மாயையுங்கண் மழுமயக்கா திரிந்து போகும். (சுச)

தெளிசிவமா கியகாமு கமைநீங்க வருளாஞ்சத் தியுமான் மாவுங்
களிதிரோ தாயியும்பிற் படுமாமுற் படுமலத்தின் கருமை தேய
வளிகெழுநஞ் சத்திகலப் புறுங்கலப்பப் புண்ணியமே லாகு மாக
வுளிமலபா கமும்பிறக்குஞ் சத்திபதி தரும்பின்வினை யொப்பு மேவும். (சுரு)

அன்னதுசார் தரமலமென் றறைந்ததிரோ தாயியரு ளாயே நிற்கு
மன்னவத னுன்மூல மலந்தொலைவ தல்லாமன் மற்றொன் றுண்டோ
சொன்னவெம திச்சைமுதன் மூன்றுமுயி ரிச்சைமுதற் றொக்க மூன்றும்
பன்னவினைக் கம்புரிந்து வியாப்பியமாக் குபுமேலாய்ப் படரு மன்றே. (சுசு)

அருளினெமை யுந்தனையு மறிந்தவுயிர் கதிரொடுகண் ணணைந்தாற் போலத்
தெருளினெம துள்ளடங்கி யானந்த மொன்றுமே திளையா நிற்கு
மருளில்யான் முதலென்ற லருளின்யான் முதலென்றன் மாறி மாறாப்
பொருளினருண் முதலென்ற லதிலழுந்த றவிர்த்தெம்மைப் புணர்தன் முத்தி.(சுஎ)

முன்னமே யழிந்ததுசஞ் சிதமேற வினையுளதேன் முற்றா தாகுஞ்
சொன்னவா றருளினான் வாதனைமெய் யியங்களவுந் தோன்றா நிற்கு
மன்னதுமஞ் செழுத்தைவிதிப் படிகணிக்கப் போகமையா லயமுன் மூன்றிற்
பின்னமற வழிபடுதல் வேன்முத்தி பாமுத்திப் பேறு மீண்டே. (சுஅ)

என்றுதிரு வாய்மலர்ந்து தொகுத்துரைத்த வனைத்தும்விரித் தியம்பிற் றுக
கன்றுபலித் திடுகவென நகைமுகத்தி னருளூட்ட நல்க லோடும்
வென்றுமிளிர் திருவாத வூர்முனிவர் மனங்களைந்து மெய்பொ டிப்பத்
துன்றுமல ரடியின்முடி தோய்தரவீழ்ந் தெழுந்துநின்று துதிப்ப தானார். (சுக)

### வே று.

தொழுபவ ரொருபாற் றுதிப்பவ ரொருபாற் றுதித்தின ரெக்குநெக் குருகி
யழுபவ ரொருபா லிவரெலா நிற்க வடியனேன் றனைப்பிடித் தாண்டாய்
பழுதினின் கருணைத் திறத்தையென் புகல்கோ பாண்டிகா டியற்றிய தவத்தாற்
கொழுமலர்ச் சோலைத் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. (எ0)

உள்ளுதோ றிழிவை யுள்ளுபு பவஞ்சத் தழிதரூஉ வொதுங்கிய வெனக்கு
மன்னுதோ றன்பூ றுக்கையொன் றருளி யாணடுகொண் டனையிது தகுமே
விள்ளுதோ றப்பா லாய்ப்பொலிந் தோங்கும் விமலனே விமலமார் சிந்தை
கொள்ளுதோ றுலக்குந் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. (எக)

வழிவழி யடிமை யுவந்திலேன் மலடு மலர்க்கரங் கன்றிடக் கறந்து
கழிதுய ரடைந்து கிடக்கின்ற வெனையுங் கண்டுகொண் டாண்டதெத் திறமோ
மொழிதடு மாற நெஞ்சநெக் குருக முனிவறத் தொடர்பவர் முதலே
கொழிமலர்ப் பொழில்சூழ் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. ()

எலவே யொருப்பட் டெற்றுறக்கும் பாழுக் கிறைத்தொரு பயனுமில் லேனைச்
சீலமா முனிவர் திருக்குழாத் தோடுஞ் சேர்த்துநீ யாண்டது தகுமே
காலகா லாகங் காளவே தாள கணம்புடை சூழ்தர நடிப்பாய்
கோலமார் செல்வத் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. (எங)

கனிவிள விருக்கக் காய்கவர்ந் துண்ட கள்வனு மென்னையும் பற்றி
முனிவரு முனிவர் கூட்டத்து ளொருசார் முனிவறக் கூடுமா றளித்தாய்
புனிதமென் கனியே புத்தியூ றமுதே பொங்குமா னந்தவான் பெருக்கே
குனிகொடி மாடத் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. (எச)

சுவைபடு மவனித் தமியுளுங் கொள்ளுந் தொழுத்தையேன் றனைவலிந் திழுத்து
நலவயில ளைந்த வமுதமூட் டினையா னவைகளினைத் திடுமெடி யேற்குங்
சுவையழ லடைந்த மெழுகென வுருகக் கற்றகற் றவருளத் துணையே
குவைமலர்ப் பொழில்சூழ் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. ()

திருநெடு மாலன் றொருகரு மாவாய்த் திண்புவி பாதல மிடப்புற்
றொருவற முயன்றுங் காணரு மலர்த்தா ளுத்தையேன் றலைக்கெளி தாமோ
கருமணி விளக்கே யானந்தப் பிழம்பே யளிகனிந் தெழுசுவைக் கனியே
குருமணி மாடத் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. (எசு)

அண்டரு முனிவர் கணங்களு மற்றை யவர்களு நறுமுறப் படைய
வண்டரு மலர்த்தா ளென்கருக் தலைக்கு மணிமுடி யாயதற் புதமே
பண்டரு மொழியாள் பங்கவோ மேலாம் பரமவோ பாவியெஞ் ஞான்றுங்
கொண்டலின் முழவார் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. ()

என்னைநா னறியே னையகோ பகலோ டிரவெனப் படுவது மறியேன்
முன்னைநான் செய்த தவமெவ னென்னை முழுமதோன் மத்தனுக் கினையா
லன்னையே யப்பா வொப்பிலா மணியே யடியவர்க் கெய்ப்பினில் வைப்பே
கொன்னைமா மதில்சூழ் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. (௭௮)

செம்மையொன் றில்லாச் சிறியனேன் கவலை தீர்தர யோகமா யகியா
மம்மையோ டெழுந்து வந்தினி தாண்டா யான்மகா யகவதற் கடியே
னிம்மையே செயுங்கை மாறெவன் மறுமை யேனுமொன் றில்லையென் செய்கோ
கொம்மைமா மதில்சூழ் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. (௭௯)

இன்னணந் துதிக்கும் வாதவூர் முனிவ ரிருந்துதி திருச்செவி யேற்று
முன்னவர் மலர்ப்பைங் குருந்தடி யமர்ந்தார் முனிவிலாப் பேரருள் பொங்க
மன்னநின் மணியே வார்த்தையாய்த் திரண்டு வருமொரு காரணக் குறியா
லன்னமா ணிக்க வாசக னெனும்பே ராகவின் றுதியென் றறைந்தார். (௮0)

அதுசெவி யேற்று நெஞ்சநெக் குருகி யடிக்கடி தாண்மிசைப் பணிந்தே
யிதுபெறத் தரத்த னோவடி காயே னெரிமணிப் பொலன்றவி சொன்று
கதுமென ஞமலிக் கிடுவது மியல்போ கடையன்பா லெக்குணங் கண்டாய்
மதுமலர்க் கழுநீர் மாலிகைத் தடந்தோள் வள்ளலே யெனப்பணிந் தெழுந்தார். ()

அடியனேன் கொணர்ந்த செம்பொருண் முழுது மையநின் னாலயத் தினுக்கு
முடிவினின் னிடப்பால் வீற்றிருந் தருள்வான் முனிவிலா தமர்திருத் தளிக்கும்
கடிவினின் னடியார் குழாத்திற்கு மாகக் கைக்கொளல் வேண்டுமென் றிரப்ப
நெடியமா லின்னு முணர்தரா ரதற்கு நேர்ந்தன ராயருள் செய்தார். (௮௨)

வேண்டுவார் வேண்டு வதனையே நல்கும் விமலனார் திருவருள் பெற்றுத்
தாண்டுவாம் புரவி கொளக்கொடு வந்த சாற்றரும் பெரும்பொரு ளெல்லா
மீண்டுமா தளிநுண் பணிசெய வல்லா ரியாவருங் கொள்கவென் றிறைத்துப்
பாண்டுநீற் றொளியெம் மண்ணலார் கோயிற் பணிசெயு முயற்சிய ரானார். (௮௩)

உருக்கிவார்த் தன்ன தூணமு நெடிதா யோடுபு திகழ்கொடுங் கையுந்
தருக்கிமே லெழல்போற் றலையெடுப் பமைந்த தம்பவிம் பங்களு மழகு
பெருக்கியோர் படித்தா யிடந்தொறு மமைந்து பிறங்குமுத் தரங்களு மாக
கருக்கிவார் பலகை பரப்பிய தென்னக் கவினுறப் பாவுபல் கல்லும். (௮௪)

இலவமுத லமைத்துக் குருந்தநன் னீழ லிருந்தபொற் சபைமுதற் புதுக்கிக்
குலவமலர்க் குழலியோ காம்பிகை யமருங் கோயிலும் புதுக்கிமற் றிவைசூழ்
நலைவின்மண் டபமு நகுதிரு மதிலு நக்கபொன் செய்தகோ புரமுஞ்
செலவுறச் செய்து முடித்தன ரழற்போர்த் தீர்த்தத்தின் படிகளு மமைத்தார். ()

புனிதராய்த் தொண்டு புரியுமுந் நூறு பூசுரர்க் கிருக்கையுஞ் சைவ
முனிவரா ருறையத் தக்கமா மடமு முனிவிலா லயப்பணிக் குரிய
வினியரா யுள்ள மற்றைய ரமரு மிருக்கையு மினிதுற வமைத்துப்
பனிமலர்ப் பொழிலு நந்தன வனமும் பலவிலை நிலங்களு மாக்கி. (௮௬)

எஞ்சிய பொருளை யாலயத் துள்ளா விலைத்திடு மொருகரு வூலந்
துஞ்சிய விருத்தி யான்மரா யகர்தந் தொக்கலைப் பாவிஃ தெவரு
மஞ்சிய காவல் வீரபத் திரரே யன்னதுங் காக்கவென் றோதி
விஞ்சிய புகழெழும் வாதவூ ரடிகள் வேறிடத் தமர்ந்துயோ கிருந்தார். (அஎ)

ஆயவக் காலைப் பாண்டியன் றமரா யடைந்தவர் யாவருங் கூடி
மேயமற் றிவரென் செய்தன ரந்தோ வேந்தர்தம் பொருள்விட மன்றோ
ஆயகற் புரவி கொண்டதெங் கெனிலென் சொல்லுவார் மிகத்தெரி யிவரே
பாயவித் தகாத தொழிறலை நின்றாற் பரிப்பவ ரார்மனு நீதி. (அஅ)

என்றலைந் துருகிச் சென்றவ ரடிதாழ்ந் தியாவரு மெழுந்துகை குவித்து
நன்றுசெய் தில்லீ ரையரே யரசர் தருபொரு ணமனிலுங் கொடிதால்
வென்றுமேம் படுபல் குதிரைகொள் ளுவதெவ் விதமெனப் பன்முறை விளம்ப
வொன்றுமாங் குணரா திருந்தன ரனையா ருரைப்பதிற் பயனிலை யென்று. (அகூ)

மீண்டுதம் மிருக்கை புக்கன ரின்றே வேந்தனுக் கறிவியோ மென்னி
லீண்டுமிக் குற்ற நம்மதே யாமென் றெண்ணுபு வாதவூ ரமைச்சர்
தாண்டுவெம் பரிமாக் கொளக்கொடு வந்த தனமெலாம் வேறறப் போக்கித்
தூண்டுமோ னத்தி னிருப்பரென் றெழுதித் தூதுபோக் கினரா சனுக்கே. (கூ0)

சென்றது தவர்வெங் காலினுங் கடிது சென்றுபாண் டியனவை புகுந்து
நன்றவாய் வணங்கி முடங்கன்முன் வைப்ப நகைமுடி வேந்தனு மதனை
யொன்றவோர்க் குரையென் றொருவனை யேவ வவனிரு கைகுவித் தேந்தி
வென்றசீ ரமைச்சர் தஞ்செய லினைத்தும் விரித்துரை செய்தனன் மாதோ. (கூக)

பழிதப வரசர் காரிய நடாத்தும் பண்புசால் வாதவூ ரமைச்சர்
செழிபொருண் முழுதும் வேறுவே றாகச் செலவுசெய் தாரெனல் கேட்டுக்
கழிசினம் பெருகக் கண்சிவப் பேறக் கடுமொழி யுடையவ னாகி
யொழிவரு மற்றை யமைச்சரை நோக்கி யுறத்துடி துடித்திவை பகர்வான். (கூஉ)

வாதவூ ரமைச்சர் செய்கையிற் றென்னின் மற்றினி யாரைநம் பிடலா
மேதமே யொருவர் தம்மைநம் பிடுகை யெனவவர் நாணுமுற் றகன்றார்
போதவங் குள்ள ரியாவரும் விலகிப் போயின ரச்சமேற் கொண்டே
காதர முறமற் றொருவனின் றுனைக் கடிதொரு முடங்கறீட் டென்றான். (கூகூ)

வழுதியர் பெருமா னெழுதிய முடங்கல் வாதவூ ரமைச்சர்கண் காண்க
முழுநிதிக் குவையோ டெய்தினீ ரதற்கு மொய்பரி கொண்டுவீ ரெனிலச்
செழுவயப் பரியோ டெய்தலா மின்றேற் செம்பொனோ டெய்தலா மொன்று
நழுவிலீ ரெனின்மேல் வருவது நமக்குச் சாற்றவும் வேண்டிடுங் கொல்லோ. ()

என்றெடுத் தெழுதிக் கயலிலச் சினையு மிட்டொரு தூதுகைக் கொடுத்துச்
சென்றுநீ வாத வூரர்பாற் சேர்த்துத் திரும்புகென் றுரைத்தன னுரைப்ப
வன்றவன் றொழுது வாங்குபு காலே யாமிவன் காலென விரைந்து
மன்றலங் குருந்தப் பெருந்துறை யடைந்தான் வாதவூ ரமைச்சரைக் கண்டான். ()

திருமுகங் கொடுத்தான் வாக்கிமுற் றுணர்ந்த சிவானந்தச் செல்வராங் கெழுந்து
குருமணி முன்போய்ப் பணிந்துகை தலைமேற் குவித்தெதிர் நின்றனை யாண்ட
வொருபரஞ் சுடரே பாண்டிய னேலை யுய்த்தனன் கடுஞ்சினத் தினனாய்
வருமிதற் கடியே னென்செய்கோ வென்ன வள்ளலார் வாய்மலர்ந் தருள்வார்.(௧௯)

ஒன்றுமஞ் சற்க வாவணி மூலத் துறுபரி யனைத்துங்கொண் டணைவா
னன்றவை காண வழுதியர் பெருமா னனியுள மகிழ்தரு மின்னும்
வென்றமை பரிகட் கிலாயமும் பிறவும் விசாலமா யமைத்திடல் வேண்டு
மென்றுரைத் திடுமுற் சிறப்பொடு மதுரைக் கேகுமின் னேயென வுரைத்தார். ()

உரைத்தசொற் றலைமேற் கொடுபணிந் தைய ரொய்யென வான்மகா யகனை
விரைத்தபூங் குழல்யோ காம்பிகைத் தாயை மேவுபு தாழ்ந்துதாழ்ந் தெழுந்து
புரைத்தபொன் மாட மாளிகை சூழ்ந்து புக்கியை யாவயி னிறைவி
யிரைத்தபல் லியமு மியம்பத்தன் படைதங் கியவிடத் தடைந்தனர் மன்னோ. ()

பரிகரி முதலாம் படைகடங் கிடத்துப் படர்ந்தகம் வாதவூ ரையர்
தெரிதர வனைத்துந் திருக்கணு னோக்கிச் சேனைகா வலரையு நோக்கி
விரிபுகழ் மதுரை மீனவன் முன்ன மேவுவா மியாமின்னே நீருந்
தெரிதர விரைவி னெழுகென வெடுத்துச் செப்பினர் போக்கொருப் பட்டார். ()

பொருதொழிற் பகைஞ ருடற்றுளைத் தெழுவேற் புரூரவா மன்னவ ரேறே
கருமலச் செருக்கு வாதவூ ரையர் காமரு பெருந்துறை நகர்சார்ந்
தொருவிசல் லுபதே சம்பெறு திறத்தை யுரைத்தன மதுரையை யடைந்து
வெருவரும் பரிகள் செலுத்திமீ னவன்பால் விடைபெற்ற திறனுமே லுரைப்பாம்.

உபதேசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௨௩.

---

# மதுரையையடைந்து விடைபெற்றபடலம்.

துளிவளர் கண்ணீர் மல்கத் தொழுதகை தலைமே லேற
வளிவளர் குருந்த நீழ லடைந்துப தேசம் பெற்றே
யொளிவளர் மூர்த்தி யாகி யுரைக்குமுப் பாழும் போக்கித்
தெளிவளர் முழுப்பாழ் பெற்ற செல்வரைச் சிந்தித் துய்வாம். (௧)

குடைகொடிக் காடு மல்கக் குஞ்சர முழக்கம் பொங்க
வடைபரி மாவுந் தேரு மார்த்தன முன்பின் போத
விடைவெளி யின்றி வீர ரெங்கணு நெருங்கிச் செல்ல
வுடையவ ரன்ப ரம்பொற் சிவிகையூர்ந் தாடு சென்றார். (௨)

திரையம ருலகுங் கொற்றி செறிந்தம ருலகுங் கான
நிரையம ருலகும் வானத் தடவிட நீண்டு போய
வரையம ருலகு மோடை மடக்குளம் பழன மாதிப்
புரையம ருலகு நீத்துப் பொருக்கென மதுரை சார்ந்தார். (கூ)

செங்கன கத்தாற் செய்த திருப்பெருங் கோயி லுட்புக்
கெங்கணு மொளிப ரப்பு மிந்திர விமானத் துள்ளா
லங்கயற் கண்ணி யோடு மமர்ந்தவர் பாதம் போற்றி
மங்கள வழுதி கோயி லடைந்தனர் வாத வூரர். (சு)

மீனவர் பிரானை முன்னங் காணுமா கண்டார் மேன்மே
லானபே ருவப்ப னாகி யளவளா யிருக்கை நல்கி
மானமா வருமோ பொன்னே வந்ததோ வெனவி னவத்
தேனவா மொழிய மைச்ச ரின்னன செப்ப லுற்றார். (ரு)

கொண்டுபோம் பொன்னெ லாமாக் கொடுவரு வார்க்கே யீந்தேன்
கண்டபா ரிரவி சிங்கங் கண்டுசென் மதிமூ லத்தில்
வண்டசா ராரா யீண்டு வரும்பரி யனைத்தும் வேறு
வண்டுநீ ரோடை மற்று மந்திர மமைக்க வென்றார். (சு)

என்றலு முண்மை யன்றி யியம்பிடார் வேறொன் றென்று
கன்றலின் மனத்த னாகிக் கவுரிய னுவகை பூத்தான்
முன்றமர் வரைந்த தேற்ற முறைக்குள காணம் பூண்டா
னன்றமை மெய்ம்மை கூறி னியாவரே நயக்கி லாதார். (எ)

ஆவணி மூல நாளு மணித்தாக வணைய நிற்கு
மாவணி காண்பா மென்னு மருப்பெரு மகிழ்ச்சி பூத்துக்
கோவணி செம்பொ னுடைக் குருமணிப் பதக்க நல்கிச்
சேவணி கொடியா ரன்பர் தமைச்செலச் செலுத்தி னானல். (அ)

கொழுதிவண் டுளர்ந்து பைந்தேன் கூட்டுணு மலங்கற் றிண்டோள்
வழுதிபால் வரிசை பெற்று மாமணிச் சிவிகை யேறி
யெழுதியா வரும்ப டிக்கு மிரும்புகழ் வாத வூரர்
பழுதிறம் மிருக்கை புக்கார் பரவுமெம் முளத்தும் புக்கார். (கூ)

இசைபடு மூல முன்னா ளென்னுமிக் திரனுண் மேவ
வசைபடு மொருவன் றென்னர் மன்னவன் முன்ன ரெய்திக்
குசைபடு பரிக ளானை யெய்துதல் கூடுங் கொல்லோ
நசைபடு மொழியே சொன்னார் நயம்பட வமைச்ச ரென்றான். (சo)

அன்னவ னச்சொற் கூற வரிமருத் தனனுந் தென்னர்
மன்னவன் மனத்தி ரித்து வன்கணார் சிலரைக் கூவிச்
சொன்னசொற் பிழைத்த வாத வூரரைத் தொடர்ந்து பற்றிப்
பன்னரும் பாடி காவற் படுத்திப்பொன் வாங்கு மென்றான். (சக)

வரைசெய்தோள் வழுதி யிவ்வா றுரைத்தலும் வன்க ணாள
ருரைசெய்கம் மடிக டம்மை யுரைத்தவப் படியே செய்தார்
திரைசெய்நீர் ஞாலங் காணத் தேசிக ராகி யாண்டார்
புரைசெய்கன் மலர்ப்பொற் பாதம் போற்றினர் துதிக்க லுற்றார். (கஉ)

வேறு.

பஞ்சாதி மறைபகர்ந்த பரமவோ பைங்குலைசெற்
செஞ்சாலி விளைபழனப் பெருந்துறைமா தேவவோ
நஞ்சாதி யுண்டயன்மா லனைப்புரந்த நம்பவோ
வஞ்சாதி யென்றளித்தாய் கைவிடுத லழகேயோ. (கங)

விடையேனை முகிலூரும் பெருந்துறைவாழ் விமலவோ
வடையேனை யடைக்கலமென் றையையோ பெரும்பொய்யே
யுடையேனைக் கிறிசற்று முடையேனை காயான
கடையேனை யாட்கொண்டுன் கைவிடுத லழகேயோ. (கச)

எண்ணுவோ வரும்வளஞ்சால் பெருந்துறைவா ழீசவோ
வண்ணவோ வரியயனு மணுகரிய வொருபாகம்
பெண்ணுவோ கழைகுழைத்தான் பிறங்குடல நீறுக்குங்
கண்ணுவோ வாட்கொண்டுங் கைவிடுத லழகேயோ. (கரு)

மைவிடா விழியுமையாள் வாமத்தாய் வளச்சாலி
செய்விடாப் பெருவளஞ்சால் பெருந்துறைவாழ் செல்வத்தாய்
பைவிடாப் பூணணிவாய் பற்றின்றிக் கலந்தாரைக்
கைவிடா யடியேனைக் கைவிடுத லழகேயோ. (கசு)

திருவடிசூட் டிடப்பெற்றுஞ் செம்மையிலாத் தென்றிசைக்கோன்
பொருவுவே றயினேன் புகல்வதெவன் பெருந்துறையா
யருவருக்கும் பிரபஞ்சத் தலையாமே யடைந்தார்தங்
கருவறுப்பாய் நாயேனைக் கைவிடுத லழகேயோ. (கஎ)

வேறு.

என்றரைக் திரங்கு மோதை யிருசெவி யேற லோடு
மன்றவைங் குருந்த நீழ லாண்டவர் தரியா ராகிக்
கன்றிரங் கோதை கேட்ட கறவைபோற் பதைப தைத்துத்
துன்றுதன் கணத்தி னோரைப் பார்த்திது சொல்ல லுற்றார். (கஅ)

மூலகா ளின்று மேய தன்பரை முடிக்கோ மாறன்
சாலவுண் முனியா முன்னந் தாம்பரி செலுத்தல் வேண்டு
ஞாலமீ துள்ள வாய நரியெலா மொருங்கு சேர்த்துக்
கோலவாங் குதிரை யாக்கிக் கொண்டுபின் னீவிர் யாரும். (கசு)

வாம்பரி மன்ன ராகி மற்றுமப் பரிமேற் கொண்டே
தேம்புத லின்றிச் சென்மின் செழுமறைப் பரிமேற் கொண்டு
தோம்படா காமு காப்பட் டோன்றுவோ மென்ன லோடு
மாம்பரி சென்றெல் லோரு மவ்வண்ண மமைந்தா ரன்றே. (உ0)

நரிகளைப் பரிக ளாக்கி நாடுபல் கணத்தி னோரும்
பரியுகைத் திடுவா ராகிப் படர்ந்தமை பார்த்தெம் மையர்
தெரிமறைப் புரவி மேலாற் றிகழ்தலைச் சாத்து முன்னா
விரிதரப் புனைந்து தாமோர் வீரராய் நடுவட் போவார். (உக)

கூற்றுருக் கொண்டா லன்ன கொடுமைய கொடிய தாய
காற்றுருக் கொண்டா லன்ன கடுப்பின வடவைத் தீயே
வேற்றுருக் கொண்டா லன்ன விழியின வசனி யாய
வேற்றுருக் கொண்டா லன்ன முழக்கின விவுளி யெல்லாம். (உஉ)

ஒள்ளிய கரிய பல்ல வுறுசிவப் புற்ற பல்ல
தெள்ளிய பொன்னி றத்திற் சிவணிமேற் றூய பல்ல
வெள்ளிய நிறத்த பல்ல மிச்சிரம் வாய்ந்த பல்ல
புள்ளிய பஞ்ச வன்னம் பொலிதர வடைத்த பல்ல. (உங)

வல்லிய முட்கப் பாய்வ மல்லர்நெஞ் சுட்கப் பாய்வ
சொல்லிய முயல்க ளெல்லாந் தோற்றன வுட்கப் பாய்வ
கொல்லிய வெழுந்த கூற்றிற் கொழுவிடை யுட்கப் பாய்வ
புல்லிய மற்று முள்ள கதியவின் போகப் பாய்வ. (உச)

வெய்யவாள் கொடுமு கத்து வெட்டினு மெதிர்த்துச் செல்வ
வையமே லுள்ள கோட்டை மதிலெலாந் தாண்டிச் செல்வ
மெய்யவாய்த் துறந்தோ ருள்ளின் விரைந்தொரு நெறியே செல்வ
செய்யபோர்க் களத்து மாற்றார் திருமுடி யிடறிச் செல்வ. (உரு)

நிரையெழு குதிரைக் கூட்ட நிமிர்ந்தடி வைக்குந் தோறும்
வரைபரல் பட்ட கான மரந்துகள் பட்ட பண்ணைத்
தரைமுழு வதும்வெம் பாலைத் தரையெனப் பட்ட தாளா
லுரைசெய்வ தென்னை மேல்விண் ணுலகுமண் ணுலகா யிற்றே. (உசா)

அடுபரிக் கூட்ட மிவ்வா றணைந்தொரு மதுரை சூழ்போ
யுடுவொடு மதிலுந் தாண்டி யுள்வயிற் புக்க சில்ல
நெடுமதில் வாயி லூடு நெருக்குபு புகுந்த சில்ல
கொடுவரி யெனமேற் றாவி மாடமேற் குதித்த சில்ல. (உஎ)

தளியக வீதி யுள்ளுந் தளிப்புற வீதி யுள்ளுங்
களிகிளர் திருத்தே ரோடுங் காமரு வீதி யுள்ளும்
வெளியொடு முடுக்க ருள்ளு மிகுகடை வீதி யுள்ளுந்
தெளிதரு சதுக்கத் துள்ளுஞ் சிலைத்தெழு குதிரைக் கூட்டம். (உஅ)

மறையவ ராதி நால்வர் மாளிகை வாயின் முன்னு
மறைபுறக் குடிக ளாறு ரமருமில் வாயின் முன்னுங்
குறைவின்மற் றிடங்க ளெங்குங் குதிரையாய் நிரம்ப லாலே
நிறைபெரு மயக்கம் பூண்டார் நெடுநகர் மாந்த ரியாரும். (உகூ)

சனமியங் காத வண்ணந் தார்ப்பரி தனைத லோடு
மனமயங் குற்றுச் சில்லோர் மாறன்முன் னோடிச் சொற்றா
ரனகமிக் குள்ள தூய வமைச்சருக் கலக்கண் செய்தோ
மெனநினைந் தென்செய் தோமென் றிரங்குபு பதைத்தான் வேந்தன். (௧௦)

சிறந்தவர் தம்மை யேவிச் சிவிகையி னேற்றி யெம்மு
னறந்தவா வாத வூரெம் மமைச்சனைக் கொணர்மி னென்னப்
பறந்தவர் சென்றவ் வாறு கொணர்தலும் பரிந்து நோக்கி
யுறந்தவென் றீமை கொள்ளீ ரென்றுப சரித்தா னன்றே. (௧௧)

முன்னநீ ருரைத்த வாறே மூலநா ளின்றே வந்து
பன்னருங் குதிரை யெல்லாம் பரந்தன நகர மெங்கு
மின்னவை யியக்க வல்ல தலைவரா ரியம்பு மென்றா
னன்னனை யறியே னியானு மென்றன ரறிந்த நீரார். (௧௨)

அரிமருத் தனனு னின்றே யறிதரல் விழைந்தே னென்னப்
பரியுகைத் திடுசில் லோரைப் பார்த்தங்க டலைவர் தம்மைத்
தெரிதரக் காட்டு மென்று தெரிந்தமந் திரியார் கூறக்
கரியுரி போர்த்த வீரர் கடும்பரி யுகைத்துச் செல்வார். (௧௩)

சுட்டுதற் கரிய சோதி சூழ்பரிப் பாகர் சுட்டப்
பட்டுநேர் வருத னோக்கிப் பாண்டியன் பதைத்தெ ழுந்து
கட்டுவிட் டிலகு சோதி யிதுவெனக் கைகு வித்தா
னெட்டுவிட் டிடாப்பெ ருந்தன் னுள்ளமு முருகி நின்றான். (௧௪)

மறுவலு மெம்பி ரான்செய் மாயையா லென்னே யிந்தத்
தெறுபரி மேல்வந் தாற்கண் டெழுந்தனஞ் செங்கை கூப்பி
முறுவலொன் னலர்க்குண் டாக வென்றன முன்னி முன்னி
யறுதியி னுணம் பூப்ப வெழுந்தவா றமைந்து நின்றான். (௧௫)

இருடபு மமைச்சர் நம்பண் டாரத்தி லெடுத்துச் சென்ற
பொருளள வைக்கு மேலாப் போந்தன பரியென் றெண்ணித்
தெருடரா விலைவெய லாமெத் தேயத்து நின்று வந்த
வருள்கெழு மமைச்ச ரேயா னறிதரல் வேட்டே னென்றான். (௧௬)

என்றுரை யாடு முன்ன ரெழுதரும் பரிமா மேலா
ரொன்றுரை யாடக் கேண்மோ வுரவுநீர் ஞாலங் காப்போய்
கன்றுரை வாத வூரர் நமக்குத வியசெம் பொன்னு
வின்றுரை கடந்த வாசி யித்தனை யுங்கொ ணர்ந்தோம். (௧௭)

இவையிவை யிவ்வித் தேய மிவையிவை யிவ்வி யல்ல
விவைபகல் விசயங் கொள்ளு மிவையிரா விசயங் கொள்ளு
மிவையிரு போதுங் கொள்ளு மிவைபெற லரிய யார்க்கு
மிவையெலாந் தெரிதி யாலென் றிவைதர வெடுத்துக் கூறி. (௧௮)

இன்னவாம் பரிய னைத்து மின்றுநீ கொள்ளிற் பாண்டி
மன்னவா நினவே நாளை வருபவைக் குடம்ப டேமியாஞ்
சொன்னவா றணிபே யென்று தண்ணெனக் கயிறு மாறிப்
பன்னவாம் பரிகீத் தெல்லாப் பரிகளுங் கொடுத்தா ரன்றே. (௩௯)

பொருந்துற மிலாயஞ் சேர்த்துப் போக்கதங் கணக்க ரோடும்
பெருந்துறை வந்து சேர்ந்தார் பெருமறைப் பரிமேற் சென்று
ஈருந்தமி ழாளி யாருக் குவகைசெய் தமரிற் போக்கி
யிருந்தனன் றென்னர் கோமா னெண்ணருங் களிப்பின் மூழ்கி. (௪0)

வேறு.

வாதவூ ரடிகண் முன்னிலே யாக வழுதியர் பெருந்தகை யன்பாஞ்
சாதநீர் துளைதல் கருதியோ வந்தி தனக்கருள் செய்வது குறித்தோ
வேதவாம் புரவி மேற்கொடு வந்த வித்தக ரற்றைநா ளிரவே
போதவாம் பரியா வினவெலா நரியாய்ப் போதர நினைத்தனர் மன்னோ. (௪௧)

அரையிராப் பொழுது நண்ணலும் பரியா யினவெலா நரிகளாய்க் குழுமி
விரைதரச் சூழு மென்னமா மாய மிடைகுறுங் காட்டிடைப் பயிலியா
முலாபரி யாகி மனித்தரைச் சுமந்தா மொருசிறைப் புகுந்துங்கட் டுண்டாம்
புலைபடு கடலே முற்கங்கொள் ளுண்டாம் புகர்படு மேஞ்சா திக்கே. (௪௨)

கொத்தைநா கந்தோ நினைக்கவா யூறுங் கோதிலா கந்தென்று பெறவோ
மித்தையன் றியுஞெண் டிலேகொலோ வென்று மிடேவனப் பிணறுகர் பெருஞ்சம்
பத்தையென் றடைவோம் பண்ணிய தவத்தாற் பண்டுருப் பெற்றனம் வள்ளி
யத்தைசெய் வழிக்கோன் றமர்தெரி சருமு னகறலே கருமமென் றெழுந்து. (௪௩)

ஓடின சில்ல தாவின சில்ல வூளையிட் டோறின சில்ல
காடின வாய்முற் குதிரையண் டத்து நகக்கடித் திழுத்தன சில்ல
கூடின குடரைப் பறித்தன சில்ல குருதியை நக்கின சில்ல
வீடின முனமுன் னவைகளு மெனவி டாதூறு புரிந்தன சில்ல. (௪௪)

தெருவெலா மிகலன் சதுக்கத்து மூளன் சிறுமுடுக் கரும்பல வொண்டன்
மருவிய மாட மனைத்துங்கோ மாயு வாவியங் கரையெலா மோரி
பெருமுழ வதிரு மாங்கத்துஞ் சம்பு பேசமெங் கணுஞ்சிறு காலன்
கருதுமுற் பகலிற் பரியென மலிந்த கருதிராப் பொழுதிடை நரியே. (௪௫)

நகருளார் விழித்தா ரலக்கண்மிக் குற்று நடுங்கினு ரனையருட் சில்லோ
ரிகல்வலி மாறன் கண்படை கொள்ளு மிடம்புகுந் தனர்முறை யிட்டார்
பகல்வரு பரியெ லாநரி யாகிப் பாவியூ றிழைத்திடு மென்ப
தகறா வுணர்ந்தான் மிகத்துடி துடித்தா னமைச்சர்மே லடுசினங் கொண்டான். ()

வஞ்சமிக் கியற்று மமைச்சரைப் பற்றி வன்சிறைப் படுத்தியா வோரு
மஞ்சமிக் கொறுத்தெம் பொருளெலாங் கவர்மி னென்றன னவரது செய்தார்
நெஞ்சநெக் குருகிக் குருந்தடி யிருந்த நிமலரை நினைந்தன ரிருந்தார்
தஞ்சமுற் றவர்க்காப் பெருந்துறை வைகைத் தடநதி பெருகிட நினைந்தார். (௪௭)

புடவிமுற் றகழ்ந்து பாதலம் புகுத்தப் போந்தநீ ரெனவையை பெருகித்
தடவியன் கரைகண் முழுமையு முடைத்துச் சார்ந்தது வெள்ளமா நகரு
ளிடவிய வீதி யெங்கணும் வெள்ள மிரும்பொன்மா ளிகையெலாம் வெள்ள
மடவியர் பயிலு மாங்கெலாம் வெள்ள மற்றெங்கும் வெள்ளமா யதால். (௪௮)

மகவினை யெடுப்பார் மாடமே லிவர்வார் மற்றிதுஞ் சாயுமே யென்பார்
தகவினை யமைத்த மன்னவ னீதி தவறின னெனப் புகல்வார்
நகவினை நடாத்து மமைச்சரை யொறுக்க நயந்ததால் விளைந்தி தென்பார்
பகவினை யொறுக்குஞ் சொக்கநா யகர்க்கும் பாங்குகொ லித்திற மென்பார். (௪௯)

வளமலி கூட லின்னண மறுக வாதவூ ரமைச்சரைச் சிறைவைத்
தளவற விருந்தார் தந்தமர்க் காப்பா ராய்த்துகை விட்டன ரகன்றார்
களமினெஞ் செங்க ளடிகளா ரிதுவுங் கண்ணுத லாரரு ளென்றே
யுளமுறக் குறித்தா ரும்பர்கோன் கோயி லுற்றன ரியோகமுற் றிருந்தார். (௫௦)

தினகர னுதிக்கு முன்னரே செழியன் செழுமணி முகப்பிடை வந்து
கனமிகு மமைச்ச ராதிய ராய காரியம் பார்ப்பவர்க் கூவி
வனமலை பெயர்த்து வருபுனல் வையை வன்கரை முழுவது முயரச்
சனமுழு மைக்கு மளந்துவிட் டடைக்குந் தருதிசெய் வீரெனப் பணித்தான். (௫௧)

புத்தியென் றமைச்ச ராதிய ரெழுந்து பொருக்கெனக் குடிமுழு தெழுதி
யொத்தியல் குடிகட் கொவ்வொரு கோலென் றறவளந் தடைக்குமா விதித்தார்
பத்தியிற் பலாலம் பரப்புவார் சில்லோர் பரிகிறத் துபுதழை பரப்பிப்
பொத்திய மண்ணைச் சொரிகுவார் சில்லோர் போக்கற மகிழுவார் சில்லோர். ()

வெட்டுவர் சில்லோர் வெட்டுமண் கூடை மிதப்புறக் கொண்டுபோ யுடைப்பிற்
கொட்டுவர் சில்லோர் கொட்டிய மண்ணுற் குறியுடைப் பொழிதாத் திண்டோ
டட்டுவர் சில்லோர் தகைப்பரு முனிவு தலைக்கொள லன்னையென் றிறைஞ்சிக்
கிட்டுவர் சில்லோர் பாம்புக ளுருட்டிக் கிடத்திநீர் கிறத்துவர் சில்லோர். (௫௩)

இவ்விதங் கரைமுற் றடைபடுங் காலை யிலங்குமம் மதுரைமா நகர்வாழ்
செவ்விய வொருத்தி கரைத்தழு தாட்டி திங்களா யிரந்தொழு துள்ளா
ளவ்விய மின்றிப் பிட்டுவிற் றுண்பா ளடுசுவைப் பிட்டினை முன்னே
கவ்விய வன்பிற் கண்ணுதற் கருத்திக் களிசறப் பின்புவிற் றிடுவாள். (௫௪)

வந்தியென் றுரைக்கும் பெயரினு டனக்கு வரைந்தகோ லளவடைத் திடுமாண்
முந்தியெங் கணுநா டியும்பெறு கில்லாண் முனியுமே யரசனென் றஞ்சி
நந்திய துயரத் தழுந்துவா டினமு நகப்படைப் பதுகிலே தனங்கொ
ளந்தியொண் ணிறத்தெம் பிரானடி சிந்தித் தாவலித் திரங்கிடு காலை. (௫௫)

பழங்கலை யுணரார் பழங்கலை யொன்று பற்றுபு திருவரைச் சூழ்ந்து
குழங்கலை விண்டை நிகர்வமை யடைமேற் கூடையொன் றரம்படி கவிழ்த்துச்
சழங்கலை யுருமற் சமைத்தமண் வெட்டி தாரணி தோண்மிசைக் கிடந்தி
முழங்கலை வையைக் கரையடை யாளாய் முந்தினர் முந்தரா யுள்ளார். (௫௬)

அடியவன் மனைமுன் புகுந்தனர் கூலி யமைதரக் கொடுத்தொரு வேலை
தடிதரா தென்பாற் கொள்ளுந ருளரோ சாற்றிட லாமென வினவ
வடிதராக் கவலை யழுந்துவா ளித்த வார்த்தைகேட் டலுமுவந் தெழுந்தான்
படியவாம் வலையைக் களாயெனக் கவந்த பங்கடைப் பாய்கொலோ வென்றான்.()

என்றலுங் கூலி யாதுநீ தருவா யென்றனர் வந்தைதா னிடுவே
னென்றமற் றதனை யேற்றுநீ வேலை யொருங்குசெய் திடுகென வுரைத்தான்
பின்றலில் கூலி யதுவெனி லின்னே பெரும்பசி தீர்தரக் கொடுத்தா
னன்றமை தரவுண் டினைப்பொரீஇ வேலை நவிற்றிடு வேனென நின்றார். (ருஅ)

தெள்ளிய பொழுதி னட்டசிற் றுண்டி சிக்கடை பொர்திதப வுடையா
வள்ளிமற் றதனிற் கலப்பவுங் கலந்தே யருந்தப்பா வெனக்கொணர்ந் திட்டாள்
வெள்ளிவெள் விடையார் துகில்விரித் தேற்று விரைதர வெடுத்துவாய்ப் பெய்து
கள்ளிய வினையா ளன்பொடு சேர்த்து நயந்தன ரமுதுசெய் திடுவார். (ருகூ)

சுடுதலிற் கதுப்பி னுதக்குவா ரென்ன சுவையதிப் பிட்டெனப் பகர்வார்
விடுதலி லிஃதிட் டவட்குநா மியற்றும் வேலைமற் றிதுகொலோ வென்பா
ரடுதலிற் பொலிமற் றிதுபர சிவனுக் கர்ப்பண மாமெனப் புகழ்வார்
தடுவெரி விருப்பி னமுதுண்டு வேலைத் தலைப்புகு வேனெனப் போந்தார். (சுo)

சென்றவர் யானோ வந்தியா ளென்று தெரிதரக் கணக்கிடைக் குறிப்பித்
தொன்றமற் றவளுக் களந்தபங் கெதுவென் றறவினு யிதுவெனத் தெரிந்து
நின்றவர் வியப்ப வெட்டுவார் வெட்டி நிரம்பிய கூடைமண் கொடுபோ
யன்றலின் வேற்றுப் பங்கிடைக் கொட்டி யடைபடக் கண்டுவந் திடுவார். (சுக)

விரைதர வந்தி பங்கினுங் கொட்டி வெள்ளநீர் கரைத்திடக் கண்டு
புரையற நகைப்பார் மீளவுஞ் சுமந்து போகட்டுப் போகட்டுப் பார்ப்பார்
கரைபட லின்றிக் கரைபட வுணர்ந்து கையுறக் கொட்டுபு குதிப்பார்
புரையற வேற்றுப் பங்கடை கரையும் பொருக்கெனக் கரைதல்கண் டுவப்பார். ()

வேலையித் திறஞ்செய் தினைத்தவர் போன்று மீளவும் வந்திபாற் சென்று
மாலையெம் மன்னுப் பிணக்களந் திட்ட வண்கரை யடைபடு கின்ற
தாலைய மின்றே கனிபசித் தடைந்தே னட்டபிட் டிடுகென் றினிய
பாலமிக் கடைந்தாண் மறுவலு மிடமுன் பான்மையி னேற்றனர் கடந்தார். (சுங)

தகையுறு வேலைத் தலைமரீஇ யாங்கோர் சாகிருந் தமுதுசெய் திடுவார்
நகைபுரிந் தெதிர்ப்பட் டவர்க்குநன் கருளி நாடவர் வேலையுந் தவிர்ப்பார்
பகையுறு தவரு மிவர்வழிச் சேறல் பார்த்ததி காரிகன் புடைப்ப
வகையுறு தொருங்கு மகிழுவா ரிவ்வா றுடியவ் குறப்பயில் காலை. (சுச)

வந்தியான் வந்தி யாளெனக் கணக்கில் வரைவித்தான் கூலியுங் கொண்டான்
சிந்தியான் வேலைத் திறமுணுந் துணையுஞ் செப்புகம் வார்த்தையு மேலான்
புந்தியா னவத்தற் கரியவ னென்னப் பொலிகுவா னியாவனோ வினைய
வந்தியா மெவன்செய் குவதென மருண்டார் காமெவ் வினைத்தலை நின்றார். (சுரு)

அதுபொழு தரிமர்த் தனத்திறல் வழுதி யடைகரை நோக்குவா னன்ற
முழுமதி யமைச்ச ராதிய ரோடு முன்னினு னடைபட்ட துணர்ந்து
குதுகல முற்று னுடைப்புமா றாத கொள்கையோ ரிடத்திடைக் கண்டே
யிதுகரை படாத தென்னென வெகுண்டா னிதற்குரி யவனெவ னென்றான். (௬௬)

வழுதிதன் சினங்கண் டஞ்சின ரெவரும் வந்திதன் பங்கது வடைப்பா
னெழுதுவித் தொருவ னடைந்தனன் வேலை யியற்றில னிசைப்பதுங் கொள்ளான்
பழுதின்மற் றவன்றன் வடிவினை நோக்கிப் பயந்தன மடிக்கவு மடிகேண்
முழுதுமுன் மத்த னெனநின்று னென்று மொழிந்தன னொருவனோர் வணங்கி. ()

அன்னவ னியாவ னெனவயன் மாலா லருமறை யாலவுந் தறியா
முன்னவன் றனைக்கை தொட்டிழுத் தரசன் முன்னுற நிறுத்தினர் சில்லோர்
பின்னவன் றனைப்பார்த் தேடநிற் கனந்த பெருங்கரை யடைத்திலை யென்றம்
மன்னவன் வினவப் பராமுகஞ் செய்து வள்ளலார் நிற்பது கண்டு. (௬௮)

ஒருகையிற் பிரம்பு வாங்கின னோங்கி யொய்யென வெரிநிடைப் புடைத்தான்
மருவுமப் பிரம்பி னடியடுத் தவனும் வழுதிதன் முதுகிடைப் பட்ட
திருமைமற் றவன்பன் னியர்க்கெலாம் பட்ட திளஞ்சிறார் தமக்கெலாம் பட்ட
தருமதி யமைச்சர் தமக்கெலாம் பட்ட பட்டதாங் குள்ளவர் பலர்க்கும். (௬௯)

அரியயன் மகவா னமரர்பன் முனிவ ரவுணரி ராக்கதர் சித்தர்
கரிசில்கிம் புருடர் வித்தியா தரரோண் கருடர்சா ரணருர கேசர்
விரிமருத் தவரெண் வசுக்கண்மற் றியார்க்கும் விலங்குபுண் முதலிய வுயிர்க்குந்
தரிகரு வுயிர்க்கும் பட்டதெவ் விடத்துந் தாம்வியா பித்தனார் தழும்பு. (௭௦)

பொருக்கென வாங்கோர் கூடைமண் ணெடுத்துப் போகட்டுக் கரையுடைப் பொழி
திருக்குமன் னுதலின் மறைத்தவர் மறைந்தார் செழியர்கோ னுயிரங் கூடை [த்துத்
நெருக்கிமே லிடினு நிரம்புறா வுடைப்போர் கூடையா னிரம்பிய திறனுஞ்
சருக்கரை யளாம்பிட் டளித்தவள் விமானந் தழீஇயிசை யுலகுபோந் திறனும். ()

தானடி பட்ட திறனுமாங் குள்ள தன்றம ராயினர் பலரும்
யானடி பட்டே னியானடி பட்டே னெனப்பதை பதைத்திடு திறனு
மேனடி பட்டா மேனடி பட்டா மெனக்க சிரங்கிடு திறனுங்
கானடி பட்ட நிம்பமா லிகையான் கருதினன் மயங்கிடு காலை. (௭௨)

வள்ளலா காய வாணியால் வழுதி மன்னவ வாதவூ ரமைச்ச
ரொள்ளலா கரின் பொருளெலா நமக்கே யீந்தன னஃதுண ராயா
யுள்ளலா காத வினைசெய்தாய் நரியை யுறுபரி யாக்கிமாற் றினம்பின்
கொள்ளலாத் தீங்கு பினுஞ்செய்தா யந்தோ குறிக்கொளா வதுபொறுக் கலாகாம்.

வெள்ளநீர் பெருக்கி யலக்கணுற் றுபுமேல் விடுபடா வன்புகம் பாலே
யுள்ளவன் பொருட்டா னாகிமண் சுமந்தே யுனதுகைப் பிரம்படி யேற்றோம்
பள்ளநீ ருலகில் வாதவூ ரமைச்சன் பரிந்துனக் குறுதியே செய்தான்
கள்ளமி லவனிச் சையின்வழி யியங்கக் கைகுவித் தியக்குதி யென்றார். (௭௪)

என்றசொற் செவியி னேறலும் பிழைத்தே னென்செய்தே னென்றழு திரங்கி
நன்றமை வழுதி யடிக்கடி தொழுது நாயனார் பேரரு ணினைந்து
கன்றலி லமைச்சர் முன்புபோய்ப் பணிந்து கைகுவித் தெழுந்துநின் றடிகேள்
புன்றரத் தடியேன் செய்பிழை யனைத்தும் பொறுத்திடி னுய்வனென் றிரந்தான்.

மன்னவர் மன்ன கேண்மதி நின்னை மற்றுநான் சார்ந்தகா ரணத்தான்
முன்னவ ரருள்பெற் றுய்ந்தன னீயென் பிழைத்தனை மொழிதியா லென்றத்
தென்னவர் கோமுன் கோவணங் கீளிற் செறிதரப் புனைந்தன ரெழுந்தா
ரென்னவர் களுங்கண் டிரங்கநல் லமைச்ச ரிறையவன் பணிந்தனன் விடுத்தான்.()

வாதவூ ரிறைவர் மதுரையை யடைந்து வழுதியர் பிரான்விடை பெற்றுப்
போதமேற் பொலியத் துறவுபூண் டெழுந்த புண்ணியக் கதைதொகுத் துரைத்தாஞ்
சீதநீர்ப் பழனப் பெருந்துறை முதலாத் திருத்தல மனைத்துங்கண் டிறைஞ்சி
யோதவார் தில்லை புகுந்துபுத் தரைவென் றேங்கொளி கலந்தவா றுரைப்பாம். ()

மதுரையையடைந்து விடைபெற்றபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கூ௱௦.

---

# தில்லையையடைந்தபடலம்.

---

ஆரருள் வடிவ மாய வன்னையார் திருக்கண் சாத்தச்
சீரரு ளம்ப லத்திற் றிருநட நவிலு வார்ப்பே
பேரரு ளொருகை யேடு பிடித்தெழு திடப்ப ணித்தார்
நாரரு ளடியா ரோடு நகைமெழு தவும்ப ணிப்பார். (க)

யாவருங் காணு மாறே துறவுகொண் டெழுந்த வையர்
தாவருஞ் சுந்த ரேசர் சந்நிதி முன்னந் தாழ்ந்து
மேவரும் பெருந்து றைப்பான மேவினர் குருந்த நீழ
லோவருங் குரவற் காணு ரோய்யெனப் பதைத்து வீழ்ந்தார். (உ)

அழுதழு தரற்றி யேங்கி யையகோ வைய கோவிப்
பழுதுறு பாவி யேனைத் தனிவிட்டுப் பாதம் பற்றித்
தொழுதுய்யு மடியா ரோடு மெங்கொளித் தனையோ சோரு
மிழுதையேற் கிரங்கா வண்ண மென்னையென் பிழைத்தே னென்பார். (ந)

பிறைமுடிக் கணிந்த வேணிப் பிஞ்ஞக ரன்பு சாலக்
குறையுடை யாரும் பாடிற் கொண்டருள் சாந்த லெண்ணி
மறைபுகழ் சமச்சி வாய வாழ்கவென் றெடுத்துக் கொண்டு
முறைபெரு கன்பு பொங்க வாசக மொழிய லுற்றார். (ச)

அண்ணல்வந் தருளை கல்கு மற்புத மறியே னென்று
மெண்ணரு மதிச யங்கண் டாமென்று மெனது நெஞ்சக்
கின்னறக் குழைத்தா யென்றுஞ் சென்னிமன் னுந்தா னென்று
மொண்ணல னின்னைக் காண்ட லுறவாசைப் பட்டே னென்றும். (௫)

உய்த்தரேன் வாழே னென்று முன்னடைக் கலமே யென்றுஞ்
செய்வதொன் றறியே னுயேன் செத்திலே னுவா வென்றும்
பொய்யமை யாத நின்றாள் புணருகா வெங்கா னென்று
மெய்துமா றழைக்கி னீய தெந்துவென் றருளா யென்றும். (௬)

திகழ்திரு வார்த்தை யெண்ணத் திருப்பள்ளி யெழுச்சி யாதி
நிகழிவை பலவும் பாடி நெஞ்சநெக் குருகி நிற்கப்
புகழ்பர னடியார் சூழ்ந்து போற்றவெள் விடைமேற் றோன்றி
யிகழ்வரு மழனீர் காப்ப னழலெழ வெண்ணி னாரால். (௭)

மற்றதி லியாரு மூழ்கு மாகடைக் கணித்தா ரன்னார்
சொற்றவா முழுகி யன்பிற் சூழ்கண நாத ராகிப்
பொற்றமே லுலகிற் புக்கார் வாதவூர்ப் புனிதர் தம்மை
யுற்றதில் லையினீ வாவென் றுரைத்தனர் மறைந்தா ரன்றே. (அ)

தில்லைவா வென்று ரெங்ஙே திருவுள மென்றி ரங்கி
யொல்லைதாழ்ந் தெழுந்து மெய்தா னரும்பியென் றறவெ டுத்து
வல்லையோர் சதகம் பாடி விடைபெற்று வணங்கிப் போந்தார்
கொல்லையா னுகைப்பார் மேய வுத்தர கோச மங்கை. (௯)

விருப்புற வாங்கு நீத்தல் விண்ணப்ப மருளிச் செய்யக்
குருப்பொலி சடையா ராண்ட குருந்தமர் வடிவங் காட்ட
வருப்புயர் காதல் பொங்க வடிபணிந் தாங்கு நின்று
மருப்பயின் மலர்நீர்ப் பாண்டி மருஉந்தல மெலாஞ்சே வித்து. (௧0)

சென்னிகன் னுடு புக்குத் திருவிடை மருதூர் தாழ்ந்து
மன்னியம் பிகையோர் பாகர் மகிழ்ந்தம ராரூ ரெய்தி
யின்னியற் புலம்ப லோதி யிருங்கழு மலத்தைச் சார்ந்து
பன்னிய புகழ்ப்பி டித்த பத்தரு ளிச்செய் தாரால். (௧௧)

அணிகிளர் சென்னி காட்டி லாவடு துறையா னைக்கா
மணிகின ரீங்கோய் வெற்பு வாஞ்சிய மறைக்கா டாதிக்
கணிகிளர் தலங்க ளெல்லாங் கண்டுகண் டிறைஞ்சிப் போற்றித்
துணிகினர் பெண்ணை சூழு நடுநாடு தொழப்புக் காரால். (௧௨)

முதுகிரி வெண்ணெய் நல்லூர் மொய்புக ழதிகை நாளும்
பதுமமே லிருப்பான் போற்றும் பாதிரிப் புலியூ ராதிக்
கதுமெனக் கண்டு போற்றிக் கைகுவித் திறைஞ்சிச் சென்றார்
புதுமதி முடித்தா ரேயாய்ப் பொலியண்ணு மலையின் மாதோ. (௧௩)

ஆவயிற் றிருவெம் பாவை யம்மானை யருளிச் செய்து
தாவயிற் சூலத் தார்முற் ரேற்றிய கோலங் காட்ட
காவயிற் புகழ்ந்து போற்றி நலமலி தொண்டை நாட்டிற்
சேவயிற் பொலிவார் மன்னுந் திருவேகாம் பரம்ப ணிந்து. (கசு)

காமரு மந்நாட் டுள்ள கானத்தி யாதி யாய
தேமருங் கொன்றை யார்தந் தலமெலாஞ் சென்று போற்றிப்
பூமருங் கழுக்குன் றத்திற் புகுந்தருட் குரவன் கோலந்
தாமரும் படிநேர் கண்டு தண்டமிழ் மணக்கப் பாடி. (கரு)

ஆண்டவர் தில்லை வாவென் றருளிய துறவி னைந்து
பூண்டபல் கானுங் குன்றும் பொருபுன னதியு நீத்துச்
சேண்டவப் பொலியா யிற்குந் திருச்சிற்றம் பலம்பு குந்து
காண்டல்பெற் றடங்கா வன்பிற் கண்டபத் தருளிச் செய்து. (கசா)

திருக்குலாப் பத்தன் கோயிற் றிருப்பதி கம்மி ரண்டு
மருக்குலா மகவன் மூன்றும் வண்பொற்சுண் ணந்தென் னேண
மிருக்குலா வுந்தி யார்தோ ணோக்கம்பூ வல்லி யின்னுங்
குருக்குலாந் திருப்பொன் னூசல் கோத்தும்பி யன்னைப் பத்து. (கஎ)

கூவிய குயிற்பத் தச்சப் பத்துக்கோ தறுத சாங்க
மேவிய விவைகள் பாடி விடாதான் னடனம் போற்றிப்
பாவிய பலரும் போற்றப் பண்புசா லத்த லத்தே
பூவியல் பன்ன சாலை யொன்றதிற் போந்தி ருப்பார். (கஅ)

ஆயவக் காலைத் தில்லை யம்பல நின்றும் போந்த
தூயவ ரொருவர் சொல்லாற் றண்ணெனுங் கலக முற்றுப்
பாயவீ ழத்தி லுள்ள பவுத்தர்கள் பல்லோ ரோடு
மேயவா சிரியன் வந்தான் வேந்தனுங் கூட மேவ. (ககூ)

வந்தவன் புலியூர் காப்பண் மலர்செறி பள்ளி யுள்ளான்
முந்தவெங் கழக்கால் வைத்த முறையென வமர்ந்து கொண்டே
யிந்தவம் பலத்தி னுள்ளா விருத்துவேன் போதி மேய
வந்தமி லாநந் தேவை யென்றறைந் துறக்கு வைப்பான். (உ0)

பொங்குவண் டில்லை மேய பூசா ரதுபொ ருரா
மங்கவ னெதிர்போய்ச் சேற்றி னமையவிட் டெறிகற் போலத்
தங்குபல் வாய்மை சொற்றுந் தகாவுரை வருத னோக்கி
யிங்குகாய்க் கெதிர்கு வைப்பா ரிலையென விலங்கி னரால். (உக)

விலங்கிய வந்த ணாளர் வெவ்விய பவுத்தர் செய்யுங்
கலகமு மவர்சார் புள்ள காவலன் வரவுந் நீட்டி
யலர்புகழ் மன்னு நீயிங் கணைதரி னன்று மென்று
நிலமொடு முடங்க லுய்த்தார் சென்னிமேற் கொண்டு சென்னி. (உஉ)

மறுகின மாங்கு மேவி மறையவர் தம்மைப் போற்றிக்
குறுமுய லகன்மேல் நின்று குயிற்றுநன் னடமும் போற்றி
வெறுவிய பவுத்தர் செய்யுங் கலகமும் விளங்கக் கேட்டுத்
தெறுமகா தேவ ருள்ளார் செவ்வியீர் கவலீ ரென்றான். (உ௩)

ஆயவவ் விரவே செம்பொ னம்பலத் தாடு மையர்
தூயமூ வாயி ரர்க்குந் தனித்தனி கனவிற் றோன்றி
மாயமி லாமா ணிக்க வாசகர் சார்பு கொண்டாற்
றீயவிப் பவுத்தர் தம்மை வெல்வீரென் றருளிச் செய்தார். (உ௪)

அந்தண ரொருங்கு கூடி யையர்தா மருளிச் செய்த
கந்தலின் மொழியுட் கொண்டு கயந்திறை வனுக்குங் கூறி
முந்தவங் கடைந்தார் ஞான முதல்வனைக் கண்டார் நீவிர்
நொந்தயர்ச் சடைந்த தென்னோ நுவலுவீர் கடிதி னென்றார். (உ௫)

செறிதவ ரீழ தேய நின்றும்பல் பவுத்தர் தங்கள்
குறியர சோடும் போந்து குலவுநம் புலியூர்த் தங்கி
யறிவரு நம்பி ரானை யகற்றியம் பலத்திற் போதி
செறிபவன் றனைத்தா பித்தல் செப்பின ருழலு கின்றார். (உ௬)

அன்னவர் கதை யெம்மா லறிந்துநீர் நன்று டாளு
மன்னனு மிங்கு வந்து மருவினு னனையார் முன்போய்
னென்னனு முரைத்தோஞ் சில்ல நேரல ரெறிந்து சொற்றார்
பின்காரிய மென்செய் வோநம் பிரானையே யெண்ணி நொந்தோம். (உ௭)

ஆடுதல் வல்ல வைய ரருளினெங் கனவிற் றோன்றி
வாடுத லொழிமி னீவிர் மாணிக்க வாச கப்பேர்
நீடுத லுள்ளார் சார்பு நேர்பெறி னவரால் வெற்றி
கூடுதல் பெறுவீ ரென்று ரவ்வுரை கூற வந்தோம். (உ௮)

என்றன ரிவர்மா ணிக்க வாசக ரென்ப தோரா
ரன்றெமை யாண்டா ரன்றி யாரறிந் தனரென் றுய்ந்து
நன்றமை யவரே யிந்த நான்மறை யவரெ லாமென்
றொன்றவுண் ணினைந்தெ ழுந்தா ரவரொடு மொப்பி லாதார். (உ௯)

வந்துபொன் னம்ப லத்தை வலஞ்செய்து தொழுதுட் புக்கு
நந்துபல் லுலகு மேத்த நடஞ்செய்வா ரருளைப் பெற்று
முந்துதாழ்ந் தெழுசோ ணாட்டு முதுபுகழ் மன்ன னோடு
முந்துமோர் மண்ட பம்புக் குறைந்தனர் வாத வூரர். (௩௰)

புண்ணிய நீறு பூசாப் புலையரை நேர்பா ரோமென்
றெண்ணிய வாத வூர ரெழினியு ளினித மர்ந்து
திண்ணிய பவுத்த ரெல்லாஞ் சேரவிங் கழைமி னென்ன
நண்ணிய சிலர்போய் வாதஞ் செய்யநண் ணுதிர்நீ ரென்றார். (௩௧)

சிலரஃ துரைத்த லோடு சீவரப் போர்வை யாளர்
பலருமற் றவருண் மேலாப் பகர்தரு குரவ னோடு
மலர்கண்மண் டபத்து வந்தா ரவர்வழி யிறையும் போந்தா
னலர்புகழ் வாத வூரர் வாதமே லெடுத்த லுற்றார். (௩௨)

தெரிகலைப் புத்த ரேறே சிறுநரி யரியோ டேற்கும்
பரிசெனச் சைவர் தம்பால் வாதஞ்செய் பயன்மேற் கொண்டா
யரியநுங் கடவு ளாவா னெனையன்மற் றடையா நின்ற
விரிதரு மின்ப முத்தி யெனைத்துமேல் விளம்பு கென்றார். (௩௩)

தருமமாம் பிடக மோதிச் சாற்றுபல் யோனி தோறு
மருவிய பிறப்புற் றெல்லா வுயிர்க்குமாண் புறுதி செய்து
பருவர லெங்கு மோவப் பரதுக்க துக்கி யாகி
வருகொலை யொழித்து போதி வாழ்பவன் கடவு ளாவான். (௩௪)

உருவம்வே தனைகு றிப்புப் பாவனை யொடுவிஞ் ஞான
மருவுமைங் கந்தங் கூடி யுணர்வுண்டாய் மாய்தல் பந்தங்
கருதுமக் கந்தம் பொன்றன் முத்தியிக் காமர் ஞானம்
வெருவருந் தவத்த ரல்லாற் பெறுவரோ விண ரென்றான். (௩௫)

அறமுள தென்று நன்னூ லறைந்தன னிறைவ னொரு
யுறவுற வுணர்வு தோன்றிக் கணத்திடை யொழியு மென்றாய்
திறமிகு பொருளுஞ் சொல்லுந் தேடிமு னுணர்வு மாயும்
பெறலரு நன்னூல் சொற்ற பெற்றியெத் திறத்திற் சொற்றி. (௩௬)

ஓதுபல் யோனி தோறு முதித்தெங்க ளிறைவன் றானே
தீதுசா ராது யிர்க்குச் செறிவிப்ப னுறுதி யென்றாய்
போதுபல் லுயிர்க்கு மாலைப் போக்குற நினைந்தோர் தாமே
யீதுபன் மாலை யேற்ற லொத்தது மிகவு நன்றே. (௩௭)

இறைபர துக்க துக்கி யென்றனை கணவர்த் தீர்ந்த
பிறைநுத லியர்தந் துக்கம் பேசருங் கண்ணி குத்திக்
குறைகொள்வார் துக்க நின்பே ரிறைதுக்க மென்று கோடி
யறையொரு காமுன் கூடி யருளிய தழகிற் றாமே. (௩௮)

கொலையிலா னிறைவ னென்று கூறினை பிறக்கும் போதே
மலைவிறாய் வயிறு கீண்டு வந்தவ னறவ னன்றே
புலையொழித் துணர்தி யின்னும் புலிமுத லாய காலை
நிலைதரு புல்லோ வுண்டா னிறைபல புத்த ரேறே. (௩௯)

இருந்துமைங் கந்தத் தோடு தேகமுங் கெட்ட காலைப்
பொருந்துநன் முத்தி யென்று புகன்றது பிடக மென்றாய்
வருந்தலி லிறைவ னுக்கு வடிவமின் றாகி வீழ
விருந்தவோர் வடிவம் பந்தத் தேய்ந்ததோ மதியி லாதாய். (௪0)

அழிதரிற் கந்த மைந்து முத்தியென் றறைந்தா யைந்து
மழிதரின் முத்தி பெற்றா ராரெனக் கடாவுங் காலை
யழிதரு மைந்தி னுண்டா முணர்வென வறையி னைந்து
மழிதர விலையா முத்தி யாவது மிலையே யென்றார். (சக)

இவையுரைத் திடுகாற் சீறி யெரிசினங் கொண்டெல் லாரு
நவைசொல முயன்றார் ஞான நாதர்நா மகளை நோக்கிச்
செவையிலார் வாக்குஞ் சேர்வாய் சீரிய திதுவே யாமுங்
குவையென வன்று ணீங்கக் கொள்கைநீத் தாம ரானார். (சஉ)

பரியவர் சார்பி னின்ற பார்த்திப னீன்ற செல்வப்
புரிகுழ லுற்ற மூகை போக்கிய சமய மேயோர்
திரிபிலாச் சமய மந்தத் தெய்வமே தெய்வ மியானு
முரியன்மற் றதற்கே யென்றா ரொய்யெனப் புத்த ரெல்லாம். (சங)

இறையவன் கைவி டாமை யெண்ணிமந் திரங்க ளெல்லா
மறைதப வுரைத்துப் புத்தர் க[illegible] வணங்கிப் பார்த்தார்
சிறைகொளிம் மூகை செவ்வாய் திறப்பதின் றில்லை யிந்தத்
துறையில்ச் சமய மும்போ யிற்றெனச் சலித்தி ருந்தார். (சச)

அதுபொழு தார்த்தார் வேந்த னன்றதிச் சமய வாற்றல்
கதுமென மூகை யிந்தக் கன்னிகை யொழிவ ளாயி
லெதுபுரி தண்ட நுங்கட் கென்றனன் செக்கி லிட்டுக்
குதுகல நமக்குண் டாகத் திரியென்றார் கொள்கை தீர்ந்தார். (சரு)

வாதவூ ரிறைவர் முன்போய் வணங்கியிம் மூகை தீர்த்துச்
சாதமாஞ் சைவ மேன்மை சாதிக்க வேண்டு மென்னப்
போதரா யவரு மந்தப் பொற்கொடி வதன நோக்கி
யேதமே வாத தீறு கொடுத்திவை வினவ லுற்றார். (சசு)

அறிவிலாப் புத்தர் முன்ன மறைசிவ நிந்தை யெல்லாஞ்
செறிதர வினவ வந்தச் செழுங்கொடி விடைகொ டுத்தாண்
மறிதர மூகை தீர்ந்த வாதெரீஇ மகிழ்ந்தா ரியாரு
முறிவிலாச் சாழ லாவவ் வினவிடை மொழிந்தா ளாயர். (சஎ)

வாய்தடு மாறி யந்த மடமையர் சொற்ற வாறே
பாய்பெருஞ் செக்கி லிட்டுத் திரித்தனன் பல்லோர் தம்மைத்
தோய்புனற் பொன்னி நாடன் குளுறுப் புத்த ரெல்லாந்
தீயத னுப்பண் மேவச் சீவாப் போர்வை வீசி. (சஅ)

வெண்டுகில் புனைந்தப் போதே வெண்ணீறு மணிந்து சைவ
வண்டுறை புகுந்தா ரீழ மன்னனுஞ் சைவ னானான்
மண்டுமன் போங்க வாத வூரனை வணங்கி யப்பாற்
றெண்டுகொண் டாடு மையர் சேவடி துதிக்க லுற்றான். (சகூ)

வே று.

மணிவள ரொளியே மலர்வளர் மணமே வான்வளர் வாயுவே யென்னத்
துணிவள ரத்து விதம்பொலி சுடரே தூயவா னந்தவான் பெருக்கே
கணிவளர் கடுக்கை மதிநதி சடையிற் கலப்புறக் கொண்டவொண் பொருளே
யணிவள ரமுதே யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (ருo)

மண்ணிய மணியே மாசிலா முத்தே வான்பெருஞ் சுவையுடைக் கனியே
கண்ணிய முக்கட் காமரு கரும்பே கற்பனை கடந்தமா முதலே
யெண்ணிய வெண்ணி யாங்கடி யவரே யெய்தநன் கருவருட் கடலே
யண்ணிய திருச்சிற் றம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (ருக)

தலைவரு முதலே தற்பரப் பொருளே சம்புசங் கரமகா தேவ
நிலைவரு தேவே ஞாதுரு ஞான ஞேயம்வே றெனப்பகுப் பாரு
மலைவரு மலையில் லென்றுரைப் பாரு மருவுதற் கரியசெஞ் சோதி
யலைவரு மமுதே யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (ருஉ)

மருளறத் துமித்து வழுத்துமெய் யடியார் வாழ்தர வாழ்விக்கு முதலே
யிருண்மலத் தழுந்து மவருக்கப் பரிசே யெய்துறக் காந்தமா மணியே
தெருளிடத் தொளியே செழுஞ்சுவைக் கனியே தெய்வவான் கற்பக தருவே
யருளுருப் பெரியா யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (ருங)

செம்மையொன் றின்றிச் சிறியரோ டிணங்குஞ் சிந்தைய ரென்றுங்கா ணரியாய்
கொம்மைவெள் விடையாய் கொண்டதோ லுடையாய் கூரிய மூவிலைப் படையாய்
மும்மைமா வுலகு மேத்திடப் பொலிவாய் முன்னிய முன்னியாங் களிப்பா
யம்மைகண் காண வம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (ருச)

இடையறு வன்பு செய்பவ ருள்ளத் தெற்றைக்கு மொளிர்மணி விளக்கே
முடையறு வுடம்பு பொருளென மதியா முத்தர்தஞ் சித்தத்துட் டேனே
கடையறு மறையின் முடியமர் பொருளே காமரு பாதியில் லாதா
யடையறுப் பொழில்சூ ழம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (ருரு)

உறத்திரு வருளா விறுதுறப் பற்றி யுள்ளுவா ருள்ளொளிர் விளக்கே
நறப்பயில் கடுக்கை நதிமதி யரவு குருதலை மாலையென் பணிந்தாய்
சிறப்பொடு பூசை செய்திய வெல்குத் திருத்தல மாதிமூன் றுறை
யறப்பெருங் கடலே யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (ருசு)

பொழிசுவைக் கனியே பொங்குமா ரமுதே போதவா னந்தமெய்ப் பொருளே
வழிவழி யடிமை செய்பவ ரெய்ப்பில் வைப்புமா நிதியெனு மலையே
கழிவனப் புடைய வுமையொரு பாகக் கடவுளே கடவுள ரேறே
யழிவிலாச் சோதி யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (ருஎ)

இருவினை சிமிழ்க்க யாத்துணுண் டுழலா தினியவை யாண்டருண் முதலே
பொருவருஞ் சுடரே புண்ணியப் பொருளே பொங்கொளி ஞாயிறே மலருண்
மருவெனப் பொலிவாய் மாணிக்கக் கூத்தா மதிநில வெறிக்குஞ்செஞ் சடையா
யருள்பழுத் தொழுகு மம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (ருஅ)

குணங்கிளர் கடலே கோமளக் கொழுந்தே கொண்டன்மே னியனயன் முதலோர்
வணங்குபொற் பாத மாணிக்க மலையே வரும்பவ மாற்றுமோர் மருந்தே
பிணங்குநீங் கனியே யெய்தரும் பொருளே பெற்றைக்கு மினியநிம் பாகே
யணங்குகண் காண வம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (௫௯)

வே று.

இவ்வண்ணந் துதித்தல் செய்த வீழகா டாளு மன்னன்
செவ்வண்ண மருவுஞ் சைவ சிகாமணி யாகி வாழ்ந்தா
னவ்வண்ண முதல்வன் பொற்றா ளடைந்தமற் றையசொல் லாரு
மிவ்வண்ண மேயுய் வண்ண மெனறுணிந் துய்ந்தா ரன்றே. (௬௦)

அவரவ ரிருக்கை மேவ வவரவர் தம்மைப் போக்கித்
துவரிதழ்க் கன்னி காணச் சுந்தர நடன மாடும்
பவர்படு சடையான் முன்போய்ப் பணிந்தருள் பெற்றுத் தாமே
யிவர்செழும் பன்ன சாலை யிருந்தனர் வாத வூரர். (௬௧)

ஆயவக் காளிற் செம்பொ னம்பலத் தாடு மைய
ரேயமா மறையோ ராகி யேடெழுத் தாணி கொண்டு
பாயமற் றவர்முன் சென்றார் பனவரே நீரியா ரென்ன
மாயமில் பாண்டி நாட்டுப் பெருந்துறை வதிவோ மென்றார். (௬௨)

வந்தகா ரியமென் னென்ன வாதவூ ரிறைவ ரேநீர்
பந்தநீத் துலக முய்யும் படியினி தருளிச் செய்த
சந்தவா சகம்வ ரைந்து போதற்குச் சமைந்து வந்தே
னந்தயா நிதியே யின்றே யயந்தருள் செய்வீ ரென்றார். (௬௩)

என்றலு மச்சி வாய முதலினி தமையக் கூறி
நன்றமை படையெ ழுச்சி நருபடை யாட்சி யச்சோ
வொன்றமின் றலாவு றம்பத் தொத்தயாத் திரைப்பத் தோதிப்
பொன்றலி லெலாமு டித்தார் பூசுரர் பின்னுஞ் சொல்வார். (௬௪)

இயம்பிய வனைத்து மைய ரெயினி தெழுதிக் கொண்டே
னயம்படு கோவை யொன்று நவின்றிட வேண்டு மென்ன
வயம்படு மவரு முன்ன மகிழ்ந்தனர் பாடப் பாடச்
சயம்படு மறையோர் தாமும் வரைந்தனர் சலித்த லின்றி. (௬௫)

முற்றிய பின்மா ணிக்க வாசகர் மொழிந்த வாறே
பற்றிய வெழுதி னேனம் பலவாணன் கையெ ழுத்தென்
றுற்றிய தனது பேரு முலகறி தரவ ரைந்து
மற்றிய லேடு காப்புச் செய்துகைக் கொடுமே றைந்தார். (௬௬)

மறைந்தவர் போத வாத வூரருண் மயங்கி மன்ற
ணிறைந்தவர் கொல்லோ வென்று நெஞ்சநெக் குருக வெங்கு
முறைந்தவர் மன்றுண் மேவி யுவந்தய னரிமுன் னோர்க்கு
மறைந்தனர் நம்பா லன்பன் பாடிய தறிதி ரென்று. (௬௭)

பின்னர்மைக் காப்புச் செய்து பிறங்குபுத் தகஞ்சே மித்து
கன்னலாந் தெழுத்தி னுமைப் படிமிசை நயக்க வைத்தா
ரன்னதை மறுநாண் மூவா யிருமாங் கலையக் கண்டு
தென்னலற் புதமென் றங்கை யேத்தினர் தலைமேற்கொண்டார். (௬௮)

திருமுறை யதைய விழ்த்துச் சிறப்புற வாதி யந்த
மொருமுறை நோக்கி னார்க ளுலகெலா முய்ய வாடும்
பெருமுறை யவர்தி ருக்கை யெழுத்தெனல் பிறங்கக் கண்டா
ருருமுறை யனையா ருற்ற மகிழ்ச்சியா ரளக்க வல்லார். (௬௯)

ஓங்குபொற் சிவிகை மேலா லொய்யென முறையை யேற்றித்
தேங்குபல் லியமு முங்கத் திருவாத வூரர் முன்போ
யீங்கிது நமது பாட லெழுதினர் நம்மா னாரென்
றுங்குவைத் தஞ்ச லித்தா ரழுதழு தவருங் கண்டார். (௭௦)

முறையிதன் பொருளை யாங்க ளறியுமா மொழிவீ ரென்ன
விறையவர் சபைமுன் சொல்வா மென்றவ ரோடுமாங் கெய்தி
நிறைபெரு நடஞ்செய் வாரே நிகழ்பொரு ளென்னக் காட்டி
மறைமுடி பெனுமுட் புக்கு மறைந்தனர் வாத வூரர். (௭௧)

ஒளிமய மாகத் தோன்ற வும்பர்பூ மாரி பெய்தா
ரளிவள ரந்த ணாள ரனைவரு மஞ்ச லித்தார்
வளிவள ருலகி லானி மகஞ்சிறப் புற்ற தெங்குந்
தெளிவளர் சைவ மோங்கிச் சிறப்புற்று வாழ்ந்த தன்றே. (௭௨)

வாதவூ ரிறைவர் தில்லை மாநக ரடைந்த டைந்த
போதவா னந்தஞ் சொற்றும் புரூரவ மன்ன ரேறே
வோதவாம் பெருந்து றைக்க ணுற்றுன்ம யாத னாத்தாழ்ந்
தீதலை தரவுட் கோடி யெனமுனி விடைகொ டுத்தான். (௭௩)

தில்லையையடைந்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௩௭௩.

---

# புரூரவன் பெருந்துறையடைந்து திருவிழாச்செய்தபடலம்.

---

தூய மணிவா சகரெனலிற் சுத்த மாயா காரியமுன்
னாய வசுத்த மாயாகா ரியமு மாக வமைத்தன
னேய மருவு தொண்டர்முன் னிகழு மேய மருவாத
தீய வினையுஞ் சேர்த்தவப்பார் நிகழு மனைய பெயர்படைத்தார். (௧)

சாந்த குணத்துத் தவமியனார் விடைபெற் றெழுந்து தண்பொதியில்
வேந்தன் புரக்கு நன்னாடு மேவி வாவிப் பெருந்துறையுட்
சார்ந்து நகர வளமுழுதுந் தன்கண் விடுத்து நனிநோக்கி
யார்ந்து நினைக்க முடியாதென் றடங்கா மகிழ்ச்சி தலைக்கொண்டான். (௨)

மேய குரவன் சொற்றதினும் விசேட மாக விருந்ததினைத்
தூய தலமென் றுவப்புற்றுச் சுகுண புரூர வாமன்ன
னாய தளிக்குப் புறத்தேழு மகத்தோ ரிரண்டு மாயமைந்த
பாய பெருந்தீர்த் தம்படிந்து பாங்கார் திருவெண் ணீறணிந்து. (௩)

கண்ணின் மணிமா லிகைபுனைந்து கருதைந் தெழுத்து முளங்கணித்து
மண்ணி னிழலொன் றுவவாத மதமால களிற்றி னடிபோற்றிப்
பண்ணின் மொழியோ காம்பிகைத்தாய் பாகங் கொண்ட பெருவாழ்வை
நண்ணி னகலா தொளிநான்ம நாத நாம வருட்கடலை. (௪)

கண்டு தொழுது சிவயோகக் கன்னி திருமுன் சென்றிறைஞ்சி
வண்டு படியு மலர்க்குருந்த மாமூ லமுங்கண் டினிதேத்தித்
தொண்டு புரிவார்க் கேயருளுந் தூய ருருவ முள்ளிருத்தி
விண்டு நிகர்மன் னவன்றனக்கோ ரிடமுண் டாக்கி வீற்றிருந்தான். (௫)

இருந்த மன்ன னித்தலத்தா னெண்ணி லாமான் மியத்ததாற்
பொருந்த விதற்குத் திருவிழாப் பொலிவி லாத திறமென்னோ
திருந்த வடைந்த வொருநாமே செய்வித் திறைஞ்சு வோமென்று
வருந்த வார்சீர்ப் புரூரவா துயின்றான் மற்றை யவன்கனவில். (௬)

குருந்த நிழலா ரொருமறையோர் கோலங் கொண்டு கோர்தோன்றிப்
பொருந்த நமக்கு விழாச்செய்தல் புந்தி கொண்டா யதுதவிர்தி
பருந்த வாவு வேலமன்ன பரிவி னம்மைப் பாடிவையக்
திருந்த வைத்த வாதவூர்ச் செம்ம லார்க்கஃ தியற்றுவாய். (௭)

உற்ற யோக நாயகித னுளிசால் கோயிற் கெதிர்முகமாச்
சொற்ற சொக்க விநாயகர்தங் கீழ்பாற் றலங்கு வடமுகமாப்
பொற்ற கோயி லொன்றமைத்துப் பொலிய வனையர் திருவுருவ
மற்ற மறக்கண் டதிற்றாபித் தாண்டிற் றிருநால் விழாச்செய்தி. (௮)

விடைவே தண்ட முதலாநாம் விரும்பு மூர்த்தி யெலாஞ்செய்வித்
தடைவே யவர்க்காக் குதியினுந்தண் டீச பதமிங் கருளினுந்
தொடையார் புயத்தா யிதுவேமற் றெமக்குஞ் சொலுமியோ காம்பிகைக்குங்
கடையா காத வுவப்புறுத்து மறியென் றுரைத்துக் கரந்தனரால். (௯)

என்று கருணைப் பெருமானா ரியம்பி மறைய வுடன்விழித்து
நன்று சிறியே னினைத்ததுவு நம்மான் கருணை யிருந்ததுமென்
றென்று பலகாற் பாராட்டி யினியார் பலர்க்கு மெடுத்தியம்பிக்
குன்று குழைத்தா ரியம்பியவா றூற்றுத் துணிபே குறிக்கொண்டான். (௧௦)

சினவின் மேரு வளையாகச் செய்த பெருமான் கருணையினாற்
கனவி னுரைத்த தானத்தே கனக மயத்தோர் தளியாக்கி
நனவி லெமக்கு வந்தருளு நல்லார் தமது திருவுருவந்
தனவில் விளங்கும் படிசமைத்துத் தளியிற் றாபித் தனனுளில். (கக)

ஆய்ந்த கருணை பொழிவிழியு மழகு பொலியுந் திருமுகமு
மேய்ந்த முறுவற் செவ்வாயு மிசையப் பொலியுங் குழைக்காதும்
வாய்ந்த வரைசெய் தடந்தோளும் மார்பு மலர்க்கை களுமெம்முட்
டோய்ந்த துணைத்தாள் களுங்கண்டு தொழுது தொழுதுய்ந் தஃதுலகம். (கஉ)

வாத வூரர் வாசகமே வையத் தவர்தஞ் செவிகவரு
மேத மருவா மலரடியே யெந்த ஞான்று மனங்கவருஞ்
சீத மருவு செயலொன்றே தெளியச் செயலெ லாங்கவரும்
போத மருவுந் திருமேனிப் பொற்பே விழியெ லாங்கவரும். (கங)

உதிக்குங் குணபா லிளங்கதிரு மொவ்வா வென்னு மணிமகுட
மதிக்கும் வயிரங் காலியாத்த வாகு வலய மணிசெய்குழை
பதிக்கு மதாணி வெண்டரள மாலை வயிரம் பயில்கடகந்
திதிக்குந் தண்டை சிலம்புமுதற் றிருவா பரணம் பலசமைத்து. (கச)

குடையுங் கொடியு மொலியல்களுங் கோணத் தண்டங் களுங்கோண
லடையுந் தண்டங் களுஞ்சிவிறி யால வட்டங் கவரிகளு
மிடையு மகர தோரணமும் விருதா வளிமற் றனபலவு
மிடையு முதலு மீறுமிலா விறைவ னுவப்ப நனிசெய்து. (கரு)

பரியுங் கனக சிவிகையுநற் செம் பங்கிக் குறுந்தாட் பூதமும்வெங்
கரியு மயிலேற் றிடபமுமொண் கமர் பழுத்த கயிலாய
கிரியுங் கனக மணித்தேருங் கிளக்கு மிவைமுன் னூர்தியெலாந்
தெரியும் பிரபை கொழுந்துவிடச் செய்து செய்து முடித்தனனால். (கசு)

பலவா நிறத்த நேத்திரமும் பைம்பொ னிழைசா லம்பரமு
நலமார் முத்த மணிகோத்த நகுமா டியற்று கவிகமும்பன்
னிலமார் பரிவட் டம்பலவு நீடு பிறவும் வருவித்துப்
புலமார் பஃறே யங்களுக்கும் பொருந்த முடங்கல் போக்குவான். (கஎ)

திருந்து குருந்தப் பெருந்துறையிற் றிகழ்மா ணிக்க வாசகர்க்குப்
பொருந்து மிதனை மதியமைந்து போந்து திகழுந் திராவில்
வருந்து தவிர்க்குந் தரிசனமா மற்றக் காண்முற் பத்தாநாள்
விருந்து விழிக்காம் விழாவினுபக் கிரம மிதனை விழைந்துணர்க. (கஅ)

வந்து தரிசித் தெண்ணியவை யனைத்தும் பெறலா மெனவரைந்து
முந்து முடங்க லொடுதூது போக்க முனிவின் றரசரெலா
நந்து மகிழ்ச்சி யொடுமேற்று நண்ணு பரிச னங்களொடு
மிந்து தவழிற் பெருந்துறைவந் தெய்தி னார்க ளணியீண்டி. (ககூ)

வந்த வரசர் புரூரவா மன்னன் றனைக்கண் டடிபணிந்து
சந்த மருவும் பெருங்காத றழைத்து நிற்பப் புரூரவனு
மந்த மில்லாப் பேருவகை யமைய முகமன் பலகூறி
முந்த மருவு மவரவர்க்குத் தக்க விருக்கை முறைகொடுத்தான். (௨0)

தெளிமா ணிக்க வாசகர்தந் திருநா ளின்று முதலென்று
களிகூர் வளமைப் பெருந்துறையில் வாணர் பலருங் கடைப்பிடியின்
வளிசான் மறுகு மணிமாட மாதி வயங்க வலங்கரிமி
னொளிசார் தரவென் றறிவித்தா னுரிபோர்த் தியமா முரசத்தால். (௨௧)

வாத வூரர் பெருமாற்கு வயங்கு திருநா ளெனக்கேட்டுச்
சீத வயல்சூழ் பெருந்துறையிற் றிருந்த வாழு மவரெல்லா
மோத முடியாப் பேருவகை யுற்றுப் பலவுஞ் சேகரித்துக்
காதன் மருவ வலங்கார முழுதுங் கவின வாற்றுவார். (௨௨)

வான மறைக்குங் காவணமிட் டதன்கீழ் வயங்குஞ் செம்பட்டா
லான விதானம் பொருந்துறயாத் ததுசூழ் தாக்கொய் துகிறூக்கிக்
கான மெனச்செங் கழைக்கரும்பு கதலி கமுகு கால்யாத்து
மான விளநீர்க் குலைபலவா வயங்கத் தூக்கி யலங்கரித்தார். (௨௩)

வேதி யமைத்து நறும்பனிநீர் விராய சாந்தங் கொடுமெழுகி
யோதி முடியா முத்தமிடித் தூற்ற பொடிக்கோ லம்புனையாச்
சோதி மணிப்பொற் சுடரமைத்துத் தூநீர் நிறைபொற் கும்பநிரீஇப்
போதி யலுமா தொடுத்தநறும் பொற்பூ மாலை கொடுபுனைந்தார். (௨௪)

முன்ன மணிந்த கலன்வெறுப்பார் முனிவில் புதிய கலன்பொறுப்பார்
மன்ன நவவண் கலையுடுப்பார் மலர்கள் கொய்து தொடைதொடுப்பா
ரன்ன நடையார் தமைச்சிறப்பித் தழகு பார்த்து நயந்தெரிவார்
சொன்ன மகளிர் நடம்புரிய நோக்கி மகிழ்விற் றனைதருவார். (௨௫)

தெருவிற் புழுதி முழுதடங்கத் திருந்து பனிநீ ரிறைத்திடுவார்
பொருவிற் காமன் சமழ்ப்பெய்தத் தம்மைப் புனைந்து வெளிபயில்வார்
திருவிற் கொடுபோய் விருந்தினரைச் சிறப்ப வூட்டி யுபசரிப்பார்
மருவிற் பொலியுந் தொடைபுனைந்து வண்பா கிலையு நல்கிடுவார். (௨௬)

தங்க ளுறவா யுள்ளாரைத் தரிசித் திடுமா வரவழைப்பா
ரெங்க டவத்தா மிகப்பெரிதா விந்த விழாநோக் குதுமென்பா
ருங்க டவத்துக் கொப்பிலையென் றற்றூர் நகரத் தனைப்புகழ்வார்
திங்க டவழு மாடமெலாந் திகழப் பலகொண் டலங்கரிப்பார். (௨௭)

கரிய குழல்யோ காம்பிகைக்குங் கருணை யான்ம நாதருக்குந்
தெரிய விழாச்செய் வதுகுறித்தான் செங்கோன் மன்ன னவன்கன்வில்
விரிய மலர்செய் குருந்தநிழன் மேவி யவரே யெழுந்தருளிப்
பிரியம் வாத வூரருக்குப் பிறங்கச் செயலென் றுரோன்பார். (௨௮)

செய்ய தமிழ்நாட் டென்னார்க ளியாருஞ் செறிந்தார் திருநாண்முன்
வைய முழுதுஞ் செறியுமினி வைகற் கிடம்போ தாதென்பார்
வெய்ய நகரின் புறமனைத்து மிடைந்த படமா டங்களென்பார்
மைய வாவு சோலையெலாம் வகுக்க வேண்டு மிடமென்பார். (௨௯)

இந்த வண்ண நகர்வாழ்வா ரியாருந் திருநா ளெதிர்பார்த்துச்
சந்த மலியும் பெருவகை தழையப் பொலிந்து பயில்காலை
யந்த மருவா விழாக்கொளுநா ளணிய தாக வதுமனங்கொண்
டெந்த வரச னுபக்கிரமஞ் செய்வீர்.மறையீ ருறவென்றான். (௩௦)

வேறு.

அறைகழ லரச னுரைத்தசொல் லுளங்கொண் டாதிசை வருமறை யோரு
நறைகமழ் கமல மலர்புரை யிடக்கை ஞானபோ தகமொரு வலக்கை
முறைதெரி ஞான முத்திரை பதித்த முழுப்பிர சன்னமாய் நிற்கு
மிறைதிரு விழாவை நடாத்துத றணிந்தா ரெதுபுரி குவதென வாய்ந்தார். (௩௧)

ஒலிகெழு கழற்கான் மன்னவ ரேறே யொள்ளிய வாதவு ரடிகள்
வலிகெழு விழாவை நடத்துக வென்றாய் வயங்குமுற் சவம்பல விதமாம்
பலிகெழு மவற்று ளெதனையாந் துணிந்து பண்ணுத லுரைத்திநீ யென்றார்
கலிகெழு கடல்சூழ் புடவியாள் பவனுங் கருத்துற விருத்தியஃ துணர்வான். (௩௨)

மறையவர் வினவுக் கெவ்விடை கொடுப்போம் வயங்குற முன்னைநாட் டவத்தா
னிறைதவு மியன்பா லிஃதுண ராதே னினைப்பதி னுவதென் னென்று
கறைதப வெண்ணி யிருக்குமக் காலைக் கருதிலம் மன்னவ னெடுநாட்
குறையறப் புரிந்த பெருந்தவ முருவங் கொண்டனைத் திடுதிறம் போன்று. (௩௩)

தூயமா ணிக்க வாசகர் திருநாள் சூழ்கட லுலகெலா முய்தற்
காயகா ரணமா நடத்துமின் றூரென் றறைமொழி யஞ்செவி யேற்று
சேயமோ டதுகண் டிடுதிற நிரம்ப நினைந்துமா னவர்குழாஞ் சூழத்
தாயனு னெங்க டமிழ்முனி யாங்குச் சார்ந்தன னரசது கண்டான். (௩௪)

பதைபதைத் தெழுந்து விரைந்துமுன் சென்று பாததா மரையிசைப் பணிந்தான்
புதையிருள் கிழிக்குங் கதிர்வர வெதிரம் போருகத் தகமுக மலர்ந்தான்
சுதைநிக ராசி மொழிந்துநீ றளிக்கத் தூமலர்க் கைவிரித் தேலா
வதைநுத லணிந்து மீளவும் பணிந்தா னலங்குதன் னிருக்கைகொண் டணைத்தான்.

தூயவிட் டாமிட் டிருத்தினன் பூசை தொடங்குபு செய்துமுற் றியபின்
மேயவம் முனிவ னிருக்கென விருந்து விண்ணப்ப மொன்றுள தென்று
ஞயமற் றஃதென் னெனத்தவ மியர்பே ரருளினு லடியனித் தலததுப்
பாயபல் சிறப்பு முணர்ந்தன னீங்குப் படர்ந்தவன் றரிசனஞ் செய்தேன். (௩௬)

விழாவது நடத்தற் கெண்ணினேன் வேத வித்தகர் கனவிடைத் தோன்றிக்
கழாமணி யனைய வாதவு ரருக்கே கருதிய தாற்றென்று காத்தார்
தொழாவடி யேனு மஞ்சொலும் பலவுட் டுணிந்தெது செயலென மதித்தேன்
வழாநிலை முனிவ நின்வர வெதிர்ந்தேன் மற்றஃ தருள்செய்நீ யென்றான். (௩௭)

புண்ணிய மளாவும் புரூரவா மன்னன் புகன்றிது கேட்டிட வளவாத்
திண்ணிய புகழ்சால் செந்தமிழ் மணக்குஞ் செய்யவாய்க் குறுமுனி யுரைப்பான்
கண்ணிய பரம னுயிரெலா முய்யக் கரிசில்வே தாகமம் வகுத்தா
னெண்ணிய வவற்றாற் புரிகிரி யையுமோ ரிருவகை யென்மனார் புலவோர். (௩௮)

வேதமார்க் கமெனும் வைதிகக் கிரியை மிளிர்சுவர்க் காதியாம் போகம்
போதநல் குபுபின் சனனமுண் டாக்கும் பொருந்திய வாகம மார்க்கத்
தாதரச் சைவக் கிரியைதா னிட்ட சித்தியு மமையுமோக் கமுந்தந்
தேதவெம் பிறவி யுருவகை செய்யு மாதலா லிஃதொன்றே விசேடம். (௩௯)

பரசிவ னுரைத்த வாகமப் படியே பண்ணுதீக் கையும்பல விதமாம்
விரவுநோக் காதி யவுத்திரி யீறு விளம்புவ ரீறிரு வகையாம்
வரமிகு குண்ட மண்டல மாதி வகுத்துமா ணாக்கன்வெம் பாசத்
துர்னற வெழுத்தைத் துணர்த்திடு தீக்கைக் குரைப்பராற் கிரியையென் றொருபேர்.

அறைதரு குண்ட மண்டல மாதி யனைத்தையும் வெளிப்படை யின்றி
முறைமையிற் குரவன் மாணத மாக முடித்துமா ணாக்கன்வெம் பாசப்
பொறைதவிர் தீக்கை ஞானமென் றுரைப்பர் போற்றிய விப்பெருந் தீக்கை
நிறைதரு விசேட மிவையடைந் தவர்க ணிமலன்று டகவடைந் திடுவார். (௪௧)

ஆயவித் தீக்கைக் கருகரல் லாதா ரபக்குவர் விடரிழி குலத்து
மேயவர் சைவா சாரநிந் தித்து விட்டவெம் பாதகக் கொடியோர்
நியமற் றிவரும் பறவைபல் விலங்கு செறிதரு முதலிய வுயிருந்
தூயநற் கதியிற் புகும்வகை யியற்றுஞ் சுந்தரத் தீக்கையொன் றுளதால். (௪௨)

எண்ணுமற் றதன்பேர் சாம்பவ தீக்கை யெனப்படு மண்டலம் வன்னி
கண்ணுவண் பலிகா யகர்மகேச் சுரரே கருகட மந்திர தேவ
ரெண்ணுமற் றிவ்வா றெண்ணுபு செயலா மொளிரிதே யுற்சவ மாகுங்
கண்ணுமற் றதுவுமங் கிருத்தியப் பெயராற் கவின்பெறுங் காவல ரேறே. (௪௩)

தரைபுக ழனுஞை யங்குரம் வாத்து சாந்திவெள் ளிடபயா கஞ்சேர்க்
கரைதரு பேரி தாடன மாதி காமரு கிருட்டியே யாகும்
புரையிறே வதாவா கனம்யாத்தி ராதா னம்புகல் வாகனோற் சவமே
வரைதுவ சாரோ கணஞ்சந்தி யாவா கனமுதற் றிதியென வகுப்பார். (௪௪)

பலிபுன லாட லத்திர யாகம் பகர்யாகாங் குரங்கண யாக
மெலிவில்காப் பணித லாதிசங் காரம் விழைபுனற் கருமங்கா வராக
கலிவிலா வவரோ கணமுதன் மறைப்பா நடுபெ தேசஞ்செந் தமிழாற்
பொலிமறைப் பூசை குரவனுற் சவமுற் புகலனுக் கிரகமென் றுரைப்பார். (௪௫)

சொற்றவிவ் விதத்தா லுற்சவ மைந்து தொழிலெனப் புகலுவ துணர்தி
கற்றமன் னவவிவ் வுற்சவந் தீக்கை கைக்கொளா ராதியர் பொருட்டென்
றற்றமின் றுமுன் னுரைத்தன மெனினு மவுத்திரி யாதிபெற் றுரும்
பொற்றமெய்ஞ் ஞான யோகருங் கண்டு போற்றிடப் படுவதென் றுணர்வாய். (௪௬)

ஆயவித் தகைய வுற்சவ சேவை யன்புறச் செய்பவர் பரம
னேயமிக் கவரா யிகம்பர போக்க நிலவுறப் பெற்றுவாழ் தருவார்
மாயவ னாதித் தேவரும் வந்து வந்துசே விப்பர்யா மிங்கு
மேயது மிதற்கே திருவிழாச் சேவை விழைதரார் பிறப்புமெய்ப் பிறப்பே. (சஅ)

மருவுசா கலியம் பாவனஞ் சாந்த மாங்கலி யம்மென நான்காம்
பொருவிலுற் சவந்து வசமுயர்த் துதன்முற் புனற்கொடை யளவுஞ்செய் திடுதல்
வெருவில்சா கலியத் துவசமேற் றமல் விழைபுனற் கொடைவரை யியற்ற
லொருவில்பா வனவுற் சவமென வுரைப்ப ருமாபதி யாகம முணர்ந்தார். (சஅ)

விழைதரு துவசா ரோகணங் காலை விழவுமில் லாமலே மாலைத்
தழைவிழா மட்டு நடத்துதல் சாந்தந் தாணிவந் துதயமாங் காலைக்
குழைவிழா மட்டு நடத்தல்மாங் கலியங் குறிக்கொள முதற்சொல்சா கலிய[தோர்.
மழைமதம் பொழியுங் களிற்றினு யொன்பான் வகைப்படு மென்பகற் றுணர்ந்

சவுரஞ்சாந் திரஞ்சா வித்திரங் கவுமா ரந்தைவீ கந்தழை பவுதம்
பவுதிகங் கனஞ்சை வம்மென முறையே யிருபத்தேழ் பதினேழு பதினேந் [னுந்
துவமையில் பதின்மூன் றொன்பதே ழைந்தா மொருமூன்றொன் றற்றுநா லென்
தவமுளார் புகழு மாகமஞ் சிறந்த தவம்ய முனிவன்மா னக்கா. (ருo)

பன்னிய விவைவண் கொடிமிசை யேற்றிப் பலியிட்டு நடத்துவ தொன்று
துன்னிய விரண்டு மின்றியாற் றதலு மொன்றுசொல் கொடிமரம் பதியா
மன்னிய படமே பசுவலி கயிறு வலிதரு பாசமா தலினு
லுன்னிய திரிப தார்த்தமாந் துவசா ரோகணத் தொடுசெயுற் சவமே. (ருக)

உத்தம மாகு முனைத்தபல் வகையு ளோங்குதை வீகவுற் சவத்தை
வித்தகக் கொடியேற றொடுபலி யிட்டு விழைதரப் புரிதியென் றுரைத்தான்
முத்தமிழ் முனிவன் புரூரவா வெழுந்து முன்பணிந் தனனுளங் கொண்டு
சத்தமை மறையோர் தமக்கெலா முரைத்தான் றக்கதென் றேற்றிது செய்வார். ()

பின்னரு மலய முனிவர னுரைப்பான் பிறங்குதை விகமெனுந் திருநாட்
கென்னரு மொன்பா னெனவுரைத் தரெனினும்பத் தும்பதி னொன்று
மூன்னரு நாளு மரமென வமைத்தார் மொழிந்தமற் றிதுகடைப் பிடித்துத்
துன்னரும் விழாவை நடத்தலா மென்றான் சொற்றதத் தமமெனத் துணிந்தார்.()

எழுபரித் தேரோன் மிதுனஎா சியிற்செ லேற்றமா மதிமுத னாளின்
முழுதுண ராதி சைவனுங் கொருவன் முந்துகா லையின்மயிர் களைந்து
கெழுதகு கழுவா யேனவு மாற்றிக் கிளக்குமா லையினாதி ராடி
வழுவறு நியமம் பற்றுபு சந்தி வந்தனை யாற்றிநீ றணிந்து. (ருச)

பூதசுத் தியினோ டந்தரி யாக பூசைசெய் துறப்பவித் திரனாய்
மேதகு சிரத்தை மீமிசைப் பொங்க மேதினி வளம்படு நிமித்த
மாதரந் தருசா நபக்கிர மஞ்செய் ததுகிறை வேறுமா றனுஞை
காதரந் தபப்பெற் றொண்மணி வார்த்தைக் கடவுளா னைப்படி யிறக்கி. (ருரு)

அந்தமில் கருணைக் கணேசனைப் போற்றி யான்மநா யகர்சிவ யோகச்
சந்தமா தேவி குருந்தடி யமரா சாரியர் திருநட நவில்வார்
கந்தவே ளுமை யொருங்குபெற் றெழுந்து கடையனேன் மனமுமெக் குருக
முந்தவா சகநன் கருளினா ரமரு மொய்யொளி யாலய மடைந்து. (௫௬)

மன்னிய துவார வானவர் பூசை வண்கருப் பாவர ணத்திற்
பன்னிய பூசை யியற்றுபு பஞ்சா தனம்பஞ்சா வரணநற் பூசை
நன்னிய மத்தி னியற்றுபு நியாசா திகணயந் தாகமப் படிசெய்
துன்னிய வாத்து சாந்தியப் பாறசெய் துறமிருத் திகைகவர்ந் ததன்மேல். (௫௭)

மேயவங் குரமாம் படிபல வித்தும் வித்திய பின்புநா ளுணர்ந்த
தூயவா ரியன்றன் முன்வலக் கரத்துச் சுடர்ந்தபொற் காப்புநா ணணிந்தா
னாயபின் மறுநாட் பரணியிற் காலை யான்மநா யகர்திரு முன்னர்ப்
பாயசுந் தரபாண் டியனியற் றியதாய்ப் பரவிய மணிசெய்மண் டபத்தில். (௫௮)

மன்னிய சாந்தி செய்துநம் பெருமான் மாணிக்க வாசக வள்ளல்
பன்னிய சிறப்பி னாங்கெழுந் தருளப் பண்ணினா னாயதோர் காலைத்
துன்னிய மலரோன் மாயவன் முதலாஞ் சுரர்களு மகத்தியன் முதலா
முன்னிய முனிவ ரியாவரு மற்ற யாவரு மாவருமொய்த் தனரால். (௫௯)

ஆயகா ரணரா மான்மநா யகரை யாங்கொரு வைதிக மறையோன்
பாயபே ரன்பி னோத்திரஞ் சாத்திப் பாங்குசால் பூசனை செய்து
தூயசாந் தலர்மா விகைபரி கலமுற் சொல்பரி வட்டத்தோ டடைந்து
நாயனார் கொளச்செய் துடன்கருப் பூர நகுசுடர் விளக்கமேந் தியபின். (௬0)

முந்திருக் காதி யாவையு மெழுதார் மொழிந்தரு ளம்பல வாணர்
தந்திருக் கையா லெழுதிய வருமை சாறிருக் கோவையார் மறையை
நந்திருக் காதி யாவையு மொழிய நக்கபொற் பீடமே லேற்றி
யந்திருக் கார யாவருங் காண வழங்கிய பூசைசெய் ததன்பின். (௬௧)

பெருந்துறைக் குருந்த நீழல்வீற் றிருக்கும் பெருங்கரு ணாநிதி யார்நன்
முருந்துறழ் மூரல் யோகநா யகிசேர் மூலகா ரணனொடு முத்த
ரருந்தமிழ் வாத வூரரை நோக்கி யருளினா காயவா ணியினாற்
றிருந்தவீ றுரைப்பா ராவயிற் செறிந்த தேவர்மு னியாவருங் கேட்ப. (௬௨)

வேதவே தாந்தம் விளம்புமித் தலத்து மேயயா மூலவ ராவேம்
போதமே யுருவாய்ப் போந்தநீ ரெவரும் புகழ்தரு முற்சவ ராவீ
ரோதவாஞ் சோமாக் கந்தர்முன் னாக வுற்றந மங்கிச மெல்லாஞ்
சீதமார் குணநீ ரொருவரே யடையத் திருவருள் புரிந்தன மதனால். (௬௩)

நாமினி துலைக்கு மூர்த்திக ளனைத்து நகவுமக் குதவின நமக்குத்
தாமினி தாகப் புரியபி டேக நிவேதனஞ் சாத்துபூ மாலை
யாமினி பகலாம் படியணி மணிப்பூ ணிவைமுதற் சிறப்பிப்பர் பவத்தோம்
போமினி யவர்பா னாமிடப் பாகம் பொருந்தினா னொடுநனி மகிழ்வேம். (௬௪)

ஆயிர நமக்குச் செய்வ தினம்பா லன்புசெய் தமக்கொன்று செய்வார்
பாயிர மறையு மளப்பதற் கரிதாம் பயன்பெற நாமனி கொடுப்போ
மேயமற் றமக்குச் செய்பணி யெமக்கு விழைந்துசெய் பணியினும் விசேட
மாயதென் னென்னிற் புதலவர்மாட் டியற்று மனபுதந் தையர்க்குவப் பாமால். ()

மன்னிய நமக்கு நிகழுமுற் சவத்தில் வயங்குறச் சத்திர மமைத்துப்
பன்னிய வன்ன தானஞ்செய் தோர்க்கும் பருகுநீர் வாக்கிடு வோர்க்குந்
துன்னிய மற்றைத் தானஞ்செய் வோர்க்குஞ் சுராதிபன் பதமுத லாக
மின்னிய வெவையு நல்குவோ மீற்று வினவருநம் பதங்களுங் கொடுப்போம்.(சுசு)

உம்மைநா மாக வுளங்கொடு வழிபா டுஞற்றுவா ரொருபொழு தினுநா
மம்மையோ டகலா தமர்திருக் காசி யாதியில் வசித்திடு பேறுஞ்
செம்மைசேர் கங்கை முதனதித் தீரஞ் செய்தகோ தானமுற் பேறும் [மே.
வெம்மைதீர் தாப்பெற் றுவப்பரோன் றனந்தம் விரும்புறும் விழாச்செய்புண் ணிய

நம்மைநந் தமக்கு வேறென நினைக்கு நவலொருக் கொடிபா தகத்தோ
ரிம்மையெவ் வளவு திருவிருந் தாலு மிழந்துதீ நிரப்புக்கோட் பட்டுச்
செம்மையொன் றின்றி மறுமையில் வெய்ய நிரய மெலாந்துளைந் திடுவா
ரம்மைசா லுள்ளக் கயவர்தா மிருந்த வூரினுங் கதியிரா தகலும். (சுஅ)

எண்ணருஞ் சனன மிருஞ்சிவ தீக்கை யெய்தியு மாகம புராண
நண்ணரும் பொருளை நனியுளத் துணர்ந்து நவிலருட் குறிப்பூசை செய்துங்
கண்ணரு நம்பா லன்புமிக் காற்றிக் கைவந்த நூக்கமோத் தமரே
யெண்ணருந் தவஞ்சா லுமக்கன்பு செய்யும் பான்மையர் மற்றையோர்க் கரிதால். ()

அகளமா யமரித் தலத்தடி யேனை யாட்கொளப் பெருங்கரு ணையினாற்
சகளமாய் வந்தீ ரெனைத்தரி சித்தோர் தாம்பெற லென்னென வினவி
னிகளமாம் விருத்தி யெனப்புக லிம்மை நிகழ்ச்சிசான் மறுமையென் றோது
முகளமாம் பேரின் புறவனு பவித்தீற் றொருவினம் மடிக்கலப் புறுவார். (எ0)

ஆண்டினுக் கிருகான் மிதுனமா மதியுத் தரத்தனின் மிதுனலக் கினத்திற்
பூண்டிய றனுமா மதியிலா திரையிற் போந்தனு லக்கின மதனி
லீண்டியா நம்மை யாண்டருள் காட்சி யாவர்க்குங் காட்டுவோங் காண்போர்
வேண்டியா தரிக்கு நமதடிக் கலப்பின் மேவுவா ரென்றரு ளினரால். (எக)

அதிசயம் பயப்ப வான்மகா யகர்பே ரருளினா லருளிய வரத்தை
மதிகலம் பொலியும் வானவர் முனிவர் மானிடர் விருப்புறக் கேட்டுத்
துதிகெழு மினைய திருவிழாச் சேவை துணிபுறச் செய்தலே யெளிதிற்
கதியடை யுபாய மெனக்கடைப் பிடித்துக் களிமகிழ் பூத்தனர் மாதோ. (எ௨)

அதிசயம் பயப்ப விலவநடக் கதன்பி னண்ணன்மா ணிக்கவா சகனைப்
பதிகொடி மாஞ்சா ரிடத்தெழுந் தருளப் பண்ணிப்பி னிடபயா கஞ்சீர்
மதிகொள்பே ரிகைதா டனந்தேவ தாவா கனத்துவ சப்பிர திட்டை
துதிதரு கணேச ரொடுபடப் பிரதக் கணமிவை சூழ்ந்துசெய் ததன்பின். (எ௩)

கருதியாத் திராதா னந்துவ சாரோ கணமாசிர் வாதமுற் பலவுஞ்
சுருதியா கமச்சொற் படிமுடித் ததன்பின் றூயவா ராதனஞ் செய்து
பொருவருந் தட்டி சுற்றபு துவசம் பொலிதரு வுடைப்பிர கார
மருவுற வலஞ்செய் தாயவாத் தான மண்டபஞ் சேர்த்துப்பூ சித்தே. (எச)

அன்றிர வகம்யா காவ்நூரம் யாக மலங்கொளி வாதவூர்ப் பெருமான்
றன்றிரு வலமுன் கையிற்பொன் செய்து தயங்குநா ணடுத்தினி தணித
றன்றிய யாக மந்திர தேவர் சூழ்பலி நாயக ராகச்
சென்றிசை வாத வூரர்தம் மோடெண் டிக்குபந் தனமுறச் செய்து. (எரு)

குடைகொடி யாதி விருதுக ணெருங்கக் கொண்டல்வெங் குறப்பணை முழங்க
மிடைதரு மலங்கா ரம்பல வாங்கு விராயினர் கட்புலன் கவர
வடைப்பல்வா னவரும் பூமழை பொழிய வரகர வென்றுபன் முனிவர்
புடையுற கெடுஞ்சச் சென்றுலாப் போதும் பொலிவினைத் தனித்தனி வகுப்பாம்.()

ஆதிகா ளினைய பெருந்துறை யடைபோ தணைந்தது சிவிகையா தலினுற்
சோதிசா லினைய சிவிகைக்கோர் முதன்மை தோன்றவூர் வதுகுறித் தாங்குப்
பாதிமா மதியஞ் சூடினு ரருள'ற் பயில்விழாப் டாணிகா விரவி
லோதிசான் முனிவர் முதலியோ ருவப்ப வொளிருமற் றதினுலாப் போந்தார். ()

திரிபுவ னமுஞ்சொல் பெருந்துறை மேய செல்வர்தா மருளிய வரத்தா
லரியமற் றவர்வை டைத்தமக் குரிமை யாமெனல் விளக்குதல் போலக்
கரிசில்கார்த் திகைநாட் காலையில் வெய்ய கதிர்செய்சூ ரியவிருத் தத்தில்
விரியுமா லையினி னிலாச்செயு மதிய விருத்தத்தின் மேயுலாப் போந்தார். (எஅ)

ஒள்ளிய தாய வுரோகிணி நன்று ளுயர்குண வழுதிமக் றிரியாய்
வள்ளிய போகந் துய்த்ததற் கேற்ப வண்கதி ருதயஞ்செய் காலைத்
தெள்ளிய செம்பொன் மஞ்சமு மாலைச் செய்யகோ விரதமு மிவர்ந்தே
யுள்ளிய வழிஞர் கண்கெண் களிப்ப வுவந்துலாப் போந்தனர் மன்னே. (எகூ)

மான்றலை நன்னாட் காலையிற் கல்வி வளத்தினுக் குடைத்தன் றன்மை
தோன்றலை யாவஞ் சுமக்தறி விக்கு றமக்கெனச் சேடவா கனத்து
மேன்றலை விலாத கயிலையி னிருப்ப மெமக்குள தெனவெறித் தாங்கு
வான்றலை வணக்கு கயிலைவா கனதது மாலையி னிவர்ந்துலாப் போந்தார். (அ0)

சேவைசெய் பவர்மண் கண்டுசே விக்கத் திகழுமா திரைநன்னாட் காலைக்
கோவைசெய் தாள வடம்பல செறியக் குயிறறுபொற் றண்டிகை மீதுங்
காவைவைத் துயர்வின் கண்டுசே விச்சக கருதிருண் மாலைவெம் பியலா
மாவயி னமையப் பூதத்தின் மீது மமர்ந்துலாப் போந்தன ராயர். (அக)

ஒருபுனர் பூசக் காலையிற் றெய்வ வுத்தர கோசமங் கைக்கண்
ணிருமல ரருள்கா வித்திர திருவ கேருறத் தெரிந்ததற் கிணங்க
மருமலர் செறியுங் கற்பகத் தடியின் மாலைகாற் கோட்டிப முடியிற்
றிருவளர் வாத வூரர்தா மருவித் திருவுலாப் போந்தனர் மாதே. (அஉ)

பூசநாட் காலை மறையுணர் விதிரன் புலமைதோற் றெழுதிறம் விளங்க
வாசநாண் மலரவா முனத்தினைக் கொடுக்க மற்றது கவர்ந்துகொண் டதன்மே
லீசனு மருளா லிவர்க்கென விவர்ந்து மெய்திய மாலையிற் றருப
வாசரென் றுரைத்தற் கிணங்கவெள் விடைமேல் வைகியுந் திருவுலாப் போந்தார்.()

புத்தனு மிருந்து முகைதீர்த் திலமியாம் புவனங்காண் வரவது தீர்த்த
வத்தனார் தலைமத்தாங் குதல்விதி யெனினு மபக்குவத் தாலது கொள்ளா
ரெத்தனைப் பிறந்தோ மென்றுமால் கவலை யெய்துமா யிலியநாட் காலைச்
சுத்தவா ளரியு மாலைவாம் பரியுந் தா[illegible]பு திருவுலாப் போந்தார். (௮௪)

தருமகத் திருநாட் காலையி லான்ம நாயக ரேயிவ ரென்று
மிருமொழிக் கிணங்கத் தேவர்யா வருமாம் வியன்மணித் தேருலாப் போந்து
தொருகழு வாய்நீ ராடியா ரேவார் தோற்றமுந் தாமென மாலைத்
தருநட நவில்வார் திருவுருக் கொண்டு தழைமறு கிடையுலாப் போந்தார். (௮௫)

பூரநாட் காலை யான்மநா யகர்முற் புண்ணியர் தாஞ்செல வுய்த்து
நாரவா மவர்க்குப் பட்டணி சாத்தி நடுற நிவேதனஞ் செய்து
பாரவார் தீபா ராதனம் புரிந்தப் பட்டமா விகைமுதற் பலவுஞ்
சேரநம் வாத வூரருக் காக்கித் தீர்த்தத்துக் கருளைப்பெற் றெழுந்து. (௮௬)

நித்திய பலியிட் டிற்சவர் திருமா னிகழ்தரு பேரிகை யடித்தல்
சத்தமை தருதே வதாவாக னவிசர்ச் சனைந்தீர்த்தாங் குரமிடவை யாற்றி
யுத்தமச் சுப ணுற்சவம் புரிந்தே யுறுமுனை விசர்ச்சனை மாற்றி
வித்தக மருவ நடாத்துபு தமிழாம் வேதபூ சாவிசர்ச் சனமும். (௮௭)

சாரமென் றுலோகா யதத்துற லெனக்குச் சவிர்க்கவென் றீந்தி ருய்ப்பச்
சேரவந் தொளிரு மிந்திர விமானஞ் செறி நுலாப் போதுறு தீர்த்த
சாரமென் றுரைக்குந் தேவதீர்த் தத்தடச் சார்ந்துதீர்த் தங்கொடுத் தப்பாற்
சேரவிட் டிமைக்கு மணித்தளி புகுந்து திருமக விசர்ச்சனஞ் செய்து. (௮௮)

வாதவூ ருதித்த முலவர் தமக்கு மகரும்ப நூம்புன லாட்டிப்
போதவா சிர்வா தம்புரிந் ததற்பின் பொருந்திய மாலையி லெல்று
மேதமே வாத சத்துவத் தின்னா ரெனவெறிந் தாங்குவேனை பொன்செய்
சீதமா ரிரத மிவருபு சூழ்ந்து திக்குபந் தலைமொழிந் ததன்பின். (௮௯)

கொடிமரத் தருகுற் றுயர்கொடி யிறக்கிக் குருந்தநன் னிழலமர் கின்ற
செடியவ ரான்ம நாதர்சந் நிதியி னிலவுதண் டபத்தெம தனஞ்சே
ரடியுடை வாத வூரரைச் செலுத்தி யாகர வென்றனை கூப்பிப்
படியவர் வானக் குடியவ ரெவரும் பணிந்தெழுந் தனர்மகிழ் சிறந்தார். (௯௦)

எறுசா ருவசா ரோகண முதலா வியம்ப வ ரோகண மனவுங்
கூறுமோ ரிரண்டு காலத்தும் விசேடங் குலவபி டேகமே யுணவே
வேறுவே ருகத் தட்டிசுற் றுதலே விசாரணைச் சைவமா முனிவர்
பேறுசெய் திருக்கை தொடுபெரி வட்டம் பிறங்கிய திருமலர் மாலை. (௯௧)

சுவையதெங் கங்காய் சொன்னப்பூ வாதித் தொகைகொடு மிகச்சிறப் பித்தல்
குவைகொளும் பூகெற் பொரிவெண்பொன் மலரே குலவிய பொன்னிறு மலரே
யிவையுறக் கலந்தே யிருகையி னுலு மெடுத்தெடுத் திறைத்தல்கண் ணேற்றி
னவையறத் துகில்சூழ்ந் தெறிதல்கோ கனக கருமல ரடியுறை வைத்தல். (கூஉ)

பகலிர வோவாப் பலியிட லின்னும் பரமனு கமத்தினிற் புகன்ற
தகவிதி யெவனை வவளவு மொருங்கு தகப்புரிந் தனர்வழு வாதே
யிகல்பவப் பகைக்கு மருந்தென காளு மியறரி சனத்திரு விழாவும்
புகல்வதற் குரிய துயினே னியானும் பொலிதவ மிக்குளே னன்றே. (கூரு)

இராப்பதி னெட்டு நாழிகை யளவி லெங்கடே வான்மநா யர்க்குங்
குராப்புனை கூந்தல் யோகநா யகிக்குங் குறிக்கொளு மற்றைவா னவர்க்கு
மராச்சுவை யுலக முய்யவந் துதித்த வண்ணலார் வாதவூ ரருக்கு
மொராத்திர வியம்பல் கொணடபி டேக முறுகிவே தனம்புரிந் ததன்பின். (கூச)

கோலமா ணிக்க வாசகப் பிரானுர் குறிக்கொளு மான்மநா யகர்தஞ்
சீலவே காந்த தரிசனம் பெற்றுத் தீபவா ராதனை கணடு
ஞாலமெய் தரிய மாவிய மேற்று நகுகருப் பூரதீ பமுமேற்
றேலவந் தின்று மெம்மையான் பொருட்டே யெழுந்தரு ளினர்மறை முழங்க. (கூரு)

விழையருட் சொக்க விநாயக ரகோர வீரபத் திரருல கீன்ற
தழையருட் செல்வி குருந்தமர் பரமா சாரியர் திருமுனம் புரியும்
பிழையக தீப நோக்குபு குருந்தப் பெருந்தகை யெதிர்முக மாய
வுழைவட முகமா யிருகரங் கூப்பி யும்பரா ரேத்திட வமர்ந்தார். (கூசு)

ஆயதோர் காலை யிவர்புரி வதுபோ லாங்கொரு வைதிக மறையோ
னேயமார் பரமா சாரியன் பூசை கிரப்புபு பட்டினுன் மறைத்துத்
தூயதா முபதே சக்குறிப் புணர்த்தித் தொக்கமா வியமெலா முதவி
மேயவா ரியரோ டிருவர்க்குஞ் சமமா விளங்குமா ராதனஞ் செய்தான். (கூஎ)

அரகர சிவவென் றகத்தியன் முதலா மருந்தவ முனிவரர் துதித்தார்
பரமவற் புதமீ தென்றய னரிமுற் பண்ணவ ரியாவரும் பணிந்தார்
காதலங் குவித்துக் கண்பனி சோரக் காமரு புரூரவா வாதிப்
புரவலர் பலருங் கண்டுகண் டுவகைப் புணரிவீழ்ந் தனரெழுந் திலரால். (கூஅ)

சிவகண மனைத்து மித்தரி சனமே திப்பிய மென்றுவப் புற்ற
பவமெனும் புணரி சுவற்றினே மென்று பாருளார் பலருமுட் குழைந்தா
ரவமென லொழிந்த தினியென வெவரு மறைதரா வாங்குநின் றெழுந்து
சிவமணங் கமழுந் தளிவலஞ் சூழ்ந்து சிறக்குமாத் தானத்தை யடைந்தார். (கூகூ)

யாவுமாங் கழுவா யெனுமபி டேக மியைதரப் பெற்றுநன் னுளின்
மேவுமா ணிக்க வாசகப் பிரானுர் விரும்புதஞ் சேர்க்கைபுக் கமர்ந்தார்
பாவுசீர் மிகுத்த மிதிலைவாழ் சனகன் பரவுபு முத்திபெற் றதனை
நாவுமெம் மனமுங் களித்திட வினிது நவிற்றிட லுற்றன மாதோ. (சOO)

புரூரவன் பெருந்துறையடைந்து திருவிழாச்செய்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் சசஎரு.

---

# சனகராசன்மூத்திபெற்றபடலம்.

வாத வூரர்தம்
பாத தாமரைப்
போத வாமன
மேத நீங்குமே. (க)

வேறு.

வாவிபயி றகட்டகட்டு வாளைவெடி கொண்டுவிழிக்
காவியரம் பையர்வெருவக் கற்பகத்தின் கழுத்தொடிக்கும்
பூவியலும் பெருவளஞ்சால் விதேகமெனப் பொலிநாட்டின்
மேவியபொன் மதிலுடுத்த மிதிலைமா நகர்வாழ்வோன். (உ)

கலைபலவுங் கற்றுணர்ந்தான் கற்கமுஞ் சமழ்ப்படைய
வலைவில்கொடைத் தொழில்பயின்று வரசரெலாம் பணிகழலான்
மலைபொருவு திண்டோளான் மாண்புசா றத்துவந்தேர்
தலையறிவின் றலையமைந்தான் சனகனெனு மியற்பெயரான். (ங)

அனையவன்றத் துவமுணர்ந்த வாசிரியன் றனையடையும்
வினையமுளத் தொன்றுகொடு விசேடவிலக் கணம்படைத்துப்
புனையவுள குடச்செருத்தற் புனிற்றாக்க ளோரிலக்க
நனையமிளிர் தாத்தொகுத்து நகர்ப்புறத்தோர் சார்நிறுவி. (ச)

புரவுபுரி பவர்களையும் போதமா றங்கமைத்துப்
பரவுமிவை தத்துவந்தேர் பவர்கொளக் கடவரென
வுரவுமுர சறைவித்தே யுவந்திருந்தா னக்காலை
விரவுவள வக்காட்டு வேதியரியா வருமுணர்வார். (ரு)

பொன்னினலங் கரித்துமிளிர் புனிற்றாக்கள் கவர்வதற்கு
நன்னிலைமைத் தத்துவந்தேர் நலஞ்சிறிது மிலமாரோ
மென்னிரை சனுமதியா னிருக்கும்விருத் தியுந்தவிர்ப்பான்
பன்னிவெனவ னுவதெனப் படருழந்தா ரனைவோரும் (சு)

அன்னபொழு தியாக்கியவர்க் கியனையடைஇப் பணிந்தெழுந்து
மன்னவன்செய் திறமுரைத்து மறையவர்கு வாமணியே
பன்னரிய பராபவமாம் பரவையமுந் தினநீயே
மன்னவொரு புணையாகி வாழ்விப்பா யென்றிரந்தார். (எ)

அரசர்திர வியங்கவர்த லடாததனி னுந்தானம்
பரசமையா தேற்பதனுற் பசுத்தானம் வாங்குதலோ
விரசவத னினுங்கொடிதா மெனத்தரும நூல்விளம்புங்
காரசாண மேற்கவியங் கக்குலையு மானுலும். (அ)

இரத்தமறை யவர்நிமித்த மிரப்பாமென் றொருப்பட்டுச்
சுரத்தகரு ணையளுகித் தொக்கவவ ரொடுமெழுந்து
வரந்தழையுந் திருமிதிலை மாநகரின் புறம்வந்து
பரந்தபசுக் களையேற்றேம் பனவர்நீர் கவர்மினென (க)

மறையவர்த மூத்தரியம் வாங்கியவா யுறயாத்து
நிறைசிகழி யவிழ்த்துதறி செருங்கமுடிக் தனரொருப்பட்
டறைகுடஞ்சுட் டொவ்வொன்று கவர்ந்தகம்புக் கனரப்பாற்
குறைவின்முனி வரன்சனகன் கோசகாத் துட்புகுந்தான். (கய)

இனியபசுப் புரந்தவர்க ணடந்ததனை யிறைக்கியம்ப
முனிவரவு தெரிந்தவனு மெதிர்கொண்டு முன்பணிந்து
கனியமையு முகமனுரைத் தழைத்துடன் தனலஞ்சார்
தனியமைதன் னிருக்கைபுகூஉத் தழுவுமா தனத்திருத்தி. (கக)

அருக்கியமுன் னையபுரிந் தஞ்சலித்து நின்றிடலு
மிருக்கெனவம் முனியுரைப்ப விருந்தவிரு வுதல்செய்வான்
றிருக்கினர்மா தவரேதே செவ்வியதத் துவஞான
மிருக்கின்முடி புரைத்தபடி யெனக்கியம்ப வேண்டுமென. (கஉ)

மன்னவபக் குவர்க்குரைப்ப தல்லாது மற்றையர்க்குச்
சொன்னவர்க ளவரோடுந் துனையகர கழுந்திடுவா
ரின்னலற நினக்குரைத்தற் கிழுக்கிலையா லினிதுரைப்பேன்
பின்னமறக் கேளென்று பேசுவா னம்முனிவன். (கஙு)

அத்திபா திப்பிரிய மாரிடத்து விளங்குவதோ
வொத்தியன்மற் றவருணர்வா ருணர்வரோ மறையர்கள்
சத்தியமாய்ச் சகத்தாயச் சகத்திற்குக் காரணமாய்ப்
பத்தியுளா யதின்விளங்கு பற்பலப தார்த்தமாய். (கச)

அப்பதார்த் தத்தினுக்குக் கருத்தாவா யமைசான்று
யொப்பவெலாந் தானுய்த்தா னல்லாதா யுறமனுவாய்ச்
செப்புமகத் தாயுருவ மருவமொடு சோவத்தை
பப்புமைங்கோ சங்களிந்தி ரியங்குணங்கள் பாறியதாய். (க௫)

வாக்குமனு நீதகோ சரமாய்மற் றுண்பெண்ணொடு
போக்குமவி யல்லாதாய்ப் பொலிகின்ற தேபிரம
நீக்குதலின் முதலதிது நிகழ்குரவ னுபதேசந்
தேக்குதலா லெலாம்பிரம மெனத்தெரித லேவித்தை. (கசு)

அடுத்தநிது காமென்ப தவித்தைமுன் றுவதிதே
யெடுத்தசக லமும்பரித்தி யாகஞ்செய் தின்பதுன்பம்
படுத்தசம மாப்பெரியர் பயிற்சியொடும் பிரமநிட்டை
தொடுத்தநிறத் தொடேடித் துணிவுபெற விருப்பதுவும். (கஎ)

ஆன்றசக லமும்பிரம மாகச்சிந் திப்பதுவு
மேன்றதன்செய் கையனைத்து மிரும்பிரமச் செய்கையென
வூன்றவுட்பா விப்பதுவு முயர்ஞான மாமிதுவே
சான்றநா லாவதெனச் சாற்றுவார் ஞானியரே. (கஅ)

ஒப்பிலதாய் வியாபகமா யுறுசுகத்தைக் கொடுப்பதாய்த்
தப்பில்பர மாய்வாசா மகோசரமாய்த் தழைவதுவே
செப்பரிய தேயமிஃதைந் தாவதுதி யானமெனில்
வெப்பிலுரு வருவிரண்டாம் விளம்பிஃதா றுவதுவே. (கசு)

சாக்கிரஞ்சொப் பனஞ்சுழுத்தி துரியமது தனைக்கடத்த
னீக்கமிலா விவையவத்தை நிகழிவையே ழாவதாம்
போக்கருஞ்சத் துவமிரா சதம்புகர்த்தா மதமென்னத்
தேக்குகுண மொருமூன்று மத்திறமுஞ் செப்புவாம். (உ0)

வெள்ளியது பெருங்கருணை மேவியது சத்துவமே
யொள்ளியசெம் மையதார வாரமுள திராசதமே
கள்ளியகார் திறமவித்தை நயந்ததுதா மதகுணமே
வள்ளியவெட் டாவதிவை யென்றுரைப்பார் மாண்புடையோர். (உக)

பூதகா ரியமாகிப் பொருந்துமிரு வினைக்கேற்ப
வேதமொடு சுகதுகர்தற் கேதுவா யதுதூல
மாதசவிந் தியம்பஞ்சப் பிராணன்மனம் புத்தியொடு
சூதமையா யோகசா தனமாகுஞ் சூக்குமமே. (உஉ)

அருவாகி யறிவினுட னறியாமை யுடையதுவாய்க்
கருகாத ஞானம்யோ காதிகட்குக் காரணமாம்
பொருவாத காரணமிம் மூவகையாய்ப் புணருடம்பே
வெருவாவொன் பதாவதென விரித்துரைப்பார் மேலோரே. (உங)

தூலத்தே யுபாதியெலாந் தொகப்பொருந்து மன்னமய
மேலக்கன் மேந்தியமைம் பிராணனொடாம் பிராணமயஞ்
சாலஞா னேந்திரியந் தழுவியது மனோமயமே
கோலவவற் றொடுபுத்தி கூடுதல்விஞ் ஞானமயம். (உச)

மாற்றரிய மனோமயம்விஞ் ஞானமய மாமிரண்டிற்
றோற்றியவான் மாவறிவே சொல்லுமா னந்தமய
மேற்றமிகு மிவைபஞ்ச கோசமென வியம்பிடுநூல்
சாற்றரிய பத்தாவ திவையென்றே தகக்கோடி. (உரு)

நால்வகைத்தோற் றத்தினுமாய் நக்கசரீ ரங்கடொறுஞ்
சாலவியா பித்தனைத்து நடத்துவதே தகுசீவ
னேலுமுந்தி மேற்களத்தி ழியைகமலத் தகரவெளி
போலுமத னிடம்பன்னொன் றுவதிது வெனப்புகல்வார். (உசு)

கருமஞா னேந்திரிய மொருபதந்தக் கரணநான்
கொருவரிய வாயுவைந்திவ் வுரைதருபத் தொன்பதொடும்
வெருவரிய மாயையொடு மிகக்கூடிப் புசிப்பதுவே
தருபோத்தா விதுபனிரண் டாவதெனச் சாற்றுவார். (உஎ)

மருவடம்பி லபிமானம் வயங்கியெழ விராட்டேயா
யொருவிலிர ணியகருப்ப மாயுவக்கு மீச்சுரமாய்ப்
பொருவறமே யதுகருத்தா புகல்பதின்மூன் றுவதிது
வருபுவியி லெவ்வருணச் சிரமங்க ளுக்கேற்ப. (உஅ)

ஆற்றுநிட்கா மியகரும மிதுபதினன் காவதுவே
தோற்றுகுரு வன்சேவை தூயவான் மவிசாரம்
போற்றுபெரி யவரிணக்கம் புகழும்வே தாந்தநடை
மாற்றரிய காரியமாம் வருபதினைந் தாவதிது. (உக)

என்றவா தனத்திருந்தே யியங்குமிரு வளியடக்கித்
தோன்றவா யுவையெழுப்பிச் சொலும்பிரம ரந்தரஞ்சேர்ந்
தான்றவா னந்தரச மாயசமுத் திரத்தழுந்தன்
மான்றவிலா யோகமிதே வருபதினா றுவதுகாண. (௩0)

ஏலவிரு தயகமலத் தெழின்மாயை விராய்ச் சகத்தைப்
பாலனஞ்செய் பவன்புருடன் பகர்பதினே ழாவதிது
சாலவெலா மழிந்துமழி யாததாய்க் காரணமாய்
ஞாலநவி லவ்வியத்த நருபதினெட் டாவதிது. (௩க)

அவ்வியத்த முதித்தொடங்கி காமமா திகளடைந்த
செவ்வியவா னவர்வியத்தர் செப்புபத்தொன் பதாவதிது
கவ்வியமெய் கோசந்தத் துவமனைத்துங் கடந்துமிளிர்
திவ்வியமேன் மையதான்மா செறியிருப தாவதிது. (௩உ)

அழிபவஞ்ச மசித்தியமென் றைடமற நினைப்பதுவே
கொழியகரன் மாவிருபத் தொன்றுவ திதுகுறிக்கொள்
செழிசருவ மும்பிரம மெனத்தெரித லத்துவித
மொழியிருபத் திரண்டாவ திதுவெலாறே முன்னுதியால். (௩௩)

நூல்பலதே றுபுபவஞ்ச மித்தையென நோக்குபுதா
னேல்பிரம மெனன்மவுன மிருபதின்மூன் றுவதிது
சாலவித்தை தபப்பிரமந் தனைத்தெரிந்து கொளன்மோக்கங்
கோலியிரு பத்துநான் காவதெனக் கூறுவார். (௩௪)

துக்கமெலா நிவர்த்தியாய்ச் சுகம்பெறலே யானந்த
மிக்கவிஃ திருபத்தைந் தாவதென விளம்பிவார்
தக்கவிவை யெலாமுணர்கி சனகனே யென்றுரைத்தான்
றொக்கபசுக் கவர்ந்தமுனி யிறைதொழுது சொல்லுவான். (௩ரு)

இவையனைத்துந் திடப்படுதற் குபாயமெவ னெனக்கேட்ப
நவையிறவு மியன்பாற்போய்ப் பெருந்துறைமான் மியநயந்து
செவையுறக்கே ளெனவிடுத்துத் தீர்ந்தானச் சனகனும்போ
யவைவியக்குந் தவுமியனை யடைந்தனைத்துந் தெரிவித்தான். (௫௬)

சொன்னவெலாஞ் செவியேற்றுத் தூயதவு மியமுனிவன்
மன்னவநிற் கம்முனிவன் மாயாவா தம்புகன்று
னன்னதுணர்க் தவர்க்கென்று மையர்பெருந் துறைப்பெருமை
பன்னல்பழு தென்றதன்றேஞ் சிறிதுபகர் தரத்துணிந்தான். (௫௭)

சத்தியமே யாமுறைப்பாஞ் சனகபுர வலகேண்மோ
சத்தியமா கியபிரமஞ் சகத்தாயிற் றென்றுரைக்கிற்
சத்தியமென் பதுதீர்ந்த சத்தியஞ்சார்ந் ததுகண்டாய்
சத்தியநூ லதுவென்றே சாற்றுவரோ தக்கோரே. (௫௮)

காரணமாம் பரஞ்சகத்தாங் காரியமா கியதென்னிற்
காரணத்துள் ளதுசகத்தாங் காரியத்து முளதாமே
காரணஞ்சித் தாஞ்சகத்தாங் காரியமுஞ் சித்தெனச்சொல்
காரணந்தான் மாயையெனக் கரைந்தாலெக் குற்றமுறும். (௫௯)

அருவமிலை யுருவமிலை பிரமத்திற் கென்றறைந்து
மருவவுறு தியானமிரு வகையவைவிட் களஞ்சகள
மொருவரிய தெனப்புகலி னுரைத்தவிவை யார்க்குரிய
வெருவமைய முன்னொடுபின் விரோதமுற லென்றாமோ. (௬௰)

துக்கமற வொழிதலொடு சுகப்பேறே முத்தியெனின்
மிக்கதுயி லோருயிர்க்கு விளைதலுமற் றதுவாகுந்
தக்கதலா மாயாவா தத்துளகுற் றங்கூற
லுக்கமணற் சோற்றிடைக்கல் லாய்திறத்தை யொக்குமால். (௬௧)

முதுமுனிவ னுனைமருட்ட மொழிந்ததிற முணராதே
யிதுபொருளென் றுளங்கொண்டா யென்றுதவு மியனியம்பக்
கதுமெனவம் மிதிலையர்கோ னெழுந்துகான் மிசைவீழ்ந்து
பதுமனுமொவ் வாயடியேற் குண்மைநெறி பகரென்றான். (௬௨)

என்றமொழி செவியேற்றே யிருங்கருணை தலைசிறப்ப
வன்றவிலாச் சிவதீக்கை யாற்றியடி முடிசூட்டி
நன்றமைய முப்பொருளும் புருரவற்கு நவின்றபடி
யொன்றவுரைத் தவன்மயக்க மனைத்துமொழித் தருளினான். (௬௩)

பெருந்துறைமான் மியமனைத்துஞ் சிந்திக்கும் படிபேசிக்
குருந்துறையும் பெருமானைக் குலவுயோ காம்பிகையை
யிருந்துறைபோந் திருவாத வூரடிக ளிணையடியை
வருந்துறையா லவையுமாற்றி வணங்குதிபோ வெனவிடுத்தான். (௬௪)

ஒரோருகா ரணம்பற்றி யுதித்தனால் கலைவிலக்கிச்
சீரோருவாத் திருவருளே காரணமாச் செனித்தெழுந்த
பாரொருவா வாகமநூற் படியொழுகுந் திறம்பூண்டு
பேரொருவா மகத்துவஞ்சால் பெருந்துறையை வந்தடைந்தான். (சரு)

கந்தமுறி கடாயானைக் காவலன்பு ரூரவன்றன்
முந்துவழி படுமுறைமை முழுவதுந்த னுளங்கொண்டான்
சிந்துதவி லாத்தரங்கத் தீர்த்தமெலாம் போய்ப்படிந்து
நந்துபுகழ் வெண்ணீறுங் கண்மணியு மெய்த்தணிந்து. (சசா)

மனுவரசா மைந்தெழுத்து மானதமா கக்கணித்துப்
பனுவன்மறை முழங்குதிருத் தளிபுகுந்து பணிந்தேத்தித்
தனுமதியின் மிதுனமதித் தனிச்சாறு சேவித்தே
யினுமவட்செய் வனவனைத்து மியற்றியுவப் புறவமர்ந்தான். (சஎ)

ஆயபுகழ்ப் பெருந்துறையெம் மான்மகா யகர்தோன்றி
நேயமிக மாஞான சனகவென விலவிடுவாய்
தூயவவின் முதியென வருள்புரிந்து துணையடிக்கீழ்
மேயகலப் பின்பருளி விண்ணவர்வாழ்த் திடமறைந்தார். (சஅ)

மன்னுபுகழ் மிகுசனகன் மாயாவா தத்தையொரீஇப்
பன்னுசிவா கமப்பரவை படிந்துமுத்தி பெற்றதிற
முன்னுமுப புராணத்துட் பார்க்கவமு மொழிதருமா
வின்னுமது கொளவெறிவா மிதுகோடற் பொருட்டன்றே. (சகூ)

நேயமிகு முனிவரர்கா ணீடுபுகழ் மிகுசனகன்
பாயதிரு வடிக்கலப்புப் பற்றியவா றெடுத்துரைத்தாந்
தூயகுணஞ் சிறிதுமிலாத் துட்டமறை யோனொருபெண்
மேயபெருந் துறைமேவிப் பெற்றதிறம் விளம்புவாம். (ருo)

சனகராசன்முத்திபெற்றபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கருஉரு.

---

# அதர்மனும் இலக்குமியும் முத்தியடைந்தபடலம்.

---

வாத வூரெம் வள்ளல்பொற்
பாத தாம ரைப்புக
ழோத வோத வோதமா
மேத மோவு மின்பமே. (க)

நன்மை மேய நருமதை
வன்மை மேய மாக்களா
வின்மை மேய வேதியர்
பன்மை மேய தொருபதி (உ)

வேறு.

அன்னபதி வேதபுரி யெனும்பெயர தகில்வாழ்வோன்
பன்னருநூ லுணர்திரியம் பகனெனச்சொ லியற்பெயரா
னன்னர்மறை யவன்மூன்று னவின்றநீ வினைப்பயத்தா
லென்னகொடு மையுமுருவொன் றெடுத்தனவோர் மகற்பெற்றான். (ங)

அந்தமகன் செயனோக்கி யதர்மனெனப் பெயரிட்டார்
சந்தமிகு மங்கரா ரப்பெயர்தாங் கியகொடியோன்
கந்தடுவெங் களியானை கடங்கொண்டு திரிவதென
வெந்தவிட னுந்திரிவா னெந்தவிட னும்பொருவான். (ச)

மறைமொழிநின் றனைசந்தி வந்தனைநின் றனைசிறிதுங்
குறையடையாப் பெரியவர்நின் றனையாருங் குறிக்கொள்ளா
நறைமலர்ப்பூங் கொன்றையணி நாயனார் நிந்தனைமற்
றறைபலநின் றனைகளுஞ்செய் தகவிடத்தே யுழிதருவான். (ரு)

ஒருதினஞ்சில் விடர்குழும வொருகானத் துட்புகுந்தான்
பொருவரும்பல் குறம்புசெய்து போதருங்கா லாங்கொருசார்
மருவுசிவ முனியோகங் கொடுவதிய வன்மீசம்
பெருகுறமேன் மூடியதாய்ப் பிறங்கவது கண்டணைந்தான். (சு)

இல்லிவழி நோக்குதலு மிருந்தவத்தோன் விழிதோன்றப்
புல்லியவீ தென்னையெனப் பொருக்கெனவோர் வளார்கொண்டு
சொல்லியவவ் விழிருன்றுன் றுனையயோ கந்தவிர்ந்து
கல்லியதின் னினன்வன்மீ கஞ்சிதைத்து வெளிவந்தான். (எ)

அடுசினங்கொ ளம்முனிவ னதர்மன்முக மெதிர்நோக்கிப்
படுகொடிய மாபாவி யென்செய்தா யெனப்பதைப்பக்
கொடுமையெவன் செய்தனன்கா கோதரங்கா னணியென்றே
முடுகியிது செய்தனனின் செங்கணென மொன்றுதேன். (அ)

என்றுசொல மிகச்சீறி யெழுநாவோ னினுங்கொதித்துக்
கன்றுகொலை முதற்பாத கங்களுக்கோர் குழிசியா
யன்றுபுலைச் சார்புற்றே யலைதிநீ யெனச்சபித்து
வென்றுயிளிர் சிவமுனிவன் வேறிடம்பார்த் தெய்தினன். (கூ)

விடரொடுமவ் வனந்திரிந்து விடன்மடனு ரியவதர்மன்
சுடர்பொருவு தந்தையுறை தொன்மனையி னுட்புகுந்தா
னிடர்கெடமற் றவன்புகலு மிதமனைத்துங் கொள்ளானைப்
படர்செயலோர்க் தவன்றுறவு பற்றியொரு வனம்புகுந்தான். (க௦)

ஆவயினோர் மரச்சூழ லகம்புகுந்து பனிதவிர்ப்பான்
மேவவொரு புலித்தோலை மெய்ப்போர்த்தி யோகிருந்தா
னேவலிய லாவதர்ம னிச்சைவழி யொருகதைகொண்
டாவவெனப் பயில்வானவ் வனத்துமொரு காளடைந்தான். (கக)

செறிமரத்துண் மாலைவாய்ச் சென்றுபுலி யிருந்ததென
வறியதர்மன் பின்புறம்போ யங்கைத்தண் டெறவோங்கி
முறியவொரு புடைபுடைப்ப முடிந்தானப் பிதாமறையோன்
நெறிகொள்பிதா வென்றறிந்து நினைவிலனாய் நீங்கினான். (கஉ)

நீங்கியவன் கொலைப்பாவ நிழல்போலத் தொடர்ந்துவர
வேங்கிமிகு பசிதாக மிரியாது நனிவருத்த
வாங்கியலுங் கொடும்பாவி யணித்தாகக் கண்ணுற்றான்
வாங்கியவெஞ் சிலைமறவர் வழியலைத்து வாழ்சேரி. (கங)

அந்தமறச் சேரியிற்போ யலசினேன் பசியாலென்
றுந்தவுரைத் தழுதானம் மறவருமுள் ளிரக்கமுற்றே
யிந்தமறப் பன்றியினூ னெடுத்துநுக ரெனவளித்தார்
நந்தவது நுகர்ந்துபசி தவிர்ந்தானீர் நசைமிக்கான். (கச)

எண்ணீரு மன்புடையா ரிறத்தனினைத் தழுதாலுங்
கண்ணீரோர் துளியும்வெளி காட்டாவிக் காட்டகத்தே
தண்ணீரெங் ககப்படுமென் றனைந்து தடுமாறும்
புண்ணீர்மை மனத்தானங் கொருகுழல் போய்ப்புக்கான். (கரு)

அதுபழையர் வாழ்சேரி யாவயிற்பன் மிடாவீந்தின்
முதுகணிறைத் திருப்பதுகண் டெவந்தானாய் முன்னோடி
யிதுவிலைசெய் பவராரென் றெண்ணானாய் மோரென்றே
கதுமெனமொர் தையின்மொண்டு கடகடெனக் குடித்தனனால். (கசு)

குடித்துநனி தேக்கெறிந்து கொண்டநீர் நசைதவிர்ந்து
வெடித்துவரா லெழுவாவி மென்பனைநன் னிலம்புக்கா
னொடித்துமதி யினைவெறிமே னோக்கலா லுயர்பிழிபு
மடித்துநர குய்த்திடுகொ மத்தாகத் தடித்ததால். (கஎ)

முன்செய்த வினைப்பயனை மோசிக்க வல்லவரியார்
தன்செய்கை யத்தனையுந் தவறென்று கருதானா
யென்செய்கை யிதற்கென்றே யெண்ணியெண்ணி மாழாக்கும்
புன்செய்கை யானங்கோர் புலைச்சிதனைக் கண்ணுற்றான். (கஅ)

கண்டவுடன் மாரவேள் கடுங்கணைகட் கிலக்காகி
யண்டமுழு வதும்பரவு மரியபழிக் காளானான்
கொண்டவுவப் பொடுமவணோர் குறுகியொழி வருங்காம
மண்டவவள் கைப்பிடித்தான் மற்றவளு முடன்பட்டாள். (ககூ)

அழுக்குடைகா வதகாற வருவருப்பொன் றில்லாளைப்
முழுக்கவழு தாயமைந்த முற்றிழையே யென்னவியந்
திழுக்கமைவா யூறலுமுண் டேந்தல்குற் றடம்படிந்து
விழுக்கவின்மே வுறத்துய்த்துப் பெருங்காம விடாய்தீர்ந்தான். (௨0)

அடிசில்புலா லெடுத்தவளே யருத்தவினி துவந்துண்டு
கொடியனு வயிற்பயிலுட் கொடுங்கள்வார் வாய்க்கடைஞர்
தடியெடுத்து வெரிக்புடைத்து முடிக்குதலுந் தளர்ந்தோடி
முடிவில்புகழ்ச் சாபாலி முனியுறையுட் கருகானான். (௨௧)

புலையரகன் றனரன்றான் புண்ணியவம் முனிமேய
நிலையுயராச் சிரமஞ்சார் நெடுவனத்தை யகலாது
யலைதருநா ளொப்பவத்தோ வவன்செய்த கல்வினையாற்
கலையுணாம் முனியவனைக் கணவெதும்பக் கண்ணுற்றான் (௨௨)

ஓதியா லவன்றன்மை யுள்ளவெலா முணர்ந்தானு
யாதிகா யகனேயென் றனைத்துலகும் புகழ்முனிய
னேதியா மிவற்கியற்ற லெனக்கருதிக் கமண்டலநீர்
மாதியா னம்புரிந்து வாரியிறைத் தனனவன்மேல். (௨௩)

அன்னநீர் தோய்தலுநல் லறிவுசிறி துதித்தெழுந்த
தென்னநாஞ் செய்தோமென் றிரங்கியவ னடிவீழ்ந்தான்
முன்னமியா வரும்புரியாப் பாவமுயன் றனைபுரிந்தாய்
சொன்னதிங் கொழிக்கும்வகை யென்றுணர்ந்தாய் சொல்லென்றான். (௨௪)

அடியனே னதனறி யேனெல்லா மறியும்வித
முடிபுநீ புகறியென முன்பணிந்து வேண்டுதலுஞ்
செடியவாங் கானகத்தே சென்றுசிவ முனிவிழியிற்
கொடியவளார் கொடுகிண்டிக் கொடுஞ்சாப மேற்றனையால். (௨௫)

நெடியகலை கொடுபுடைத்து நிகழ்தந்தை யுயிருண்டாய்
கொடியமற வர்களருத்துங் கொலைப்பன்றி யூனுகர்ந்தாய்
வடியமையக் குடித்துவந்தாய் வன்புலைச்சி முலைதோய்ந்தாய்
கடியவனல் குணவயின்றாய் கடையைநீ யெனப்புகன்றான். (௨௬)

சொற்றமுழு வதுங்கேட்டுத் துன்னென்று கடுநடுங்கி
முற்றவுளம் பதைபதைத்து மூர்க்கனே னுய்யும்வகை
யுற்றவழி யருளென்று னேங்குதவச் சாபாலி
பொற்றதிற முளங்குறித்து நின்றானப் பொழுதின்கண். (௨௭)

குலவுகாம் பீலிவளர் கோபால சாமியெனு
நிலவுவயி ணவமறையோ னிகழுமவன் மனைக்குரியா
ளிலவுபுரை செவ்வாயா ளிலக்குமியென் றொருபெயரான்
கலவுகொடுங் குணம்பூண்டாள் கணவன்மன மழிந்திருந்தான். (௨௮)

அயலார்தோள் கலப்புறும்பே ராசையுளாண் மனையாள
னியலார்நன் னயமொழிக ளெள்ளளவுங் கொள்ளாளாய்
வியலார்தன் புன்றொழிலே மேற்கொண்டா ளதுகண்டு
மயலார்மற் றவட்சினந்தான் வைணவனு மக்கொழுகன். (௨௯)

ஊறாக நீயிருந்தா லொன்றுமுற்றா தெனக்கென்று
மாறாக நஞ்சூட்டி மடித்தாளக் கணவனைப்பின்
வேறாகத் தன்செயலே மேற்கொடலைத் தொழிந்ததற்குப்
பேறாகக் கொள்ளிவாய்ப் பேயாகி யுழிதருவாள். (௩0)

அந்தவனத் தகஞ்சார்ந்தா ளந்தணன்முன் பணிந்துநிற்கும்
பந்தமிகு மதர்மன்முகம் பார்த்தனன்பற் றறநினைந்து
முந்தவழல் வாய்திறந்து முடுகுதலு மவனடுங்கச்
சந்தமுனி யுங்காரஞ் செய்துதடைப் படுத்தினன். (௩௧)

ஆயவன்மற் றம்முனிவ னடிபணிந்து குணுங்கினுக்கு
மேயதியற் றிடநினைந்தேன் விலக்கியதெ னிவ்வுருவம்
போயதெனப் புரியிலையேற் புன்மையினைக் கொடுவென்று
றாயகவம் முனிவானு நகைத்திதுகூ றுவதானான். (௩௨)

புருடனைக்கொன் மாபாவி போற்றியென மொழிந்தார்க்கு
மருடனைக்கொல் யோகாம்பா வெனப்புகனின் வாயார
வருடனைக்கொ லதர்மாநீ யான்மனா தாவெனச்சொ
லிருடனைக்கொ லிருவீரு மெய்துவீர் பெருந்துறைக்கே. (௩௩)

பெருந்துறையென் பதுபாண்டி நாட்டகத்தே பிறங்கிமோங்
கருந்துறைத்தீர்த் தங்களெலா மடைந்துநா டொறுந்தோய்மின்
குருந்துறையும் பெருவாழ்வைக் கோமளயோ காம்பிகையை
மருந்துறைநோய்க் கெனத்தொழுது வழிபடுமி னிறுஞ்சொல்வாம். (௩௪)

அருளான்ம நாயருக் கன்னையோ காம்பிகைக்குத்
தெருளான்வோ ராட்டியநீர் தேங்குதொட்டிக் கரையடைந்து
வெருள்சாரா விதமொண்டு மொண்டாடி வெண்ணீறே
பொருளாக நினைந்துடம்பெ லாம்புனைமி னிறும்புகல்வாம். (௩௫)

அன்னநி ருடற்பிணியு மமையாத பவப்பிணியு
மென்னபா தகமுந்தீர்த் திடுவதுசத் தியங்கண்டீர்
சொன்னமார் திருவீதி வலஞ்சூழ்மின் றுதித்திடுமின்
பன்னமே வாச்சிறப்புப் படைத்துய்வீர் போமென்றான். (௩௬)

அந்தமுனி வான்பாத மன்புகொடு துதித்திறைஞ்சிச்
சந்தமிகு பெருந்துறையாக் தலஞ்சாரும் வழிக்கொண்டு
முந்தவவ னன்மநா தாவென்று மொழிதருவான்
பிந்தவிவள் யோகாம்பா வென்றுபே சுபுடப்பாள். (௩௭)

ஓயாம விருவோரு முனைக்குமா மந்திரத்தாற்
சாயாம லோங்கியபா தகமனைத்துந் தலைசாய்ந்த
மாயாம லஞ்சோந்த வந்துபெருந் துறையடைந்தா
ராயாமன் முன்னைகா ளடுகொடும்பா தகம்புரிந்தோர். (௩அ)

தூயபெருந் துறையடையப் பேயுருவந் தொலைந்ததவட்
காயவதர் மனும்பிரம தேசுமரீஇ யவனுனன்
பாயபுகழ்ச் சாபாலி முனிவரன்பன் னியபடியே
சேயமுற விருவோரு நிதமுஞ்செய் தேத்தெடுப்பார். (௩௯)

மிடைகொடுமை பலசெய்து வெவ்வினைக்கே யாளாகிக்
கடையரினுங் கடையேனுய் நரகமெலாங் கைக்கோடற்
குடையவனு யுடைந்துழலிவ் வொருத்தனையு மாட்கொண்டா
யடைசெறிபைங் குருந்தவனத் தண்ணுவோ வண்ணுவோ. (௪௦)

பொல்லாத பாவமெலாம் புரிவதற்கே யுடம்பெடுத்தே
னெல்லாத நரகமெலா மொருங்குதுனை வதற்கமைந்தேன்
கல்லாத கடையேனைக் கைகொடுத்தா டலுந்தகுமோ
வெல்லாத வளக்குருந்த வனத்தமரும் வித்தகவோ. (௪க)

பஞ்சமா பாதகமும் பன்னுளுஞ் செய்துழன்ற
வஞ்சனே னித்தலத்து வருவதற்கும் யோக்கியனே
தஞ்சநீ யென்றடையுந் தன்னளிசெய் தாட்கொண்டா
யஞ்சமார் துறைக்குருந்த வனத்தமரு மண்ணுவோ. (௪உ)

அருவருக்கு மெனையுமின தடியருளுஞ் சேர்த்தாண்டாய்
பெருநெருப்புக் கீரமிலை யெனப்பேசல் விளக்கிடவோ
திருவிலிக்கோர் கதியில்லை யெனத்தேர்ந்த திருவுளமோ
மருமலர்ப்பைங் குருந்தவன வள்ளாலீ யருளென்றான். (௪௩)

புருடனைக்கொல் பாவியான் புண்ணியரே பெறப்படுகின்
னருடனைக்கொள் வதற்கடைந்தே னழுகிறறே யழுகிற்றே
வெருடனைக்கொள் றடியாரை மேன்மேலு முயர்த்திமிகு
தெருடனைத்தந் தருள்கருணைச் சிவயோகாம் பிகைத்தாயே. (௪௪)

விதவையெனற் கிருபொருளு மேவவுழ லிவ்விழிகாய்
கதவயிர கமனழுத்துங் கருநரகப் பெருங்கடற்கோர்
மிதவையென நின்னருடந் தாட்கொண்டாய் வியப்பிதுவே
சிதவயிரக் கலன்பூண்ட சிவயோகாம் பிகைத்தாயே. (௪௫)

காயுருவிற் கடையாகி நரகுழக்கப் போமெனது
பேயுருவந் தவிர்த்தாய்நின் பெருங்கருணைத் திறமென்னே
சேயுருவிற் கிரங்காரியார் சிவயோகாம் பிகைத்தாயே
வேயுருவத் தோளாயென் றிலக்குமியு மிகத்துதித்தாள். (௪௬)

அதர்மனென்போன் றன்பெயர்முன் னகன்றவொரு பெயர்புனைந்தான்
பதமருவு மிலக்குமியு மிலக்குமியே யெனப்பட்டா
ளிதமருவுந் தலுமதியி னெய்துபெருந் தரிசனத்தின்
சுதமிலிரு முதுகுரவர் களுமிவர்க்குத் துணைந்தருள்வார். (௪௭)

மறையோனைக் கணநாத னாக்கிவளர் திருக்கைலை
யுறைவாயென் றுய்த்தனரா லாட்கொண்ட வுமாபதியார்
கறைதிரு மவ்வளாகம் பணிசெய்யுங் காதலியாய்க்
குறைதீர வுறையென்று னிலக்குமியைக் கோமனையே. (௪௮)

வாளுடையப் பொலியும்விழி யிலக்குமியை மறைக்குலத்துத்
தாளுடையப் பிறந்தானை யாளுடைய தன்மைகண்டே
வேளுடைய விழிதிறந்த பெருந்துறைவாழ் வித்தகரே
யாளுடையா ராளுடையா ரென்றகில மெடுத்தேத்தும். (௪௯)

மிக்கதவச் சாபாலி யருள்வழிமே விருவோரு
மிக்கபுகழ்க் கைலாய மேயதிற மெடுத்துரைத்தா
மிக்கவளப் பெருந்துறையுண் மேவியமற் றொருநால்வர்
மிக்கவருட் டிறம்பெற்று விளங்கியகா தையும்விரிப்பாம். (௫௦)

அதர்மனும் இலக்குமியும் முத்தியடைந்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௬௭௫.

---

# வேடன்முதலியநால்வர்கள் அருள்பெற்றபடலம்.

புத்தியெய் துநர்களும் பொலிசு வர்க்கமுற்
சித்தியெய் துநர்களுந் தீரத் திர்த்துயர்
முத்தியெய் துநர்களு முனிவர் வாதவூர்
நித்தியர் திருவடி நேசித் தார்களே. (௧)

வேறு.

ஒங்குமல யாசலத்தி னொருசாருள் ளதுநன்மை
தேங்குதிற மருவாத சிலைவேடர் செறிசேரி
யாங்கெறிகுத் தடிபறிகொல் லெனுமார வாரமலாற்
பாங்குபெறு மிரக்கமொழி யெந்நாளும் படுதலிலை. (௨)

அனையகுறச் சேரியிடை யாழிசூ ழிலங்கையிடை
வினையநிசா சரர்குலத்துள் வீடணன்போ லொருவனுளன்
புனையவொளிர் சிவலிங்க மாலைபுனை தருமுடியா
னினையவினித் திடுபெருமா னடிக்கன்பு நீங்காதான். (௩)

அன்னவனுக் குரியமனை யாளிரதி யெனப்பொலிவாள்
பன்னருங்கற் பினிற்சிறந்தாண் மணவாளன் பணிபுரிவா
ளின்னமுத நிகரவளோ டியல்குறவ னிறடிவிளைத்
தென்னகிழங் குங்கவரா வினிதுண்டு வாழ்தருநாள். (ச)

ஆயகிரா தச்சேரிக் கதிபனு மொருகொடியோன்
மேயவிவன் மனைவியெழில் விழைந்தொருநாட் கண்ணுற்றான்
பாயமத வேள்விடுக்கும் பல்கணையாற் புண்ணுற்றா
னேயவினிச் செயலாவ திஃதென்றே யெண்ணுற்றான். (ரு)

தன்னுடைய கணவனுயிர் தபச்சாடி னாலன்றி
மின்னுடையப் பொலிமருங்குல் விரும்பெனக்கு வசமாகாண்
முன்னுடைய நல்வினையான் முடிப்பதற்காம் வலியுள்ளேன்
கொன்னுடைய விக்காலங் குறித்தபடி செயல்வேண்டும். (சு)

என்றுகரு தியதுணர்ந்தா னெஞ்செய்வேன் சிவனேயென்
றன்றுமனை வியுந்தொடர வந்நின்றும் வெளிப்பட்டுத்
துன்றுமிரா வழிநடந்து துட்டன்விழி காணாமே
மன்றுணட நவில்பெருமான் பெருந்துறையை வந்தடைந்தான். (எ)

கேடில்பெருந் துறையடைந்த கிராதனரு மனைவியொடு
நாடியவா னவதீர்த்த நயந்தாடி நீறணிந்து
கூடியபே ரருளான்ம நாயகர்சந் நிதிகுறுகிச்
சாடியவா தனையுடையா னாய்த்தாழ்ந்து தாழ்ந்தெழுவான். (அ)

இராமுழுதுந் துயிலானா யியல்வீதி வலஞ்சூழ்வான்
பராபரனே யடியேனைப் பாதுகாத் தருளென்பான்
விராயபகை வன்வலியோன் வெங்கொலைசெய் திடல்குறித்தா
னராவணிவா யடியேனு னடைக்கலங்கா ணெனப்புகல்வான். (கூ)

அற்புமிக விவனிவ்வா றறைதரமற் றவன்மனைவி
வெற்பரைய னினிதீன்ற விளங்கிழையோ காம்பிகையே
பொற்பமையுந் தாயேநின் புத்திரியா னென்னுடைய
கற்புவழு வாவண்ணங் காத்தருள்வா யெனக்கரைவாள். (க0)

இந்தவா றமர்தருநா ளிறவுளர்தங் குலத்தலைமை
யந்தமா பாவியவ னணங்கினொடு மெங்கொளித்தான்
முந்தநீர் தேடுமென முற்றியசில் வேடரெழுந்
தெந்தவூ ருந்துருவிப் பெருந்துறைவந் தெய்தினார். (கக)

மனைவியொடுஞ் சிவப்பிரியம் வாய்ந்தமர்வே டனைக்கண்டு
துனையவிறை யவன்பாற்போய்ச் சொற்றாப் பொழுதத்தே
கனையிருண்மால் களிற்றுமதன் கடுஞ்சமருக் காற்றானாய்ப்
புனையிழையா ளைசயினெழுந்தான் போர்குறித்துப் படைஞரொடும். (கஉ)

வந்துபெருந் துறைபுகுந்தான் மாதேவன் சந்நிதியிற்
கொந்துமலர் புனைந்தகுழற் குறக்கோதை யுடன்பணிந்து
கந்துவிருப் பொடுநிற்கு நல்லவே டனைக்கண்டான்
சந்துசெறி வரைக்குறவர் தமக்கிறையோ னக்கொடியோன். (௧௩)

ஏடநீ யெனைத்தப்பி யிங்குற்று யுய்திகொலோ
தேடவரும் பொருளிறைவற் சேர்வதென வுணராயோ
கூடமனை வியைக்கொடுத்தி கொடாயேலுன் னுயிர்வீப்பன்
மூடவிடுத் தொழிதியென மொய்படைஞ ரொடுவளைத்தான். (௧௪)

அதுதெரிபு நடுநடுங்கி யருளான்ம நாயகவோ
முதுவிடமுண் டுலகளித்த முழுமூல காரணவோ
கதுமெனவந் தெனைவளைத்தான் கடும்பாவி யானினிச்செய்
வதுதெரியே னபயமென வாய்திறந்து முறையிட்டான். (௧௫)

ஆலமெழ நடுநடுங்கி யன்றயன்மா லுள்ளிட்டார்
சாலவும்வந் தபயமெனத் தளராது புரந்தனைவெங்
காலனைக்கண் டபயமெனக் கைகுவித்தல் செய்தசிறு
பாலனைக்காத் தவற்கொன்ற பண்ணவனு நீயலையோ. (௧௬)

வெங்காள மெடுத்தயின்ற விமலவோ யோகமயில்
பங்காள வோமலரோன் படுதலையிற் பலிகொண்ட
கங்காள வோகொடியோன் கடியேனைக் கடியாம
லிங்காள வேண்டுமெனக் கென்றுமடைக் கலமென்றான். (௧௭)

புலிவலையப் பதைக்குமான் போற்பதைக்குங் குறக்கொடியு
மெலிவமைநின் மகட்கிரங்க வேண்டும்யோ காம்பிகையே
வலியவன்பன் மூர்க்கரொடும் வளைத்தனனியா னென்செய்கேன்
கலிபொருமற் றவற்றுரந்தென் கற்புநிலை காவென்றாள். (௧௮)

வருந்தாமே யுலகனைத்து மீன்றெடுத்த மாதாவே
பொருந்தாதா னெனைத்தீண்டிற் போவதொழி யாதெனுயி
ரருந்தாநஞ் சயின்றவர்பா லமர்ந்தருள்யோ காம்பிகையே
கருந்தார்வண் டமர்குழலாய் காப்பதுநின் கடனென்றாள். (௧௯)

அம்மையருள் சார்ந்தெங்க ளாண்மநா யகற்பாராச்
செம்மையடி கேள்பாரா முகஞ்செய்கை தகாதென்னக்
கொம்மைவிடை யுடையானுங் குறுமுறவல் கொண்டருளி
வெம்மையொரா யுதமவன்கை மேவவிடுத் தருள்செய்தான். (௨௦)

அந்தவான் கையுறல்கண் டையரரு ளெனவறிந்து
சந்தமார் வரைக்குறவன் றுய்ப்புலிப்போத் தெனப்பாய்ந்து
வந்தயா வருஞ்சிதைய மாட்டியிறை வளைத்தள்ளி
யுந்தமார் பாயுதங்கொண் டென்றிமிதித் துயிர்குடித்தான் (௨௧)

யாவருங்கண் டதிசயித்தா ரான்மகா யகர்புரிந்த
மேவரும்பே ருணிவைனந்து விடாதபெரு விருப்பினொடும்
பாவருந்தன் மனைவியொடும் பரம்பரனு லயத்துள்ளா
லோவருந்தே வாய்நின்றான் மற்றிருவர் திறமுரைப்பாம். (உஉ)

மாதங்க னெனுமொருவன் மனைவிமா தங்கியொடும்
பாதங்க மரியயனு லறியாதார் பதம்பணிவா
னுதங்க மொழிந்தானுய்க் கோடுகுறிப் பதினைமைந்தா
னுதங்க லவன்றதியே நவிற்றுமொரு திறம்பூண்டான். (உ௩)

இந்தவிதம் பற்பலநாண் மனைவியொடு மிவணியங்கச்
சந்தமறைப் பொருளானு ரவற்கிரங்கித் தாரணியி
லெந்தவிடத் திலுமுளபுன் றெய்வமெலாங் கோடுதே
ருந்தமகிழ் தரும்பறைக்கு மவ்வாறே மகிழ்முயங்கும். (உ௪)

பறையடித்துக் கோடுதேப் பிரசன்னப் படுமென்றே
ரறைவரந்தக் தனநீயு மனையவளைக் குறவன்போன்
முறையினிலே நிற்றியென முன்னவன்பே ரருள்புரிந்தா
னிறைமனைவி யொடுநின்று னிகழுமொரு மாதங்கன். (உ௫)

குறவன்முத னல்வருக்குங் கோமான்பே ரருள்புரிந்த
வறமலிகா தையையுணர்த்தா மருந்தவஞ்செய் நைமிசத்துத்
திறமலிமா முனிவரெலாம் பெருந்துறைசேர்ந் தருச்சித்து
நிறமலியுந் திருவருள்பெற் றமர்ந்ததிற நிகழ்த்துவாம். (உ௬)

வேடன்முதலியநால்வர்கள் அருள்பெற்றபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கடுகக.

---

# நைமிசமுனிவர் பெருந்துறையடைந்து பூசித்தபடலம்.

---

சேல்காட்டி மிளிர்வயல்சூழ் தில்லைவா ழந்தணர்தம்
பால்காட்டி வாசகவாச் சியம்பகர வேண்டுமென
மால்காட்டி விடாச்சபையிற் கைகாட்டி வழிவிட்டார்
கால்காட்டி யெமையாளுங் கருணையுடை யவரானார். (௧)

தாதநெறி முதலனைத்துந் தகப்பயின்ற சவுனகன்முன்
மாதவமா முனிவரெலாம் பெருந்துறைமான் மியம்பகர்ந்த
சூதமுனி வரன்பாதந் தொழுதெழுந்து முன்னிருந்து
காதவொரு விண்ணப்ப காஞ்செய்வ துண்டென்றார். (உ)

அன்னதேவ னெனவினவ வருமறையா கமமுதலா
வென்னபல நூலுமெடுத் தியம்புதலம் பெருந்துறையென்
றன்னருளி னாலுணர்ந்தே ழுங்கடைந்து தரிசிக்கத்
தன்னமிலா வேணவாத் தலைக்கொடுநின் றனமென்றார். (௩)

என்றவுரை செவியுறலு மிருந்தவத்துச் சூதமுனி
நன்றமையு மிவ்வாசை நமக்குமுன மேயுளதா
லன்றலிலா நீவிரெலாம் புறப்படுமி னியாமுமுடன்
றான்றவரு வேமென்றான் மகமுடித்துத் தொழுதெழுந்தார். (௪)

அந்தநா ணன்னாளே யாகநனி மனமகிழ்ந்து
நந்தவான் வழிக்கொண்டு நடக்கின்றா ரக்காலை
முந்தனே யெனுஞ்சூத முனிசவுன காதியரைச்
சந்தமார் தரநோக்கித் தலமனைத்துந் தெரித்திடுவான். (௫)

தன்கணடைந் திறந்திடுவா ரினியிறவாத் தகையருளிப்
புன்கணொழித் திடுதலமிப் பொழினடுத்தோன் றிடல்காண்மி
னன்கணியன் மாறாகப் பொதுநாமஞ் சிறப்பாக்கி
வன்கண்மல மாற்றியமர் வரையிதுகண் டிறைஞ்சிடுமின். (௬)

வெள்ளியமா மலைபெயர்த்தான் மிகமுயன்றும் பெயர்க்கரிய
வொள்ளியமா பலவிலிங்க முறைதான மதுகாண்மி
னுள்ளியசீர் வடவெழுத்தச் சுட்குறிநீர் நெடிலுண்முதல்
புள்ளியகவ் வேறமுதற் புணர்தார மிதுகாண்மின். (௭)

சரநாக மொருமூன்றுட் டாநாக மல்லாத
வுரனாக விரோதித்துத் தொழுவரைமற் றதுகாண்மின்
கரவார்பால் வஞ்சமிலார் வஞ்சநிழல் காதலித்து
விரவாநன் கமர்தான மெய்த்தவத்தீ ரிதுகாண்மின். (௮)

புண்ணியநா வலர்கோவைச் சங்கிலியார் பொருட்டவர்பே
ரண்ணியமெல் லொற்றைவல்லொற் றாக்கியவூ ரிதுகாண்மி
னெண்ணியவோர் தாதுவைக்கொண் டெழுதாதுஞ் சண்பையர்கோ
னண்ணியமுன் னிரப்பவொளிர் நற்றலமற் றதுதொழுமின். (௯)

பேயுருவ முறவடைந்தும் பிஞ்ஞகனே யிவ்வுருவந்
தாயுருவ மெனப்பட்டார் தொழுந்தலமற் றிதுகாண்மின்
ஆயுருவ மறைமாவார் மறைமாவி னடியமர
வேயுருவத் தோளிதொழு மெய்த்தலமற் றதுகாண்மின். (௧௦)

ஒருகழுகு காணாத வொண்முடியா ரருணோக்கி
யிருகழுகு தொழுமவர்சொல் லெனும்விலங்க லிதுகாண்மின்
மருவுபல நூன்மொழிக்கு மாறாக வயக்கழலாய்ப்
பொருமிருவ ரகத்தினிருள் போக்குமலை யதுகாண்மின். (௧௧)

---

௬. ஸ்ரீகாசி.
,, ஸ்ரீசைலம்.
௭. திருக்கோகர்ணம்.
,, திருக்கேதாரம்.
௮. திருக்காளத்தி.
,, திருப்பாசூர்.
௯. திருவொற்றியூர்.
,, திருமயிலாப்பூர்.
௧௦. திருவாலங்காடு.
,, திருக்கச்சியேகம்பம்.
௧௧. திருக்கழுக்குன்றம்.
,, திருவண்ணாமலை.

புரமூன்று மொருகணையாற் பொடித்தல மிதுகாண்மி
னுரமார்ந்த வந்தகனை யுருட்டுதல மதுகாண்மின்
பரவான்ற மாணிவழி பட்டகுழி யுதுகாண்மின்
சிரமேந்தி நினைப்புனத்துற் பவித்ததே மிதுகாண்மின். (கஉ)

நீர்செலுத்தல் போற்குளத்து நிதிசெலுத்து மணிமுத்தப்
பேர்செலுத்து நதிசூழும் பெரும்பதிமற் றிதுகாண்மி
ஞர்செலுத்து மொருவரைக்கல் லொடுஞ்சுமந்து நனிசாலைப்
பேர்செலுத்து புனல்செலுத்தப் பிறங்குபதி யதுகாண்மின். (கங)

ஆக்கறம ருகமியற்ற வளித்தலப யம்புரியப்
போக்கலழற் சிகையாக்க மறைத்தலொரு தாள்புரிய
நீக்கலொரு குஞ்சிதத்தா ணிகழ்த்தமறை முதலின்பர்
தேக்கவுயி ருறநடிக்குந் திப்பியத்தே மிதுகாண்மின். (கச)

கைத்தோணி கரவாது கடல்கிடந்த படிகாப்பக்
கைத்தோணி விடுத்தனைத்துங் காத்தார்க ணிதுகாண்மி
னெய்த்தோவென் றடைந்தார்தம் பிணியனைத்து மிரியவெல்லா
மெய்த்தோதஞ் சூழுமருந் தீவாதே மதுகாண்மின். (கரு)

வழுவாத மலர்க்கணையான் மானெழில்சே ருடம்பையழ
லெழுநாவுஞ் சுவைகாண விட்டதல மிதுகாண்மின்
கழுதாடு காட்டாடு கால்கால்கா லெனக்கடுகும்
பொழுதேவன் மார்பமுறப் பொருத்துதல மதுகாண்மின். (கசு)

குடைவார்த மொருகுளக்கட் கண்மலரோன் றறக்கொடுக்கு
மடைவார்கண் மலர்பலவா முக்குளக்க ணதுகாண்மி
னுடையார்நெஞ் சொருவாத வுலகீன்ற வளமஞ்ஞை
விடைவார்கே தனற்போற்றி விழைந்தல மிதுகாண்மின். (கஎ)

புரகரன்வெங் கரியுரித்துப் போர்த்தியதே மிதுகாண்மின்
வரமிகுமா துலன்வேள்வி மடித்தவிட மதுகாண்மின்
றரமிகுவெஞ் சலந்தரனைச் சாடியதே முதுகாண்மின்
பரவரிகண் ணிடந்துவனை பெற்றபதி யிதுகாண்மின். (கஅ)

நூன்பதுகோ டியர்சித்த ரொருங்குதொழக் கற்பத்தும்
வன்பதுசார்ந் தரசுநிலை மாத்தலமற் றிதுகாணமி
னன்பதும மாநிகொடு நலங்கொள்பதி ஞெருகோடி
யன்பதுவா யுருத்திரரேத் தெடுத்தல மதுகாண்மின். (கக)

---

கஉ. திருவதிகை.
,, திருக்கோவலூர்.
,, திருமாணிகுழி.
,, திருநதினைநகர்.
கங. திருமுதுகுன்றம்.
,, திருப்பாதிரிப்புலியூர்.
கச. சிதம்பரம்.
கரு. சீகாழி.
,, புள்ளிருக்குவேளூர்.
கசு. திருக்குறுக்கை.
,, திருக்கடவூர்.
கஎ. திருவெண்காடு.
,, திருமயிலாடுதுறை.
கஅ. திருவழுவூர்.
,, திருப்பறியலூர்.
,, திருவிற்குடி.
,, திருவீழிமிழலை.
கக. திருவாவடுதுறை.
,, திருவிடைமருதூர்.

பரவுபெரு நதியனைத்தும் பன்னிரண்டாண் டிற்கொருகால்
விரவுதிற மடைந்தாட விழைபுனற்றே மிதுகாண்மின்
கரவுதவிர் திருநந்தி காதலித்துத் தவஞ்செய்தே
யுரவுமிக நினைத்தவெலா முற்றதல மதுகாண்மின். (உ0)

கோழியர்கோ னுளங்களிப்பக் காவிரிநீர் கொளுமாரம்
வாழியநீ ரொடுங்கொண்டார் வாழிடமற் றிதுகாண்மின்
வீழியவா யொருத்திக்காத் தாயுமாய் வியக்கவரு
ளாழியநஞ் சுண்டபிரா னமர்வரைமற் றதுகாண்மின். (உக)

அரதனமா விலங்கலெனை வரைவிலங்க லிதுகாண்மின்
மாகதமா மலையென்ன வழங்குமலை யதுகாண்மி
னூரவியம னதிகாரம் பெற்றதல மிதுகாண்மின்
பாணுமையோ ருருவாகிப் பரிந்தமர்தே மதுகாண்மின். (உஉ)

கடனுகைக் காயாரோ கணரளித்த பரியுகைக்கு
மடலார்குஞ் சரமுகைக்க வருளியதே மிதுகாண்மின்
கெடல்சாரா வரசசபை கெழுமிமுனி வரர்காண
மடலார்கொன் றையர்நடஞ்செய் மாத்தலமற் றதுகாண்மின். (உங)

கொழுவனாயின் சாரமறக் குடித்தவர்தே மிதுகாண்மின்
பொழுதினுற விகள்பூசை புரிந்ததல மதுகாண்மின்
செழுமலரோன் சிரங்கொய்த திப்பியத்தே மதுகாண்மின்
முழுவலிமா றலைவினுனி முருக்கியதே மிதுகாண்மின். (உச)

புண்டரிக முனிவனையா ரோகணஞ்செய் புரப்பெருமா
னண்டர்தொழ வீற்றிருத்தற் காயதல மதுகாண்மின்
பண்டரிய மறையனைத்தும் பூசித்துப் பயன்பெற்ற
வண்டரிக வாப்பொழில்சூழ் வளம்பதிமற் றிதுகாண்மின். (உரு)

பண்டுதச முகற்செகுத்த பழிதீர விராகவன்முன்
மண்டுபெருங் காதலொடு வழிபடுதே மிதுகாண்மின்
விண்டுவனத் திடைப்பிறந்த வெண்முத்தே யெனக்கரைந்து
தொண்டுபடு வார்க்கருளுஞ் சுந்தராவைப் பதுகாண்மின். (உசு)

வனமணக்கு முருவமெனன் மாறிநறுங் கொன்றைதும்பை
யினமணக்கு மருவுருவ மியைந்ததே மிதுகாண்மின்
கனமணக்கு முடிமுதலாக் கைதொழன்மூன் றிடங்கொண்டெம்
மனமணக்கும் படியமரு மால்வரைமற் றதுகாண்மின். (உஎ)

---

உ0. திருக்குடந்தை.
,, திருவையாறு.
உக. திருவானைக்கா.
,, திருச்சிராப்பள்ளி.
உஉ. இரத்தினகிரி.
,, திருவீங்கோய்மலை.
,, ———————

உஉ. திருச்செங்கோடு.
உங. திருவஞ்சைக்களம்.
,, திருப்பேரூர்.
உச. திருக்கற்குடிமாமலை.
,, திருவெறும்பியூர்.
,, திருக்கண்டியூர்.
,, திருவாரூர்.

உரு. திருநாகைக்காரோணம்.
,, வேதாரணியம்.
உசு. இராமேச்சரம்.
,, திருநெல்வேலி.
உஎ. திருக்குற்றாலம்.
,, கொடுங்குன்றம்.

எம்மறையு மொழிந்தார்கை யேட்டெழுத மொழிபெயர்த்தே
யம்மறைசொற் றவருதித்த வருந்தலமற் றதுகாண்மின்
மும்மறையும் புகழ்சைவத் திறமுழங்கு நீருநெருப்
பும்மறையா வெளிப்படுத்தப் பொலிதலமற் றிதுகாண்மின். (உஅ)

தானகக ரத்திறெனாடு சம்பந்தனு செய்தவரை
யானதிரு கண்டிடுமி னழகியபி ரானேயென்
றீனமிலாள் கபோலத்திற் கின்விமுத்த மிடப்பெற்ற
வானவர்கா யகருறையு மாத்தான மதுகாண்மின். (உகூ)

ஆயவச கசப்பெயரா லலங்குதல மதுகாண்மின்
மேயபுகழ்ச் சீதளிசேர் மெய்த்தலமற் றிதுகாண்மின்
றூயதுளை மாலைபுனர் தோளார்தே முதுகாண்மின்
மாயவிடைக் கானைபயில் வன்கான மதுகாண்மின். (௩0)

மாலமையாப் பாசுரத்தங் கியவாய்மற் றதுகாண்மின்
கிலமெனும் பெயர்பூண்டு கிளர்தான மிதுகாண்மின்
சாலவிருத் தேசுரப்பேர் தரித்தார்கண் ணுதுகாண்மின்
கோலமிகுத் தரமுதற்சார் கோசமங்கை யதுகாண்மின். (௩க)

இன்னமுள தலங்களெலா மெடுத்தியம்ப முற்றவதோ
கன்னருள காங்கருதிற் றணித்தாக கண்ணியதா
லன்னதலத் தினையின்னே யடைந்துதொழு தய்வாமென்
றுன்னரிய பெருந்துறைசே ருற்றூர்நூல் கற்றூரே. (௩உ)

தூயபெருந் துறைவலமாச் சூழ்ந்துநிலத் திறங்கினர்
பாயவளங் கண்விடுத்துப் பார்த்தனர்தம் மனந்திகைத்தார்
மேயவிதற் குயர்வொப்பில் விளம்பலா மிதற்கிதுவென்
றூயமகிழ்ச் சியர்முனிவ ரனைவரும்வீ தியிற்பணிந்தார். (௩௩)

கோளுநா ளுந்தவழுங் கோபுரமு னடைந்திறைஞ்சி
யாளுநா யகர்கோயி லுட்புகுந்தக் கினிதிர்த்த
மூளுமா கமவிதியாற் படிந்தெழுந்து முனகர்கொளா
நாளுமா னந்தமருள் வெண்ணீறு நயந்தணிந்தார். (௩௪)

கண்மணிமா லிகைபுனைந்தே யஞ்செழுத்துங் கணித்தாராய்
விண்மணியால் விடலுவக்கு மழகளிற்றின் முனமேவி
யெண்மணியே யொருகோட்டுக் கற்பகமே யெனுமடியார்
வண்மணியே யெனத்துதித்து மலரடிபோற் றுபுசென்றார். (௩ரு)

---

உஅ. திருவாதவூர்.
,, திருவாலவாய்.
உகூ. திருப்பரங்குன்று.
,, திருப்பூவணம்.

௩0. திருவாடானை.
,, திருப்புத்தூர்.
,, திருச்சுழியல்.
,, கானையார்கோயில்.

௩க. திருவேடகம்.
,, திருவாப்பனூர்.
,, திருப்புனவாயில்.[கை.
,, திருவுத்தரகோசமங்

ஆளுடைய பெருமானை யரவமெலா மெடுத்தணியென்
றோளுடைய சுந்தரனைச் சுடர்மூன்று கணிவட்கும்
வாளுடைய மெய்யானை வருமறலி யுயிர்குடித்த
தாளுடைய வான்மநா தனைக்காண்பா னுட்புகுந்தார். (௩௬)

சொக்கவிநா யகர்பாதந் தொழுதுகுருந் தடிநீழன்
மிக்கபொன்னு லாஞ்சபைமுன் விரைந்தேகிக் கண்ணுற்று
ரக்கரவா ரணியான்ம நாயகனை யப்போதத்
தக்கவர்மே வியமகிழ்ச்சி யாமேயோ சாற்றவல்லேம். (௩௭)

இருகணுநோக் குறவிடுத்தா ரிருகைதலை மேற்குவித்தா
ரருகவிலா வரவோமென் றடித்தடித்து வாய்கவின்றார்
பெருகுமுரோ மஞ்சிலிர்த்தார் விழிப்புனலும் பெருக்கினார்
வெருவழல்சார் மெழுகென்ன மிகவுடைந்துள் ளுருகினார். (௩௮)

இந்நாளே பிறந்தபய னெய்தியநா ளெனப்புகல்வா
ரிந்நாளே பசுபோத மிரிந்துயர்ந்த நாளென்பா
ரிந்நாளே கண்படைத்த பேறெய்து நாளென்பா
ரிந்நாளே யின்பமுத்தி யெய்தியநன் னாளென்பார். (௩௯)

அழுவாரு மழுதழுதாங் கன்பினாற் பரவசமாய்
விழுவாரு முடனெழுந்து மேனியுரோ மஞ்சிலிர்ப்பத்
தொழுவாரு நாக்குழறத் துதிப்பாரும் பவக்கடனின்
றெழுவாரு நாமேயென் றிசைப்பாரு மாயினார். (௪௦)

இந்தவிதம் பரவுபூசை நேற்றுநத னைசத்தரித்துப்
பந்தமிலா ரொருவாறு வெளிவந்து பரைதனிசூழ்ந்
தந்தமிலாக் குருந்தடியா சாரியனை யடிவணங்கிச்
சந்தகட ராசர்முத லியாவரையு முறத்தாழ்ந்து. (௪௧)

படைத்தளித்துத் துடைத்துமறைத் தருளலெனப் பகரைந்து
முடைத்தலையிற் பலிகொண்டார்க குடனிருந்து முடித்தருவி
யடைத்தவுல கத்தனைக்கு மாதார மாயெல்லா
முடைத்தனியோ காம்பிகைதன் றிருமுலைமுற் றுருரவோர். (௪௨)

ஆங்குமுன முரைத்தபடி யகநெகக்கும் பிட்டணைந்து
வீங்குபுகழ்த் திருவாத வூரர்முன மேவினார்
நீங்குதலின் மகிழ்ச்சியராய் நெஞ்சுருக கனிதொழுது
தேங்குபெருஞ் சிவயோகச் செழுந்தேறல் வாய்மடுத்தார். (௪௩)

அரிதுபுறம் போந்தொருசா ராச்சிரமஞ் செய்தமர்ந்து
பிரியமிகக் காலங்க டோறும்பேணிப் போய்த்தொழுவார்
விரிதிரைத்தீர்த் தங்களெலாம் விருப்பினொடு படிதருவார்
தெரியமகிழ் வனத்தமருஞ் சிவக்கொழுந்தை யுந்தொழுவார். (௪௪)

ஓயாத முயற்சியரா யிவ்வண்ண முறைதருநாள்
மாயாத பெருங்கீர்த்தி மாணிக்க வாசகர்க்குச்
சாயாத வன்புடையார் தனுமாத விழாவெடுத்தா
ரேயாத வதுதரிசித் திடுவோஞ்சை யுடையவராய். (சரு)

ஆயவா ரோகணமுன் னலங்கவரோ கணமளவு
மேயவுலா விருபோதும் விளங்குறக்கண் டினிதேத்தி
நாயனார் குருந்தடியி னகவருளுந் தரிசனமும்
பாயவிருப் புறப்பெற்றார் பெறப்படுவ தினியென்னே. (சசு)

எல்லாரு மிந்தவித மேத்தியா னந்தமுற்றுச்
சொல்லாருங் குருந்தவனச் சோதிபால் விடைபெற்றுச்
செல்லாரு நைமிசமாந் தம்மிருக்கை யுறச்சேர்ந்தார்
வில்லாரும் புகழ்ச்சூத முனிபூசை மேற்கொள்வார். (சஎ)

அரியபுரா ணந்தாங்க ளறிபாக்கு விரித்துரைத்த
பெரியபுகழ் முனிவரனைப் பிறங்குமா சனத்தேற்றி
யுரியமலர் கந்தமுத லுபகரணம் பலகொண்டு
விரியவருக் கியமாதி விசேடமுறத் தாபித்து. (சஅ)

பரசிவனே யிவனென்னப் பாவித்துப் பூசித்து
வரசன்மா னமுங்கொடுத்து முகமனுரை வழங்கியபின்
விரவுமவன் மாணுக்க ரனைவருக்கு மேதகவிற்
கரவிறகி லாதிகொடைத் தொழிலிரம்பக் கண்டதற்பின். (சகூ)

ஏற்றமிகு சூதமுனி யிருக்கைசெல வுய்த்ததற்பி
னூற்றவவ னருளியவா றுன்மநா தனைக்கருணை
மாற்றரும்யோ காம்பிகையை வாதவூர்ப் பெருமானைத்
தேற்றமுறச் சிந்தித்துத் தெளிந்துவாழ்ந் திருந்தனரால். (ருo)

இத்தகைய புராணத்தை யெழுதுவோ ரெழுதுவிப்போ
ருத்தமமே வெப்படிப்போ ருண்மையுறப் படிப்பிப்போர்
வித்தகமாம் பொருள்கேட்போர் கேட்பிப்போர் விளம்பிவர்கட்
கத்தமெடுத் துதவிடுவோ ராகியமற் றனைவோரும். (ருக)

இம்மையிலே பெருஞ்செல்வ மியையமனை மக்களொடுஞ்
செம்மைபெற வாழ்ந்திருந்திந் திரன்முதலோர் பதங்களெலாம்
வெம்மையற வனுபவித்து முற்றியபின் மேலாய
வம்மையொரு பாலான்பொன் னடிமலர்சார்ந் தின்புறுவார். (ருஉ)

கோயடையார் மிடியடையார் துன்னியர்மே வியசபையின்
வாயடையார் தீயகுண மனையடையார் மாண்பில்லாச்
சேயடையா ரினும்பலவாந் தீங்கடையார் செறிதளிர்பூக்
காயடையார் குருந்தவனப் புராணமது கற்போரே. (ருங)

புண்ணியமார் பெருந்துறைப்பு ராணத்தோர் கவிகற்றோர்
திண்ணியவான் பெருஞ்சைவ சித்தாந்தச் செல்வரா
யண்ணியசித் தாந்தசைவ மடைந்தின்ப நிலைபெறுவார்
நண்ணியமுற் றுந்தெரிவார் நலமுரைக்க வல்லவரியார். (௫௪)

தூயவள மோங்குபெருந் துறைப்புரா ணம்பொறித்த
கேயமலி புத்தகமோர் சிறுமனைவாய் நிலைபெறினு
மாயமனை பெருமனையா வளப்பரிய திருவடையு
மேயபுன்றே வம்மனையூ ரெல்லையினு முறுதன்றே. (௫௫)

வேறு.

வாதவூ ரடிகளுக்குப் புரூரவனேற் படுத்தியவா வளஞ்சால் சாறு
பேதமிலா கமப்படியே நடந்ததுமுன் வைதிகத்தாற் பின்னுண் மாறிற்
றோதவமை யாவதுதெய் வீகத்தா லுணர்ந்திந்நா ளுறத்தா பித்த
போதமலி துறைசையெஞ்சுப் பிரமணிய முனிவர்பிரான் புகழ்மேல் வாழ்க. (௫௬)

தூயதிரு வெண்ணீறுங் கண்மணியு மைந்தெழுத்துஞ் சுரந்து வாழ்க
வாயபெருந் துறைவாழ்க வான்மகா யக்கர்வாழ்க வருள்சூற் கொண்டு
மேயசிவ யோகபரா பரைவாழ்க வாதவூர் விமலர் வாழ்க
நேயமலி யம்பலத்து நடநவிலுங் குஞ்சிதத்தா ணீடு வாழ்க. (௫௭)

நைமிசமுனிவர் பெருந்துறையடைந்து பூசித்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௬௫௭.

---

## திருப்பெருந்துறைப்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# பிழைத்திருத்தம்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧௨ | ௩௫ | ௧ | புளிஞ | புளிஞ |
| ஷை | ௫௩ | ௪ | ளித்த | தளித்த |
| ௩௨ | — | ௧௧ | ஙிகா | ஙியா |
| ௩௮ | ௨௮ | ௧ | த்தி | அத்தி |
| ஷை | ௩௦ | ௨ | முறக | முற்க |
| ௫௪ | ௨ | ௩ | பியம் | மியம் |
| ௫௬ | ௬ | ௩ | கையிலை | கயிலை |
| ஷை | ௧௨ | ௨ | பறைவை | பறவை |
| ௬௦ | ௨௧ | ௩ | கையிலை | கயிலை |
| ௭௭ | ௬ | ௨ | பத்திர | புத்திர |
| ௭௮ | ௧௬ | ௪ | ன்னு | பன்னு |
| ௯௦ | ௪௫ | ௩ | மொழியிஞு | மொழியினு |
| ௯௬ | ௬ | ௪ | மெஞ்ஞா | மெய்ஞ்ஞா |
| ௧௦௧ | ௧௩ | ௩ | உணர்வி | உணவி |
| ௧௧௨ | ௧ | ௩ | ரிபை | ரின்ப |
| ௧௧௪ | ௧௬ | ௪ | யந்த | பந்த |
| ௧௨௫ | ௫௫ | ௩ | காற் | கால் |
| ௧௨௬ | ௬௦ | ௨ | புணர்த | யுணர்த |
| ௧௫௦ | ௪௬ | ௨ | மர்றன் | மாறன் |
| ௧௫௩ | ௬௬ | ௨ | முழுமதி | முதுமதி |
| ௧௬௪ | ௧௮ | ௨ | மூத்திர | மூத்தர |
| ௧௭௧ | ௭௬ | ௪ | நெடுங்க | நெருங்க |
| ௧௭௨ | ௮௫ | ௪ | போக்தார | போக்தார் |
| ௧௮௪ | ௪௦ | ௨ | யரினுக் | யரினுங் |
| ௧௯௧ | ௨௭ | ௨ | காண்மிண் | காண்மின் |

சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்

தமிழ்த் தாய் 67 - வெளியீடு

ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றிய

# திருப்பெருந்துறைப் புராணம்



Pub No : 859
ISBN : 978-93-85165-14-6
திருப்பெருந்துறைப் புராணம்
130.00